காசிவாசி செந்திநாதையரின்

# சிவஞானபோத வசனாலங்கார தீபம்



க. வச்சிரவேல் முதலியார் அவர்கள்
புதுப்பித்த பதிப்பு

அருள்நந்திசிவம் அருட்பணி மன்றம்

78, செல்விநகர், சிந்துபூந்துறை,
திருநெல்வேலி-627001.

காசிவாசி செந்திநாதையரின்

# வஞான போத வசனாலங்கார தீபம்

அன்பளிப்பு:

**தஞ்சாவூர்**

**நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T**

திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்களால்
சிவஞான போத உரை நடை விளக்கம்
என்ற தலைப்புடன் புதுப்பிக்கப்பட்டது.



மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் அனுமதியுடன்
வெளியிடப் பெறுகிறது.

அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்
78, செல்வி நகர், சிந்துபூந்துறை,
திருநெல்வேலி-627 001.

விலை ரூ 40

புதுப்பிக்கப்பட்ட முதற் பதிப்பு ஏப்பிரல் 1996

உரிமை : மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
பல்கலைநகர், மதுரை - 625 021.

வெளியீடு எண் : 21

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the book | : | Sivagnana Botha Vacanalankara Deepam |
| Author | : | Kasivasi Senthinathier (Revised by K. Vajravel Mudaliar) |
| Publisher | : | S. Chithambaranatha Kalyani<br>Arulnandhisivam Arutpani Manram<br>Tirunelveli 627 001 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | April 1996 |
| Size of the book | : | 21×14 CMS |
| Printing types used | : | 10 Point |
| Number or copies | : | 600 |
| Number of pages | : | xiv+158 |
| Printers | : | Rexy Printers<br>Tirunelveli-627 001 |
| Binding | : | Pulp Board |
| Subject | : | A Saiva Siddhantha Philosophical work |

72-1

# பதிப்புரை

தமிழ்நாட்டில் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பரப்புவதில் பல பெருமக்கள் அருந்தொண்டாற்றினர். அவர்களுள் ஒருவர் காசிவாசி செந்திநாதையர் அவர்கள். இந்த நூற்றாண்டில் முதல் இருபது ஆண்டுகளில் பல நூல்களை எழுதி வெளியிட்டு சித்தாந்தப் பணியாற்றினார். இவற்றுள் சிவஞான போத வசனாலங்கார தீபம் சிறப்பிடம் பெறுகிறது. மாதவச் சிவஞான முனிவரின் சிவஞான மாபாடியம் வெளி வராத குறையை இந்த நூல் ஓரளவு போக்கிற்று.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்தத் துறையில் சிறப்பு அலுவலராகப் பணியாற்றி வந்தபோது சைவ சித்தாந்தப் பேரறிஞர் திருமிகு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் வசனாலங்கார தீபத்தை எளிமைப் படுத்தி எழுதி வைத்திருந்தார்கள். 'சிவஞான போத உரை நடை விளக்கம்' என்ற தலைப்பில் அவர்கள் எழுதி வைத்திருந்த நூலே இப்போது எங்கள் மன்றத்தால் வெளியிடப் பெறுகிறது.

இந்த நூலை வெளியிடுவதற்கு அனுமதி தந்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேரா. திரு. கு ஆளுடையபிள்ளை அவர்களுக்கும், சைவ சித்தாந்தத் துறையின் பேராசிரியர்கள் முனைவர் திரு. ச. கங்காதரன், முனைவர் திரு. ஆ ஆனந்தராசன் ஆகியோர்க்கும் ஆட்சிக் குழு உறுப்பினர்களுக்கும் எங்கள் நன்றி உரியது பதிப்பு வேலைகளில் உறுதுணையாக இருந்த பாளையங்கோட்டை திரு. சி.சு. மணி அவர்களுக்கும் எங்கள் நன்றி

20–3–96
திருநெல்வேலி.

S. சிதம்பரநாத கல்யாணி
தலைவர்
அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்.

# நூலும் நூலாசிரியரும்

சி. சு. மணி

மெய்கண்டாரின் சிவஞான போதம் இயற்றப்பட்ட காலம் கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டு என்று வரலாற்று ஆசிரியர்கள் வரையறுத்துள்ளனர். திட்பமும் நுட்பமும் மிக்க இந்நூலுக்கு மெய்கண்டாரின் காலத்திலேயே உரையும் விளக்கமும் தேவைப் பட்டன. ஆசிரியர் அருள் நந்தி சிவம் இயற்றிய சிவஞான சித்தியார் இத்தேவையை நிறைவு செய்யவே எழுந்தது எனலாம். சிவஞான சித்தியார், சிவஞான போதத்திற்குச் செய்யுள் நடையில் இயற்றப் பட்ட விளக்கமே அதுவே முதலாவது உரை நூலுமாகும். அதன் பின்னர் பல விளக்கவுரைகள் தோன்றின.

பாண்டிப் பெருமாள் விருத்தியுரை என்ற நூல் சிவஞான போதத்திற்கு உரைநடையில் அமைந்த விரிவான விளக்கமாகும். இதனைத் தவிர மற்றொரு உரைநூலும் வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது

மாதவச் சிவஞான முனிவர் இயற்றிய பேருரையும் சிற்றுரையும் சிவஞான போதத்திற்குக் கிடைத்த மிக அருமையான உரை நூல்கள் மாதவச் சிவஞான முனிவர் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே இவ்வுரைகளை வகுத்தார். எனினும் சிவஞான முனிவரின் பேருரை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத் தில்தான் முதன் முதல் அச்சில் பதிக்கப்பட்டு வெளி வந்தது அது வரையில் சிவஞான மாபாடியமாகிய பேருரை மிகுந்த அக்கறையுடன் இரகசியமாகவே பாதுகாக்கப்பட்டு வந்தது.

முதன்முதலாக 1906-ம் ஆண்டு மாதவச் சிவஞான முனிவரின் திரவிட மாபாடியம் வெளியாயிற்று அதே ஆண்டில் இரண்டு பதிப்புக்கள் வெளிவந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது. இவற்றுள் ஒன்று மதுரை திரு ராமசாமிப் பிள்ளை என்பவரால் வெளியிடப் பெற்றது. மற்றொன்று யாழ்ப்பாணத்து வண்ணைநகர் சுவாமிநாத பண்டிதரால் சென்னை சைவ வித்தியாநுபாலன யந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது. பதிப்பித்த ஆண்டு பராபவ ஆண்டு ஆகும். இப்பதிப்பும் முழுமையான மாபாடியப் பதிப்பு அன்று என்பதைப் பதிப்பாசிரியரே குறிப்பிட்டுள்ளார்.

மதுரையிலிருந்து வெளியான சிவஞான மாபாடியமும் இத்தகைய முழுமை பெறாத பதிப்பாகவே அமைந்துள்ளது. பராபவ ஆண்டு மார்கழி மாதம் எட்டாம் நாள் வெளிவந்த (22-12-1906)

'இந்தியா' என்னும் வார இதழில் மதுரையில் இருந்து வெளிவந்த சிவஞான மாபாடியத்துக்கு ஒரு மதிப்புரை வெளியிடப்பட்டுள்ளது. 'இந்தியா' வார இதழின் ஆசிரியராக விளங்கியவர் பெருங்கவிஞர் சி. சுப்பிரமணிய பாரதியார். இந்த மதிப்புரையும் அவர் எழுதியதே ஆகும். அது பின்வருமாறு :

**சிவஞான பாஷ்யம்**

''இப்புத்தகத்தை நாம் மிகுந்த ஆவலுடன் படித்தோம். மதுரை விவேக பானு ஆபீஸில் இருந்து நமக்கு அனுப்பப்பட்டது. தமிழிலே நல்ல பழக்கமுடைய எல்லோரும் நெடுங்காலமாக இது எப்போது வெளியாகுமோ என்று, யூத சாதியார் மேசையாவின் வரவுக்குக் காத்திருப்பது போலக் காத்துக் கொண்டிருந்தார்கள். ... இந்த நூல் நாம் எதிர்ப்பார்த்திருந்ததற்குச் சிறிதேனும் பெருமையிலே குறைவு படாது விளங்குகிறது. இன்னும் சில பகுதிகள் பிரசுரித்தோர்க்குக் கிடையாமல் போய்விட்டமை பற்றி விசனமுறுகின்றேம்.''



இந்தச் சூழ்நிலையில் சைவ சித்தாந்தம் பற்றி அறிந்திருந்த தமிழர்கள் நடுவே மாதவச் சிவஞான முனிவரின் மாபாடியம் முழுமையாக வெளி வரவேண்டும் என்ற பேரார்வம் மிகுந்திருந்தது. அது போன்றே மெய்கண்டாரின் சிவஞான போதந்தைச் சிக்கறக் கற்றுத் தெளிய வேண்டும் என்ற ஆர்வமும் மிகுந்திருந்தது.

இதற்கிடையில் காசி வாசி செந்திநாத ஐயர் அவர்களின் சிவஞான போத வசனுலங்கார தீபம் என்னும் நூல் 1917-ல் வெளி வந்தது. வெளி வந்த ஆண்டு நள ஆண்டாகும். இந்த நூலின் முன்னுரையில் ''யாம் பெரும்பான்மையும் மாதவச் சிவஞான யோகிகள் உரைத்தருளிய உரையைத் தொடர்ந்தே இதனை எழுதினோம்'' என்று செந்திநாதையர் குறிப்பிட்டுள்ளார்

சிவஞான போத வசனுலங்கார தீபத்தில் ''கத்திய ரூபச் சிறப்புப் பாயிரம்'' (உரை நடைச் சிறப்புப் பாயிரம்) என்ற பகுதி அமைந்துள்ளது. அதனுள் தருமபுர ஆதீனத்து அடியார்களுள் ஒருவராகிய சொக்கலிங்கத் தம்பிரான், திரு. J M. நல்லுசாமிப் பிள்ளை, திரு கலியாண சுந்தர யதீந்திரர், திரு அருணகிரி முதலியார் ஆகியோர் எழுதிய சிறப்புப் பாயிரங்கள் இடம் பெற்றுள்ளன. இவர்களுள் திரு கலியாண சுந்தர யதீந்திரர் ''இச்சாஸ்திரத்துக்கு மாதவச் சிவஞான யோகிகள் ஒரு சிற்றுரையும் பேருரையாகிய பாடியமும் எழுதி வைத்தனர். இவை இரண்டும் விஸ்தாரமான பரிபாஷாக் கலப்பால் இருத்தலினுலே .... யாவரும் எளிதில் கற்று

வைதிக சைவ சித்தாந்த உண்மை அறிந்து உய்தற் பொருட்டு'' இந்நூல் எழுந்தது என்று குறிப்பிடுகின்றார். திரு அருணகிரி முதலியார் ''வசன நடையில் யாவரும் எளிதில் உணருமாறு'' இந்நூல் இயற்றப்பட்டது என்று குறிப்பிடுகின்றார்.

செந்திநாதையர் அவர்கள் மெய்கண்ட தேவ நாயனாரின் சிவஞான போதத்தில் உள்ள நூற்பாக்களை மட்டும் இந்நூலில் தந்துள்ளார் சிவஞான போதத்தின் பகுதிகளாகவும் மெய்கண்டாரால் இயற்றப் பட்டனவாகவும் கொள்ளப்படுகிற மேற்கோள், ஏது, எடுத்துக்காட்டுகள் முதலியன இந்நூலாசிரியரால் தரப்படவில்லை. இந்தச் செய்தியையும் காசி வாசி செந்திநாத ஐயர் தமது முன்னுரையிலே குறிப்பிட்டுள்ளார், ''அதிகரணத்துள்ள மேற்கோள், ஏது முதலியவற்றின் பொருளை பொல்லாப்பிள்ளையார் அருளிய ஒவ்வோர் சூர்ணிகையின் பொருளாக அடக்கி வரைந்து. திருஷ்டாந்தமாகப் போந்த வெண்பாக்களின் பொருளையும் எழுதி விளக்கியும் சுருக்கியும் விரித்தும் உரைத்துள்ள''தாகக் குறிப்பிடுகின்றார்.

எளிமையான உரைநடையில் யாவரும் அறிந்து கொள்ளும் பொருட்டு இயற்றப்பட்ட இந்நூல் இக்காலத் தமிழ் நடையோடு ஒப்பிடும் போது பலராலும் புரிந்து கொள்ள இயலாத கடின நடையில் உள்ளதாகவே கருதப்பெறும். எவ்வாறு இருந்தாலும் சிவஞான போதத்தை விளக்கமான உரைநடையில் மக்களிடையே பரவச் செய்ய வேண்டும் என்ற கருத்தில் முதன் முதலாக எழுதப் பட்ட பெருமை இந்நூலுக்கு உண்டு.

## காசிவாசி செந்திநாதையர் :

இந்நூலாசிரியராகிய காசிவாசி செந்தநாதையர் அவர்கள் ஈழ நாட்டில் பிறந்தவர். யாழ்ப்பாணத்துக்கு அருகில் உள்ள மாவிட்டபுரம் இவர் பிறந்த ஊராகும். மாவிட்டபுரத்தில் உள்ள முருகப்பெருமான் திருக்கோயில் ஈழநாட்டில் மிகவும் புகழ்பெற்றது.

இவருடைய வாழ்க்கை வரலாறு மிக விரிவாக அறியப்பட வில்லை. செந்திநாதையர் அவர்கள் ''யசுர் சாகையினரும் காசிப கோத்திரத்தினரும் ஆபத்தப்ப சூத்திரத்தினரும் ஆவார்'' என்று சூரியனார் கோயில் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ, முத்துக்குமாரதேசிகர், •தேவாரம் வேதசாரம்' என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரத் தில் குறிப்பிடுகின்றார். அதே நூலுக்கு யாழ்ப்பாணத்து வண்ணைநகர் சுவாமிநாத பண்டிதர் எழுதிய சிறப்புப் பாயிரத்தில் ''இருமொழி யிலும் வல்லுநராய் ஆங்கிலமும் பயின்று சுவமத ஸ்தாபனமும் புற

மத நிராகரணமும் செய்தலிற்றனே தம் காலம் கருத்து முதலியவற்றைப் போக்குகின்ற காசிவாசி செந்திநாதையர் அவர்கள்'' என்று எழுதியுள்ளார்.

ஈழநாட்டின் மாவிட்டபுரத்தில் தோன்றிய செந்திநாதையர் சில ஆண்டுகளேனும் காசி நகரில் தங்கியிருந்தார் என்று கொள்ளுவதற்கு இடமுண்டு. அதன் பின்னர் மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில் தங்கியிருந்து சைவ சித்தாந்தத் தொண்டு புரிந்து வந்தார் என்றும் தெரிகிறது

காசிவாசி செந்திநாதையர் அவர்கள் பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் நீலகண்ட மாபாடியத்துக்கு அவர் இயற்றிய தமிழ் மொழி பெயர்ப்பு மிகச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. ஏகான்மவாதக் கொள்கையைக் கண்டித்து 'மகா உக்கிர வீரபத்திர அஸ்திரம்' என்ற நூலையும் அவர் இயற்றியுள்ளார். அவர் எழுதிய 'தேவாரம் வேதசாரம்' என்ற நூலில் வேதம் ஆகமம் இதிகாசம் புராணம் ஆகியவற்றில் வருகின்ற கருத்துக்கள் தேவாரம் முதலிய திருமுறைகளிலும் பொதிந்து கிடக்கின்றன என்பதையும் நிறுவியுள்ளார். இந்நூலில் வடமொழி மேற்கோள்கள் கிரந்த எழுத்துக்களிலும் தமிழ் எழுத்துக்களிலும் தரப்பட்டு அவ்வப் பகுதியின் மொழி பெயர்ப்பும் ஆசிரியரால் தரப்பட்டுள்ளன. இவற்றை அடுத்து இயைந்த திருமுறைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவ்வகையில் தமிழில் எழுந்த நூல் இது ஒன்றே என்று கூறலாம். இவை தவிர சிவலிங்க மகத்துவம், திருநீற்றின் உண்மை முதலிய சிறுசிறு நூல்களையும் இவர் இயற்றி வெளியிட்டுள்ளார்.

செந்திநாதையர் அவர்கள் கையாண்ட தமிழ்நடை மிகுதியும் வடமொழிக் கலப்பு உடையதாக இருந்தது சிவஞான போத வசனாலங்கார தீப நூலின் அமைப்பும் வினாவிடை வடிவில் அமைந்திருந்தது. முதலில் பத்தி எண் கொடுத்து விடைகள் தரப்பட்டிருந்தன அதனைத் தொடர்ந்து வரிசையாக வினாக்கள் இடம் பெற்றன. வினாக்களின் இறுதியில் நக வளைவுக்குள் விடைக்கான பத்தி எண்கள் தரப்பட்டிருந்தன. இவ்வமைப்புகளை சற்றே மாற்றி சைவ சித்தாந்தப் பேரறிஞர் திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் எழுதிய நூலே இப்போது பதிப்பிக்கப்பட்டுள்ளது.

---

# திரு. க. வச்சிரவேலனார்

டாக்டர். ச கங்காதரன்

சான்றோர் உடைய தொண்டை நாட்டின் தலைநகராகத் திகழும் காஞ்சிமாநகர் முத்தி தரும் தலங்கள் ஏழனுள் முக்கியமாகக் கருதப்பெறுகிறது. 'கலிகெழு காஞ்சி' என்று சங்க இலக்கியத்தில் புகழப்பெற்றது. காசியை விட ஒரு இன்ஞ்(ஞ்) சிறந்தது காஞ்சி என்று திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களால் புகழப்பெற்றது. இத்தகு காஞ்சி மாநகரில் சைவப் புகழ் நிரம்பிய சைவக்குடியில் 24—5—1906ல் திருமிகு. வச்சிரவேலனார் அவர்கள் தோன்றினார்கள்.

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் கற்றுப் பின் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் 1929ல் B.A. பட்டம் பெற்றார். 1932ல் L.T. பட்டம் பெற்றார். 1930ல் இருந்து 1960 வரை காஞ்சி பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளியில் உதவி ஆசிரியராக இருந்து, பின் அதன் தலைமை ஆசிரியராக 6 ஆண்டுகள் பணி செய்து. 1966ல் ஓய்வு பெற்றார். 1964ல் நல்லாசிரியர் எனக் குடியரசுத் தலைவர் விருது பெற்றார்.

1923ல் முறையாக திருப்பாதிரிப்புலியூர் திருப்பெருந்திரு. ஞானியார் சுவாமிகளிடம் சிவஞான போதச் சிற்றுரையைக் காஞ்சி புரத்தில் கேட்கத் தொடங்கி சொந்த முயற்சியாலும் பெரியவர்கள் கூட்டுறவாலும் சைவ சாத்திரங்களிலும் இலக்கியங்களிலும் பயின்று, மேன்மை அடைந்தார்.

1944 நவம்பர் முதல் 1946 ஜூன் வரை திருவாவடுதுறை, தருமபுரம் ஆதீனங்களால் மயிலாடுதுறையில் நடத்தப்பெற்ற மெய்கண்டார் கல்லூரியில் முதல்வராகப் பணி செய்தார். எல்லா ஆதீனங்களுடனும், சென்னை சைவசித்தாந்தப் பெருமன்றத்துடனும் நெருங்கிய தொடர்புடையவராய்த் திகழ்ந்தார். 1969 முதல் 1975 செப்டம்பர் வரை திருவாவடுதுறை ஆதீன வித்துவானாக இருந்து, திருமடத்தின் பல்வகை சாத்திரப்பணிகளுக்கு உறுதுணையாக இருந்தார். 1975 செப்டம்பர் 29 ஆம் தேதியில் இருந்து 1981 ஆம் ஆண்டு வரை மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த தத்துவத் துறையின் தனி அலுவலராகப் (Special Officer) பணிசெய்து பல்கலைக் கழகப்பணிக்கு அணி செய்தார்.

திரு. க. வச்சிரவேலனார் கலந்துகொண்ட சைவசித்தாந்த மாநாடுகள் பல. அவரிடம் பயின்று பழகிய மாணவர்கள் பலர். அவர்களுள் அண்மையில் சிவபிரான் திருவடி அடைந்த குன்றக்குடி

அடிகளார் முக்கியமானவர். தம் ஆசிரியர் திரு. க. வ. அவர்கட்காக குன்றக்குடி அடிகளார் தருமபுரத்தில் மாணவராக இருந்த போது திருமடத்தின் நடைமுறைகளையும் மீறி, தம் ஆசிரியருக்கு மரியாதை செய்தது, அதற்காக அடிகளார் பட்ட துன்பங்கள் ஆகியவற்றை திரு. பொன்னீலன் அவர்கள் அடிகளாரின் வரலாற்று நூலில் குறிக்கிறார்.

தமிழரின் வாழ்வியல் சட்டத்தைத் திருக்குறள் நமக்கு அளிக்கிறது. திருக்குறள் பொதுமறை என்பதை ஏற்று, அதன் உட்கிடையாகப் பழந்தமிழர் போற்றிய இந்நாட்டிற்குரிய மெய்ந்நெறியும் ஒழுக்கநெறியும் அமைந்துள்ளன எனும் கருத்தை 'திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே' எனும் தலைப்பில் 1951ல் சீகாழிப்பதியில் பிரமபுரீசர் திருக்கோயிலில் சொற்பொழிவு வடிவில் திரு. க. வ. அவர்கள் வெளியிட்டார். இதனை அறிந்த மதுரை ஆதீன கர்த்தர் (தற்போது இருப்பவர்க்கு முன் இருந்த சீர் வளர் சீர் சோம சுந்தர தேசிகர்) 1953ல் திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே எனும் நூலை முதல் பதிப்பாக வெளியிட்டார். டாக்டர். தமிழண்ணல் அவர்கள் முயற்சியால் இந்நூல் 4—1—1979ல் இரண்டாம் பதிப்பாகச் சில மாற்றங்களுடன் வெளியிடப்பட்டது. இந்நூலில் சிவநெறி அடிப்படைகளும் பிறநெறி அடிப்படைகளும் செவ்வனே விளக்கப் பெற்றுள்ளன. ''விவாத முறையில் ஒவ்வொன்றையும் ஆய்ந்து ஒரு முடிவுக்கு இட்டுச் செல்லும் ஆராய்ச்சி நெறிக்காக ஒரு முறையும், தமிழர்களின் பழஞ்சமயமாகிய சிவநெறியின் அடிப்படைகளைப் புரிந்து கொள்வதற்காக ஒரு முறையும், உலகப் பொதுமறையாகிய அப்பழந்தமிழ் நூலில் தமிழர்க்குரிய நாகரிகப் பண்பாட்டு அடிப்படைக் கூறுகள் அடிநாதமாய்க் கிடப்பது முரணாகாது என உணர்தற்காக ஒருமுறையும் எனப் பன்முறை கற்கத் தகுவது இந்நூல்'' என டாக்டர். தமிழண்ணல் அவர்கள் இந்நூலின் மதிப்புரையில் கூறுகிறார். ''சைவசித்தாந்த நூல்களில் பழகினும் பல்கால் தெரியலாகாத சித்தாந்த நுண் பொருள்கள் பலவற்றை இந்நூலால் எளிது உணரலாகும். சித்தாந்த நூற் குறியீட்டுச் சொற்களில் வடசொற்களாக உள்ள பலசொற்கள் இந்நூலில் தமிழ்ச்சொற்களாக்கப் பட்டிருக்கின்றன'' என மகா வித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார் கருத்துரை அளிக்கிறார்.

திரு. க. வ. அவர்கள் நிறைந்த தமிழ்ப்பற்று மிக்கவர்கள். சிவஞானபோதம் தனித்தமிழ்நூல் எனும் கருத்துடையவர்கள். சிவஞானபோதத்தின் தனித்தன்மையை நிலை நாட்டுதற்கு இந்திய தத்துவப் பின்னணியில் பார்க்க வேண்டும், அதற்கு வடமொழியில்

உள்ள சாத்திர நூல்களைப் பயிலுதல் அவசியம். வடமொழி நூல்களைப் பயிலும் போதும் தமிழ் மரபை நாட மனதில் நிலை நிறுத்திக் கொண்டு பயில வேண்டும் என்னும் நினைவுடையவர்கள் திரு. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் திரு. க. வ. அவர்கள் வடமொழியில் உள்ள குறியீட்டுச் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்கள் கண்டவர்களில் முதன்மையானவர் எனக் கூறுவர். 'சத்' என்ற வடமொழிச்சொல்லுக்கு 'செம்பொருள்' என்பது நேர்தமிழ்ச் சொல் என்பது திரு. க. வ. அவர்களின் கொடை.

திரு. க. வ. அவர்கள் அஞ்சாமையை இயல்பாக உடையவர், சிறந்த பேச்சாளர். பொதுக்கூட்டத்தில் ஒருமுறை மாணவர்கட்கு உரையாற்றும்போது திருக்குறள், தேவாரம், திருவாசகம் போன்ற நூல்களைப் படித்து. வாழ்வைச் செம்மைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கூறினார். அதே மேடையில் இருந்த அப்போதைய சட்டமன்ற உறுப்பினர், இராசகோபால் 'திருக்குறள் மட்டும் போதும் தேவார திருவாசகங்கள் தேவையில்லை' என்று கூறி, அவர் வெளியே செல்ல முற்பட்டார். அவரைச் சிறிதுநேரம் இருக்க வைத்து, தேவார. திருவாசகம் எவ்வாறு திருக்குறளின் தருக்க இயல் விளக்கமாக அமைகின்றன என்பதை மாணவர்கள் மனங்கொள்ளும் வகையில் திரு. க. வ. அவர்கள் விளக்கினார். இதைக்கேட்டுக் கொண்டிருந்த அன்பர் ஒருவர் முதல் அமைச்சராக இருந்த அண்ணாவிடம் கூறிய போது, திரு. க. வ. போன்ற பெரியவர்களின் பேச்சுக்கு மறுப்புத் தெரிவிப்பது நல்லதல்ல என்று அவர் கூறினார்.

அண்ணாவால்தான் காஞ்சிநகர் பெருமைபெறுகிறது என்று சிலர் கூறியபோது, திக்நாகர், தருமபாலர், பரிமேலழகர் போன்ற பல அறிஞர்களைப் பழங்காலத்தில் உடையது, அத்துடன் தான் மட்டும் அல்லாமல் திரு. க. வ. திரு. சி. அருணைவடிவேல் முதலியார் முதலிய பெருமக்களால் தற்போதும் பெருமை பெற்றுக்கொண்டிருக்கிறது என்றும் அண்ணா அவர்கள் கூறினார்கள்.

திரு. க. வ. அவர்கள் உண்மையான பத்தி தேவை என்று வற்புறுத்தும் அதே நேரத்தில் விஞ்ஞான உண்மைகளை மதிக்கும் பத்தியே சிறந்தது என்ற கருத்துடையவர். திருவாவடுதுறை மடத்தில் தங்கியிருந்தபோது வேம்பு ஒன்று அசாதாரணமாக இருக்கிறது. இதை வழிபடவேண்டும் என்று விரும்பி, சிலர் வழிபாடுகள் நடத்த முற்பட்டபோது, இது நோயுள்ள மரம், இதை வழிபட வேண்டிய அவசியம் இல்லை, 'ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்' என்று பத்தியின் உண்மையான தன்மையை விளக்கினார்.

காசிப்பல்கலைக் கழகத்திலும் அலகாபாத் பல்கலைக் கழகத்திலும் திரு. க. வ. அவர்களின் பேச்சு வடமொழி அறிஞர்களையும் கவர்ந்தது என்று அப்போது தத்துவத் துறையில் பணியாற்றிய அமரர் டாக்டர். சிவராமன் கூறியுள்ளார். திருவருட் பயன் எனும் சாத்திர நூலுக்குப் பொழிப்புரையை இலங்கையில் தம் சொற்பொழிவு நிகழ்ச்சிகளுக்கிடையில் மூன்றே நாள்களில் திரு க. வ. அவர்கள் எழுத, சான்றோர்கள் இலங்கையில் வெளியிட்டனர். பிறகு நிரம்ப அழகிய தேசிகர் உரை திரு. க. வ. அவர்கள் குறிப்புரையுடன் திருவாவடுதுறை ஆதீனச் சார்பாக இரண்டாம் பதிப்பாக வெளியிடப்பட்டது.

திருவுந்தியார் மூலப்பதிப்பு முதன்முதல் 1866ல் திரிசிரபுரம் மதுரை நாயகம் பிள்ளையால் சென்னை இலைசியம் அச்சகத்தால் வெளியிடப்பட்டது. தில்லைச் சிற்றம்பலவனார் என்னும் சிவப்பிரகாசர் உரை கொ. சண்முகசுந்தர முதலியாரால் 1874ல் வெளியிடப்பட்டது. காஞ்சி ஆலால சுந்தரம் பிள்ளை இலக்கணம் முத்துக்குமாரசாமித்தம்பிரான் ஆகியவர்கள் தனித்தனியே இந் நூலுக்கு உரைவரைந்தனர். காலத்தால் முந்தியதாகிய பொழிப்புரை 1940ல் சைவசித்தாந்தப் பெருமன்றத்தால் வெளியிடப்பட்டது. இவ்வுரைகளை ஆய்ந்து திருவுந்தியாருக்கு திரு. க. வ. அவர்கள் எழுதிய உரை சைவசித்தாந்தப் பெருமன்றத்தினரால் வெளியிடப்பட்டது. திரு. க. வ. அவர்களின் பதிப்பு நூல் முழுமையும் பின்வந்த மெய்கண்ட பொருட் பாகுபாட்டினுள் திருவுந்தியாரை அமைத்து விளக்கும் சிறப்புடையது.

திருமந்திரம் 9 ஆம் தந்திரத்து விளக்கவுரை திரு. க. வ. அவர்களால் திருவாவடுதுறை ஆதீன வெளியீடாக வெளியிடப்பட்டது. இந்நூலில் சைவசித்தாந்த உண்மைகளை நடைமுறை வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டியதன் அவசியத்தை உணர்த்துகிறார். சைவம் என்ற பழநி தேவத்தானம் வெளியிட்ட நூலும் (சைவமும் வைணவமும் என்ற தொகுப்பில் முற்பகுதி), திருக்குற்றாலத் தல புராண உரையும் இவர்தம் சைவசித்தாந்த நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டும். டாக்டர். மு. வ. அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தபோது சொர்ணாம்பாள் அறக்கட்டளைச் சொற்பொழிவு திரு. க. வ. அவர்களால் நிகழ்த்தப்பட்டது. இது பின்னர் 'திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி' என்னும் தலைப்பில் திரு. நா. ப. தணிகை அரசு அவர்கள் முயற்சியால் வெளியிடப்பட்டது.

மதுரையில் திரு. க. வ. அவர்கள் வாழ்ந்தபோது அவருடன் நெருங்கிப் பழகும் பேறு அடியேனுக்குக் கிட்டியது. பல மன்றங்கள்

அவர் புலமையைத் தங்கள் நிகழ்ச்சிகள் மூலம் பணிகொண்டன. பொருளை வேண்டாது, அமைப்பாளர் விரும்பிக் கொடுக்கும் தொகையை மனமுவந்து பெற்றுக்கொள்ளும் பழக்கம் உடையவர் திரு. க. வ. அவர்கள். 1979ல் திருவாவடுதுறை ஆதீனமும் மதுரை காமராசர் பல்கலைக் கழகமும் இணைந்து வேனில் வகுப்பு நடத்தின. அவ்வகுப்பில் திரு. க. வ. அவர்கள் கல்லூரி, உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கட்காக திருவருட்பயன், சில தேவார திருப்பதிகங்கள் ஆகியவற்றை விளக்கி உரையாற்றினார்.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆதரவால் மூன்று வார வேனில் வகுப்பு திரு.க.வ. அவர்கள் தனி அலுவலராக இருந்தபோது நடத்தப்பட்டது. இவ்வகுப்பில் திரு. வச்சிரவேலர் அவர்கள் இயக்குநராக இருந்து, பேராசிரியர் வெள்ளைவாரணனார், திரு. ந. இரா. முருகவேள், ஈழநாட்டுத் தத்துவப் பேராசிரியர் டாக்டர் இராமகிருஷ்ணன் ஆகியவர்களைக் கொண்டு சிவஞானபாடியம் சிறப்பாக நடத்தியமை குறிப்பிடத்தக்கது. தென்னகத்தின் பல பகுதிகளிலிருந்து அறிஞர்கள் இவ்வகுப்பில் கலந்து பயன் பெற்றனர்.

சிவஞான மாபாடியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தது இவரது நிலைத்த பெரும்பணியாகும். இந்நூல் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தால் 1985 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. சிவஞான மாபாடியத்தின் பொருள் நிலையைத் தெரிந்து கொள்ள இந்நூல் ஒரு பேருதவியாகும். சைவசித்தாந்தப் புலமை. தருக்க இயல் வன்மை இந்திய தத்துவ நூலறிவு, இலக்கண நுட்பம், வடமொழி நூலறிவு முதலியவற்றை இந்நூலில் கண்டு மகிழலாம்.

பல திருமடங்களில் ஆதீன வித்துவானாகவும், சித்தாந்தக் கலைச் செல்வராகவும் திகழ்ந்த திரு. க. வச்சிரவேலனார் அவர்கள் 10—3—1989ல் இவ்வுலக வாழ்வை நீத்து, சிவபெருமான் திருவடியில் நண்ணரிய சிவானந்த வாழ்வைப் பெற்றார்.

திருச்சிற்றம்பலம்

---

# முன்னுரை

சிவஞானபோத வசனலங்கார தீபம் என்பது 1917-ம் ஆண்டில் நம் தமிழகத்தில் வடமொழி தென்மொழி என்னும் இரண்டையும் உணர்ந்து சைவ சித்தாந்த நுண்பொருள்களை நன்கு உணர்ந்த செந்திநாதையர் என்னும் பெரியவரால் இயற்றப் பெற்ற அரியதொரு நூல். அது சிவஞான போதம் கற்று உணர்வோர்க்குப் பெரிதும் துணை செய்வதாக உள்ளது. அதில் சில பல மாற்றங்களுடன் இப்பதிப்பு செய்யப்படுகிறது.

**மாற்றங்கள்**

அவர் பெரும்பாலும் வடமொழிச் சந்தி பற்றிச் சொற்றொடர்களை எழுதியுள்ளார் ஆதலினால் அஃது இக்காலத்து உள்ளோர்க்குப் பொருள் விளங்குவதன்று ஆதலினால் அவர் கொடுத்துள்ள வட சொற்களுக்குப் பதில் தமிழ்ச் சொற்கள் பயன் படுத்தப் பட்டுள்ளன.

அவர் ஒவ்வொரு வாக்கியத்தையும் ஒவ்வொரு பத்தியாகக் கருதித் தமிழ் எண்கள் கொடுத்துள்ளார். அவ்வாறு கொடுத்ததன் நோக்கம் ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அவர் கொடுத்துள்ள வினாக்களுக்கு விடையைக் குறிப்பாக உணர்த்துவதே ஆகும். அவ் வினாக்கள் நூலின் மூன்றில் ஒரு பாகமாக அமைந்து வருதலின் அவை இப்பதிப்பில் நீக்கப்பட்டன. ஆதலின் அவர் கொடுத்துள்ள, மீள் பார்வைக்கு உதவும் எண்களும் நீக்கப்பட்டுள்ளன. வேறு வகையில் அவர் கருத்துக்களோ, விளக்கங்களோ, மேற்கோள்களோ சிறிதும் மாற்றப்படவில்லை.

இந்த நூலால் ஒருவர் சைவசித்தாந்தத்தின் அடிப்படை உண்மைகளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள முடியும் என யான் கருதுகின்றேன்.

**க. வச்சிரவேல் முதலியார்**
சிறப்பு அலுவலர்
சைவசித்தாந்தத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

## அருள் நந்தி சிவம் அருட்பணி மன்ற வெளியீடுகள்

1 திருமுறையும் சைவ சித்தாந்தமும்
2 திருக்குறளும் சைவ சித்தாந்தமும்
3 அருள் நந்தி சிவாசாரியார் புராணம்
4 அளவை இலக்கணம்
5 ஒன்பது இரவுகள் ஏன்
6 தேவார அருள் முறைத்திரட்டு & திருவருட்பயன்
7 தலமுறையில் தேவாரமும் திருத்தலமும் மலர் 1
8 தலமுறையில் தேவாரமும் திருத்தலமும் மலர் 2
9 திருவருட்பயன்
10 திருவைந்தெழுத்து
11 குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம்
12 சிவஞான சித்தியார் சுபக்கம்
13 உண்மை விளக்கம்
14 திருஉந்தியார் & திருக்களிற்றுப்படியார்
15 சிவப்பிரகாசம்
16 மெய்கண்ட நூல்களுள் ஏழு
17 தசகாரியம்
18 சிவஞான போதம் வழித்துணை விளக்கம்
19 சிவஞான மாபாடியம்
20 சிவஞான சித்தியார் (பரபக்கமும் சுபக்கமும்)
21 சிவஞான போத வசனலங்கார தீபம்



**S. சிதம்பரநாதகல்யாணி**
தலைவர்
அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம்
78, செல்வி நகர்-சிந்துபூந்துறை
திருநெல்வேலி-627 001
போன் : 339726

# சிவஞான போத வசனாலங்கார தீபம்

## சிறப்புப் பாயிரம்

**வேத மொ டாகம மெய்யா மிறைவனூல்**
**ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக**
**நாத னுரையிவை நாடி லிரண்டந்தம்**
**பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே**

— *திருமந்திரம், 2397*

அநாதிமல முத்தராகிய சிவபெருமான் ஆன்மாக்கள் பொருட்டு அருளிச் செய்த முதனூல்கள் **வேதம் சிவாகமம்** என்னும் இரண்டுமாம். வேதம் நான்கு. அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவாம். சிவாகமம் இருபத்தெட்டு. அவை காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுவரம், கிரணம், வாதுளம் என்பனவாம். இவை மூலாகமங்கள் எனப் பெயர் பெறும். இக்காமிகம் முதலிய ஆகமங்களின் **உபாகமங்கள்** இருநூற்றேழு. வேதம், ஆகமம் என்னும் இரண்டும் தனித்தனி **கன்ம காண்டம், ஞான காண்டம்** என இருவகைப்படும்.

வேதத்தின் கன்ம காண்டத்தில் வேள்வி முதலிய கன்மங்கள் பெரும்பான்மை விரிவாயும் **பதி, பசு, பாசம்** முதலிய ஞான காண்டப் பொருள், **ஞானயோகம்** என்பன சிறுபான்மை சுருக்கமாயும் கூறப்படும்.

வேதத்துக் கன்ம காண்டத்திற் சுருக்கிக் கூறப்பட்ட பதி, பசு, பாசம் முதலிய ஞான காண்டப் பொருளை வேதத்தின் ஞான காண்டம் விரித்துக் கூறும்; இது **வேதசிரசு** எனவும், **உபநிடதம், வேதாந்தம்** எனவும் பெயர் பெற்று நிலவும்.

ஆகமத்தின் கன்ம காண்டத்திலே சரியை முதலியவை கூறப்படும். ஆகமத்தின் ஞான காண்டத்தில் **ஞானபாதம்** கூறப்படும். ஞான பாதம் ஞானத்துச் சரியை, ஞானத்துக் கிரியை, ஞானத்து யோகம், ஞானத்து ஞானம் என நான்காக வகுக்கப்படும்.

வேதாந்தம் பதி பசு பாசம் ஆகியவற்றை நித்திய பதார்த்தங்கள் என்று விரித்துக் கூறும். ஈண்டு வேதாந்தங்கள் எனப் படுவன ஈசாவாசியம், கேனம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், ஐதரேயம், தைத்திரீயம், சாந்தோக்கியம், பிருக தாரணியகம், மைத்திராயணம், மகோப நிடதம் எனப்படும் மகாநாராயணம், கௌஷீதகிப்பிராம்மணம், காலாக்கினிருத்திரம், கைவல்லியம், சுவேதாசுவதரம், அதர்வசிரசு, அதர்வசிகை, பஸ்மஜாபாலம், பிருகஜ்ஜாபாலம், உருத்திராக்ஷஜாபாலம், சரபம், சிவசங்கற்ப முதலிய உபநிடதங்களே.

சிவாகமங்கள் சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம், ஞானபாதம் என நான்கு வகைப்படும். புறத்தொழில் மாத்திரையாற் சிவபெருமானது உருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு சரியை எனப்படும். இதனை விரித்துக் கூறும் ஆகமப்பகுதி **சரியாபாதம்** எனப்படும். புறத்தொழில் அகத்தொழில் என்னும் இரண்டானும் சிவபெருமானது அருவுருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு கிரியை எனப்படும். இதனை விரித்துக் கூறும் ஆகமப் பகுதி **கிரியாபாதம்** எனப்படும். அகத்தொழில் மாத்திரையானே சிவபெருமானது அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு யோகம் எனப்படும். இதனை விரித்துக்கூறும் ஆகமப்பகுதி **யோகபாதம்** எனப்படும்.

வேதாந்தங்கள் சூத்திரம் போலப் பொதுவாகப் பிரதிபாதித்த பதி பசு பாசங்களைச் சிவாகமத்தின் ஞானபாதம் பாடியம் போலச் சிறப்புறத் தெளிவாகப் பெரிதும் விரித்து, அவற்றின் இலக்கணங்களை அறிவித்து, உருவ முதலிய முத்திறத் திருமேனியையும் கடந்த **அகண்டாகார நித்தவியாபகச் சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவத்தை** ஞானத்துச் சரியையாகிய **கேட்டல்**, ஞானத்துக் கிரியையாகிய **சிந்தித்தல்**, ஞானத்து யோகமாகிய **தெளிதல்**, ஞானத்து ஞானமாகிய **நிட்டை** என்னும் அறிவுத்தொழில் மாத்திரையினால் வழிபடுவதை உணர்த்துவதாம்.

இந்த ஞான பாதம் சரியை முதலிய மூன்று பாதங்களின் முடிவிலே பேசப்படலான், அது ஆகமாந்தம் எனப்படும். காமிக முதல் வாதுளம் இறுதியாகிய இருபத்தெட்டு ஆகமங்களிற் சரியை முதலிய நான்கு பாதங்களுண்மையால், ஞான பாதங்களெல்லாஞ் **சித்தாந்தம்** எனப் பெயர் பெறும்.

இங்ஙனம் வேதத்தின் அந்தமாகிய **வேதாந்தமும்** ஆகமத்தின் அந்தமாகிய ஆகமாந்தமும் பதி பசு பாச முதலியவற்றைச் சாமியமாகப் பிரதி பாதித்தலினாலன்றோ திருமூல நாயனார் ''நாடிவிரண்டந்தம் பெரியோர்க் கபேதமே'' என்றருளிச் செய்தார்.

இருபத்தெட்டு ஆகமங்களுள்ளே, ஈண்டு பதி பசு பாசம் என்னும் ஞானபாதப் பொருளை ஆராயும் பொருட்டுச் சித்தாந்தமாக எடுத்துக் கொள்ளப்பட்ட சாத்திரம் **இரௌரவாகமத்துப்** பன்னிரு சூத்திரங்களாற் கூறப்பட்ட **சிவஞான போதமேயாம்**

இங்ஙனம் வேதாந்தத்துக்கும் சித்தாந்தத்துக்கும் பொருள் ஒற்றுமை இருத்தலான், சிவஞான போதமானது வைதிக சைவ சித்தாந்தம் எனப் பெயருடைத்தாயிற்று.

பரஞ்சோதி முனிகள் ஆணைப்படி மெய்கண்ட தேவரால் தமிழிலே மொழி பெயர்க்கப்பட்ட சிவஞான போதமும் அங்ஙனம் வைதிக சைவ சித்தாந்தமென்றே பெயர் பெறும்.

இனி வைதிக சைவசித்தாந்தத் தமிழ்ச் சிவஞான போத நூலை ஆராயப் புகுங்கால் எழும் ஆசங்கைகள் எட்டு.

1 ஞான பாதப் பொருளை ஆராய்தலினாற் பெறப்படும் பயன் யாது எனவும்,

2 இந்த ஞான பாதத்தைக் கேட்டற்கு உரியார் யாவர்? எனவும்,

3 இந்நூலில் கூறப்படும் பொருள்கள் யாவை? எனவும்,

4 இந்த நூல் படித்தற்கு முன் எந்த நூல்களைக் கற்றறிந்து கொள்ளல் வேண்டும்? எனவும்,

5 இந்த நூல் எப்பெயரிட்டு வழங்கப்படுகின்றது? எனவும்,

6 இந்த நூல் எங்கே வழங்கப் படுகின்றது? எனவும்,

7 இதற்கு முதனூல் யாது? எனவும்,

8 இந்த நூல் செய்தார் யாவர் எனவும் எழுவன. இவ்வாறு உண்டாகும் ஆசங்கைகளை அறுத்து மனத்தில் தெளிவு பிறக்குமாறு செய்தல் இன்றியமையாதது.

**பரமான்மா சீவான்மாக்களாகிய பதி, பசுக்கள்:** தோல், எலும்பு, தசை, மூளை, சுக்கிலம், இரத்தம், சுரப்பி என்னும் ஏழு தாதுக்களாலாய்த் துயரங்களுக்கெல்லாம் இருப்பிடமாயுள்ள இந்த உடல் முதலியவற்றைக் கொண்டு **ஆன்மா பரமான்மா** என்னும் இரண்டும் உளவாம் என்று அநுமானத்தினால் ஆராய்ந்து அவற்றின் **தடத்த லக்கணம்** எனப்படும் பொதுவியல்பை உணர்தல் வேண்டும், சூரியன் உதயகிரியின் கண்ணே உதித்த போது, பூவுலகின் கண்ணே புறத்துளதாகிய இருளானது நீங்கக் கண்ணொளி பார்வை அடையுமாறு போல அவ் ஆன்மாக்களின் பொதுவியல்பை உணரும் உணர்ச்சியினாற் கருதி உணரப்படுவதாகிய அகவிருள் எனப்படும்

ஆணவமலம் நீங்கும். அது நீங்கியபோது எல்லா நூற் பொருள் களையும் தன்னுள்ளே கொண்ட **சித்தாந்த மகாவாக்கியத்தினால்** எடுத்துரைக்கப்படும் சிவபெருமானது திருவருளினால் **ஆன்மா பரமான்மா** என்னும் இரண்டும் பொருள்களின் **சொரூபலக்கணம்** எனப்படும் சிறப்பியல்பை அநுபூதியிற்கண்டு, மயக்க வாசனை அறுத்து **சிவானந்தாநுபவ மடைதலே** பயன். இது முதலாவது ஆசங்கைக்கு விடை.

சிவாகமத்திலே விதிக்கப்பட்டவாறு முதற்கண்ணே தீக்கை பெற்றுச் சிவாகமங்களை ஓதி, அதன் பின்னர்ச் சரியை கிரியை யோகம் என்னும் மூன்று பாதங்களையும் கூறும் நூல்களைக் கேட்டு, மனம் தூயவராய் நித்தியமாகிய மெய்ப்பொருள் இன்னது என்றும், அநித்தியமாகிய பொய்ப்பொருள் இன்னது என்றும் உணர்ந்தவராய், கல்லாயும், புல்லாயும், செடியாயும், மரமாயும், புழுவாயும், பாம்பாயும், பறவையாயும், மிருகங்களாயும், பேயாயும், கணங்களாயும், அசுரராயும், முனிவராயும், மனிதராயும், தேவராயும், நரகராயும் இங்ஙனம் பூமியினும் சுவர்க்கத்தினும், நரகத்தினும் காற்றாடியும் கொள்ளி வட்டமும் போலப் பிறவிக் கடலிலே கிடந்து வருந்த வேண்டுமே! என்று பிறவிக்கு அஞ்சி மோட்சத்திலே ஆசை மிக்குடையராயுள்ள அதிகாரிகளே இந்த நூலைக் கேட்டற்கு உரியார். இஃது இரண்டாவது ஆசங்கைக்கு விடை.

**பதி பாசம் பசு** என்னும் முப்பொருள்களுமே சிவஞான போதத்திற் கூறப்படும் பொருள்களாம். இது மூன்றாவது ஆசங்கைக்கு விடை.

சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம் என்னும் மூன்று பாதப் பொருள்களையும் உணர்த்தும் சோமசம்பு பத்ததி, வருண பத்ததி என்னும் நூல்களை உணர்ந்த பின்னரே இந்த நூல் கற்கற் பாலதாம். இது நான்காவது ஆசங்கைக்கு விடை.

இந்த நூல் சிவஞான போதம் என்னும் பெயரால் வழங்கப் படுவது. இஃது ஐந்தாவது ஆசங்கைக்கு விடை.

வடக்கின் கண்ணே அறுமுகக் கடவுளின் வெற்பாகிய திருவேங்கடமலையையும் கிழக்கின் கண்ணும் தெற்கின் கண்ணும் மேற்கின் கண்ணும் கடலையும் எல்லையாகக் கொண்ட தமிழ்நாடே இந்த நூல் வழங்கும் இடமாம். இஃது ஆறாவது ஆசங்கைக்கு விடை.

**சீகண்ட பரமசிவனார்** சிவஞான போதத்தை நந்தி பெருமானுக்கு அருளிச் செய்ய, நந்தி பெருமான் அவரை இறைஞ்சி நின்று, சிவாகமங்கடோறும் சரியா பாத முதலிய நான்கும் சிறு

பான்மை வேறு வேருகக் கூறப்படுகின்றன; அவற்றின் உண்மையாது என்று அருளிச் செய்தல் வேண்டும் என்று விண்ணப்பஞ் செய்தபோது, சிகண்டருத்திர முதல்வர் கருணை கூர்ந்து, ''அனந்த தேவ நாயனுர் எமக்கு அருளிச் செய்தவாறே கூறுகின்ருேம் கேட்பாயாக'' என்று அருளி,

கற்பங்கடோறும் படைப்பு வேறு படலானும் கேட்போர் கருத்து வேறுபடலானும், அவற்றுக்கியையச் சரியாபாத முதலிய மூன்றும் ஆகமங்களிலே வெவ்வேருகக் கூறப்படுகின்றன. ஆகலின் எந்த ஆகமப்படி எவர் தீக்கை பெற்றிருக்கின்ருரோ அவர் அந்த ஆகமப்படி ஒழுகக்கடவர்.

பதிபசு பாசங்களின் பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் இரண்டையும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரோ வொன்றே பற்றி ஐக்கியவாத முதற் பல திறத்தினுல் வேறுபட்டுத் தம்முள்ளே மாறுபட்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்தது **இரெளரவாகமத்து 73-வது பாசவிமோசனப்படலம்** எனப் படும் பன்னிரு சூத்திரமுடைய **சிவஞான போதம்;** இதனைக் கேட்டார்க்கு எல்லா ஆகமப் பொருளும் மாறுபடாது நன்கு விளங்கும் என நந்தி பெருமானுக்கு அருளிச் செய்தார். பின்னர் நந்தி பெருமான் சிவஞான போதத்தைச் **சனற்குமார முனிகட்கும்** அவர் அதனைச் சத்திய ஞான தரிசனிகளுக்கும், அவர் அதனைப் பரஞ்சோதி முனிகளுக்கும் அருளிச் செய்தார். பரஞ்சோதி முனிகள் வடமொழிச் சிவஞான போதத்தை **மெய்கண்டதேவரிடத்திற்** கொடுத்து இதனை ''ஈண்டுள்ளார் உணர்ந்து உய்தற்பொருட்டுத் தமிழிலே மொழி பெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்க'' என்று அருளிச் செய்தார். இந்த வடமொழிச் சிவஞான போதமே **தென்மொழிச் சிவஞான போதத்துக்கு** முதனூலாம் இஃது ஏழாவது ஆசங்கைக்கு விடை.

அங்ஙனமே வடமொழிச் சிவஞான போதத்தைத் தமிழிலே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளினவர் சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடைய மெய்கண்ட தேவரே யாவர். இஃது எட்டாவது ஆசங்கைக்கு விடை.

# பாயிரவியல்

## கடவுள் வணக்கம்

சிவஞான போதம் என்னும் அருணூலால், மேலான உண்மைகளைப் பொதுவதிகாரம், உண்மையதிகாரம் என இரண்டாக வகைப்படுத்திக் காட்டி, வேதாகமப் பொருணிச்சயம் செய்யத் தொடங்கிய மெய்கண்ட தேவநாயனார், நின்மல சாக்கிராதீத சிவானந்த சாகரத்தில் மூழ்கிய தமக்கு எவ்வித இடையூறும் சிறிதாயினும் நணுகாது என்று உணர்ந்தாரேனும், ஆன்றோர் செய்து வந்தபடி மங்கல வாழ்த்தைத் தாமுஞ்செய்து, அவ் ஆன்றோர் ஒழுக்கத்தைப் பேண வேண்டும் என்றும் அதனைத் தமது மாணாக்கர்க்கு அறிவுறுத்த வேண்டும் என்றும் கொண்டே முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துதலாகிய மங்கல வாழ்த்துக் கூறுகின்றார்.

**கல்லா னிழன்மலை**
**வில்லா ரருளிய**
**பொல்லா ரிணைமலர்**
**நல்லார் புனைவரே.**

(இதன் பொருள்) திருக்கைலாசத்தின் கண்ணேயுள்ள அருள் வடிவாகிய கல்லால மரநிழலில் வீற்றிருந்தருளி, சிவாகமப் பொருள்கள் ஒன்றோடொன்று மாறுபடுவனவாக மலைவுற்று வினாவிய நந்தி பெருமானுக்கு உளவாகிய சந்தேகங்களை இந்தச் சிவஞான போத சாத்திரம் வாயிலாக நீக்கியருளிய சீகண்டருத்திரப் பெருமான் மேன்மேலும் கருணை கூர்ந்தருளுதற் பொருட்டு சுயம்பு மூர்த்தியாகிய விநாயகக் கடவுளுடைய இரண்டு திருவடித் தாமரைகளை மெய்யன்பர்கள் தமது சிரசின் கண்ணே சூடுவர் என்பதாம்.

திருவடிகள் இரண்டனுள் வலத்திருவடி சேதனாசேதனப் பொருள்களையெல்லாம் ஒருவர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் அறிவாகிய **முற்றறிவு** என்றும், இடத்திருவடி அந்தப் பொருள்களையெல்லாம் செயற்படுத்தும் **முற்றுத் தொழில்** என்றும் உணர்க.

ஆகவே மூத்த பிள்ளையாருடைய **முற்றறிவே** ஓர் திருவடி எனவும், **முற்றுத் தொழிலே** மற்றத் திருவடியாம் எனவும் ஓர்க.

ஆன்மாக்களுடைய அறிவு எப்பொருளையும் ஒவ்வொன்றாக அறியும் **சிற்றறிவாயும்**, அவர்களுடைய தொழில் எப்பொருளையும் நினைத்தவாறு செய்ய இயலாத **சிறு தொழிலாயும்** உள்ளன.

ஆதலால் இறைவனது முற்றறிவாகிய திருவடியையின்றி ஆன்மாக்களாகிய நாம் ஒன்றை அறியவும் இயலேம். அவனது முற்றுத் தொழிலாகிய திருவடியையின்றி நாம் ஒன்றைச் செய்யவும் இயலேம் என்று உணர்ந்து, நமது அறிவுஞ் செயலும் இழந்து திருவருள் வியாபகத்தில் அடங்கி நிற்றலே இறைவன் **திருவடியைச் சூடுதல்** என்பதன் பொருளாம்.

**தாள், தலை** என்னும் இரண்டும் வேறு சொற்களாயும் அவை புணருங்கால் **தாடலை** என ஒன்றாய் நிற்குமாறு போல, **சீவான்மா பரமான்மா** என்னும் இரண்டும் வேறு பொருள்களாயும், முத்தி நிலையிலே ஆன்ம போதமும் கண்ணொளியும் போல வேறுபடாது அநன்னியமாய் நிற்கும் உலகத்திலே புதல்வனிடத்திற் செய்யும் வழிபாடு தந்தையர்க்கு மிகுந்த மகிழ்ச்சியை விளைக்குமன்றோ! அந்த முறை பற்றி விநாயகக் கடவுளை வழிபடுதல் சிவபெருமானை மகிழ்விக்கும் என்பதும் அவ்விருவர்க்கும் பேதமின்றாம் என்பதும் போதர, வில்லார் அருளிய பொல்லார் இணைமலர் புனைவரே என்றார்.

மலையை வில்லாக வளைத்தவரும் கல்லால நிழலில் எழுந்தருளியிருந்தவரும் சிவபெருமானேயாவர்.

**மகாமேருவை** வில்லாக வளைத்து அக்கினியும், வாயுவும், திருமாலும் முறையே நுனியும், நடுவும், அடியுமாக அமையப் பெற்ற அம்பைத் திரிபுரத்தின் மேற்செலுத்தி, அப்புரத்து அசுரர்களை அழித்து, அவர்களால் துன்பமடைந்த தேவர்களைக் காத்து, அவர்களுக்குச் சிற்றின்ப போகத்தை ஊட்டிய கடவுளே, கல்லால மரநிழலில் ஞானாசாரியராக எழுந்தருளியிருந்து சனகாதி முனிவர்களுக்குச் சித்தாந்தோபதேசஞ் செய்து, மும்மலம் போக்கிப் பேரின்ப போகத்தை அருளினொன்று உணரற்பாற்றும். அங்ஙனம் சித்தாந்தோபதேசஞ் செய்தமை

**"சநகாதி முநீந்திரேப்யஸ் திரிபதார்த்தார்த்த சம்மிதம் |**
**ரஹஸ்யமாக மாந்தாக்ய சித்தாந்தம் கதயத் ஸ்தித:||"**

(கைலாசத்திலே சிவபெருமான்) சனகர் முதலிய முனீந்திரர்களுக்குத் திரிபதார்த்தங்களினாலே சம்மிதமாயும் இரகசியமாயுமுள்ள ஆகமாந்தம் என்னும் பெயர்த்தாகிய சித்தாந்தத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார் என்று சங்கர சங்கிதை கூறுமாற்றால் உணரப்படும்.

மேலே கூறிய "கல்லால்" என்றற்றொடக்கத்து வஞ்சித்துறைச் செய்யுள் கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய, பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ என்னும் பன்னிரண்டு சொற்களையுடையது. இந்தப் பன்னிரண்டு சொற்கள்

கொண்டு இந்த நூல் பன்னிரண்டு சூத்திரங்களால் அமையப் பெற்றது எனவும், கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய, என்னும் முன் ஆறு சொற்கள் கொண்டு பொதுவதிகாரமாகிய பொதுவியல்பு முன் ஆறு சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ, என்னும் பின் ஆறு சொற்கள் கொண்டு உண்மையதிகாரமாகிய சிறப்பியல்பு பின் ஆறு சூத்திரங்களாற் கூறபட்டது எனவும்,

கல், ஆல், நிழல் என்னும் மூன்று மொழிகள் கொண்டு பதி, பாசம், பசு என்னும் முப்பொருள்களுக்குப் பிரமாணம் கூறுவதாகிய பிரமாணவியல் முதலாம், இரண்டாம், மூன்றும் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

மலைவு, இல்லார், அருளிய என்னும் மூன்று மொழிகள் கொண்டு அந்தப் பசு, பாசம், பதி என்னும் முப்பொருள்களுக்கு இலக்கணம் கூறுவதாகிய இலக்கணவியல் நான்காம், ஐந்தாம், ஆறும் சூத்திரங்களாற் கூறப்பட்டது எனவும்,

பொல்லார், இணை, மலர் என்னும் மூன்று மொழிகள் கொண்டு அப்பதி, பசு, பாசங்களின் இலக்கணத்தை அறிந்து அதனாலாகிய பயன் பெறுதற்கு ஏதுவாயுள்ள சாதனம் கூறுவதாகிய சாதனவியல் ஏழாம், எட்டாம், ஒன்பதாம் சூத்திரங்களாற் கூறப் பட்டது எனவும்,

நல்லார், புனைவர், ஏ, என்னும் மூன்று மொழிகள் கொண்டு அச்சாதனத்தானாகிய பயனை வகுத்துக் கூறுவதாகிய பயனியல் பத்தாம், பதினோராம், பன்னிரண்டாஞ் சூத்திரங்களாற் கூறப் பட்டது எனவும் குறிப்பால் உணர்க.

இங்ஙனம் நூலிலே கூறப்படும் பொருள்களையெல்லாம் குறிப்பால் தன்னகத்தே அடக்கி நிற்றல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணமாம் என்று ஓர்க.

---

## அவையடக்கம்

### வேதசார சைவ சித்தாந்தம் சமயாதீதம்

மங்கல வாழ்த்துக் கூறுமிடத்து நம் இறைவன் சிவபெருமான் என்று உணர்த்தி, அவையடக்கம் கூறுமுகத்தால் அந்தச் சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்ட, வைதிக சைவ சித்தாந்தத் தினது உயர்ச்சியும், ஏனைச் சமய நூல்களை உணர்ந்தாரது குறைவும் கூறுவாராயினார்.

உடைப்பொருள் இருவகைப்படும். அவை அடிமையும், உடைமையுமாம். உயிர்ப் பொருளெல்லாம் அடிமைப் பொருள். உயிரில்லாப் பொருளெல்லாம் உடைமைப் பொருள். உயிர்ப்பொருள் சேதனப் பிரபஞ்சம் எனவும், உயிரில்லாப் பொருள் அசேதனப் பிரபஞ்சம் எனவும் படும்.

நின்மல துரியத்தின் கண்ணே ''தான் பணியை நீத்தலாகிய'' ஆன்ம சுத்தி வாயிலாக அடிமைப் பொருளாகிய தம் இயல்பினை உணர்ந்து, தம்மை உடையானாகிய தலைவனை நின்மல துரியாதீதத்தின் கண்ணே உணரும் சித்தாந்த சைவர் தமக்கு அடிமைப் பொருளாகிய எம்மை உடையாராகலின், அவர் நாம் செய்யும் குற்றங்களைப் பொருட்படுத்தாது நீக்கி, அதிற் காணப்படும் சிறந்த பொருள்களைப் பாராட்டி அதனை ஏற்றுக்கொள்வர்.

அங்ஙனம் பரமபதியாகிய சிவபெருமானுக்குத் தாம் அடிமை என்று உணரமாட்டாத புறப்புறச் சமயத்தாரும், புறச்சமயத்தாரும், அகப்புறச்சமயத்தாரும், எமது நூலையும், எம்மையும் இகழ்ந்து உரைக்கும் மொழிகளையும், புறச்சமயிகளாகாத அகச்சமயத்தார் அறுவரும் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து உரைக்கும் மொழியையும் பொருட்படுத்தேம்.

## புறப்புறச் சமயத்தார்

உலகாயதரும் (மாத்தியமிகர், யோகாசாரர் சவுத்திராந்திகர் வைபாடிகர் என்னும்) நால்வகைப் பவுத்தரும், சமணருமாகிய அறுவரும் வேதம் சிவாகமம் இரண்டையும் நிந்திக்கும் நாஸ்திகராயினும், ஒரு நூல் என்றும் பிரமாணம் என்றும் கூறி ஒரு நெறியில் நிற்றலால், அவர் சமயம் புறப்புறச்சமயம் எனப்படும்.

## புறச் சமயத்தார்

தார்க்கிகரும், மீமாஞ்சகரும், ஏகான்மவாதியரும், சாங்கியரும், யோக மதத்தினரும், பாஞ்சராத்திரிகளுமாகிய அறுவரும் வேதத்தைப் பிரமாணமாகப் பொது வகையாற் கொள்ளினும், அவருள்ளே தார்க்கிகர் வேதத்தை நேரே பிரமாணமாகக் கொள்ளாது, அவ்வேதப் பொருளோடு மாறுபட்டுப் பொருள் கொள்கின்றமையானும், மீமாஞ்சகர் வேதத்தின் கன்ம காண்டத்தையே பிரமாணமாகக் கொண்டு ஞான காண்டமாகிய உபநிடதங்களை இகழ்கின்றமையானும், ஏகான்மவாதிகள் ஞான காண்டத்தைப் பொருட்படுத்துபவர் போலத் துணிந்து, வேதாந்தம்

என்னும் பெயரோடு விளங்குகின்ற சர்வசாரம் பைங்கல முதலிய மாயாவாத உபநிடதப் பொருள்களைப் பொருட்படுத்தி, அம்மாயா வாதப் பொருள்களுக்கு இயைவுபட (ஆன்மாவையும் பரமான்மா வையும் சிவாகமங்களுக்கு மாறுபடாது நித்திய பதார்த்தங்கள் என்று உரைக்கும் மெய்ம்மை வேதாந்தமாகிய முண்டகம், சுவேதாசுவதரம், கடவல்லி முதலிய உபநிடத) பரசுருதிகளை அலைத்துத் திரித்து, மாயா வாத பரமாகப்பொருள் கொண்டு இடருறுதலானும், சாங்கியர், யோக மதத்தினர் என்னும் இருவரும் தத்தம் மதத்துக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் எடுத்துக் கொண்டு ஏனையவற்றுக்குப் பிரமாணம் கொள்ளாமையானும், வேதத்துக்குப் புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கொள்கின்றமையானும், பாஞ்சராத்திரர் வேதாந்தம் என்னும் பெயரோடு விளங்கும் நாராயணம் சுபால முதலிய உபநிடதங்களைப் பொருட்படுத்தி, இந்த வைணவ உபநிடதங் களுக்கு இயைய (ஈச, கேன, கட, பிரசின, முண்டக, மாண்டூக்கிய முதலிய) உபநிடத பரசுருதிகளை அலைத்துத் திரித்துப் பாஞ்சராத்திர பரமாகப் பொருள் கொண்டு இடருறுதலானும் வேதத்துக்குப் புறமாகிய நூல்களைப் பிரமாணமாக்கோடலானும், தார்க்கிகர் முதற் பாஞ்சராத்திரர் இறுதியாகிய அறுவரும் சிவாகம நிந்தகராதலானும், அவர் சமயம் புறச் சமயம் என வேறு வைத்து எண்ணப்பட்டன.

## அகப் புறச் சமயத்தார்

அவைதிக பாசுபதர், மாவிரதர், காபாலர், வாமர், வைரவர் என்னும் ஐவரும் வேதம் சிவாகமம் இரண்டையும் பொதுவகையாற் பிரமாணமாகக் கொள்ளினும், அவ்வேதம் சிவாகமம் இரண்டற்கும் வேறாகிய அவைதிக பாசுபத முதலிய நூல்களைச் சிறப்பு வகையாற் பிரமாணமாகக் கோடலானும், ஐக்கியவாத சைவர் வேத சிவாகமம் இரண்டையும் சிறப்பு வகையாற் பிரமாணமாகக் கொண்டு, அவற்றில் விலக்கியவற்றை நீக்கி விதிக்கப்பட்டவற்றைச் செய்வாரா யினும், எல்லாக் கேட்டிற்கும் காரணமாகிய ஆணவ மலம் ஒன்று உளது என்பதைப் பொருட்படுத்தாமையானும், அதனை உண்டு என்று கூறும் சிவாகமங்களை இகழ்தலானும் அந்த ஆறு மதத்தினர் சமயமும் அகப் புறச் சமயம் என வேறு வைத்து எண்ணப்பட்டன.

## அகச் சமயத்தார்

பாடாணவாத சைவர், பேதவாத சைவர், சிவசமவாத சைவர், சிவசங்கிராந்தவாத சைவர், ஈசுவர அவிகாரவாத சைவர், சிவாத்துவித சைவர் என்னும் அறுவரும் பதி, பசு, பாசப் பொருளுண்மையெல்லாம் சித்தாந்த சைவரோடு ஒப்பக் கொள்ளும்

அந்தரங்க உரிமையுடையராயினும், அவ்வப் பொருள்களுக்குக் கூறும் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையில் மாறுபடலால், அவர் சமயம் அகச் சமயம் என வேறு வைத்தெண்ணப்பட்டன.

## புறப்புறச் சமயம்

**உலகாயதர்** நிலம், நீர், தீ, காற்று என்னும் தத்துவங்களின் கூட்டமே உடம்பு என்றும், வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு கூடிய விடத்துச் சிவப்பு நிறம் ஒன்று தோன்றுமாறுபோல, அம்மண் முதலிய நான்கின் சேர்க்கையினுல் ஓர் உணர்வு உண்டாகின்றது என்றும், கடவுள் ஒருவர் இல்லை. ஆன்மா என ஒன்றில்லை, மங்கையரை மணந்து உண்டு உடுத்து வாழ்வதே துறக்க இன்பம் என்றும் கூறுவர்.

**மாத்தியமிகர்** உலகத்திலுள்ள பொருள்கள் உள்பொருளாயின் அழியா, அவை இல்லாத பொருளாயின் தோன்று, அவை உள்ளவும் இல்லவுமாய பொருளெனில் முரணும். இரண்டும் அல்ல எனின், உணர்ச்சி கூடாது. இந்த நான்கு பாகுபாடும் இல்லாமையின், எல்லாப் பொருளும் சூனியமே என்றும், எல்லாம் மயக்கத்தாற் காட்சிப் பொருள் போலப் புலப்படுகின்றன என்றும் கூறுவர்.

**யோகாசாரர்** வட்டம், சதுரம், கறுப்பு, சிவப்பு, முதலிய வடிவினவாய் அகத்தே தோன்றும் ஞானம் சாகார ஞானம் என்றும், பந்தம் நீங்கிய போது வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் உண்டாவது நிராகாரஞானம் என்றும், இப்படிப்பட்ட ஞானமேயன்றிப் பொருளென்ன மற்றென்றில்லை என்றும் கூறுவர்.

**சவுத்திராந்திகர்** உடல் பொறி முதலிய உருவக் கந்தம் என்றும், இன்பத் துன்பங்கள் வேதனைக் கந்தம் என்றும், உருவக் கந்தத்தை உணரும் உணர்வு ஞானக் கந்தம் என்றும், சாத்தன் கொற்றன் முதலிய பெயர் குறிக் கந்தம் என்றும், ஞானக் கந்தம் சாகாரம் நிராகாரம் என இருவகைப்படும் என்றும், சாகாரமாகிய சவிகற்பஞானம் பிரவிருத்தி ஞானம் எனப்படும் என்றும், நிராகாரமாகிய நிருவிகற்ப ஞானம் ஆலய விஞ்ஞானம் எனப்படும் என்றும், அவற்றின் வாசனை வாசனைக்கந்தம் எனப்படும் என்றும், உருவக்கந்தம் ஒன்றுமே புறச்சமுதாயம் என்றும், வேதனை, ஞானம், குறி, வாசனை என்னும் நான்கும் அகச்சமுதாயம் என்றும், இவ்விருவகைச் சமுதாயத்துள் உலக முழுவதும் அடங்கும் என்றும் கூறுவர்.

**வைபாடிகர்** புறப்பொருள் ஞானமே தமக்குக் காட்சிப் பொருளாமென்றும் மஞ்சளும் சுண்ணும்பும் கூடிய விடத்துச் செவ்வண்ணம் தோன்றுமாறுபோல, இந்திரியங்கள் கூடிய விடத்துப் பிரபஞ்சம் தோன்றும் என்றும் கொள்வர்.

**ஆருகதர்** சீவனும், அசீவனும் ஆச்சிரவமும், சமுவரமும், நிச்சரமும், பந்தமும், வீடும் எனப் பதார்த்தங்கள் ஏழு என்றும், இவற்றுட் சீவன் அநாதி சித்தனும், முத்தனும், பெத்தனும் என மூவகைப்படும் என்றும், அநாதி சித்தன் அருகக் கடவுள் என்றும், முத்தன் மோக முதலிய பந்தத்தில் நீங்கியவன் என்றும், பெத்தன் அவற்றுட் கட்டுண்டவன் என்றும், சீவன் எடுத்த உடம்பளவிற்கேற்ப வியாபகமாய் நிற்பன் என்றும், அசீவன் புற்கலமும் ஆகாயமும் தன்மமும், அதன்மமும் என நான்கு வகைப்படும் என்றும், அவற்றுட் புற்கலம் நில முதலிய நான்கு பூதமும், மரம், புல்லு முதலிய நிலையியற் பொருளும், கருப்பை முட்டை முதலியவற்றில் பிறக்கும் இயங்கியற் பொருளும் என அறுவகைப்படும் என்றும், ஆகாயம் உலகாகாயமும், உலகம் கடந்த ஆகாயமும் என இருவகைப்படும் என்றும் தன்மம் நன்மையைக் கொடுப்பது என்றும், அதன்மம் தீமையைப் பயப்பது என்றும், ஆச்சிரவமாவது பொறிவழிச் செல்லுதலாம் என்றும், சமுவரமாவது அங்ஙனஞ் செல்லாமற்றடுத்து முத்திக்குக் காரணமாய் நிலத்தில் எறும்பு முதலிய இறவாமல் வழி பார்த்து மெதுவாய் இயங்குதலும், இனியவை கூறுதலும், நியம வுணவும், பிறவுமாம் என்றும், நிர்ச்சரமாவது சுடு பாறையில் கிடத்தல், தலைமயிர் பறித்தல் முதலிய தவமாம் என்றும், பந்தமாவது இருப்புக் கூடானது தன்னுள் அகப்பட்ட சுரைப் பழத்தைத் தண்ணீருள்ளே செலுத்துமாறு போல, மோக முதலிய குணங்கள் சீவனுடைய சுதந்திரத்தை அடக்கிப் பிறவியிற் செலுத்துவனவாம் என்றும், வீடாவது இருப்புக் கூடு உடைந்த போது சுரைப் பழம் தண்ணீருக்கு மேலே எழுமாறு போல, மோக முதலிய நீங்கிச் சீவன் சுவதந்திரம் பெற்று உலகங் கடந்த ஆகாயத்தை நோக்கி மேலே போதலாம் என்றும் கொள்வர்.

உடம்பு எடுத்தற்கு முன் சீவன் உண்டோ இல்லையோ என்று வினவுங்கால் 1) உண்டாம், 2) இல்லையாம் 3) உண்டும் இல்லையுமாம், 4) சொல்லொண்ணாததுமாம் 5) உண்டாம் சொல்லொண்ணாததுமாம், 6) இல்லையாம் சொல்லொண்ணாததுமாம், 7) உண்டும் இல்லையுமாம் சொல்லொண்ணாததுமாம் என்றும், ஏழுவகையால் உத்தரம் இறுத்தல் பற்றி, ஆருகதம் அநேகாந்த வாதம் எனவும் படும்.

உலகாயதன் காட்சி வாதி எனவும், (பவுத்தன் கணபங்க வாதி எனவும்) ஆருகதன் அநேகாந்த வாதி எனவும், பவுத்தருள் மாத்தியமிகன் சூனிய வாதி எனவும், யோகாசாரன் விஞ்ஞான வாதி எனவும் சவுத்திராந்திகனும் வைபாடிகனும் சமுதாய வாதிகள் எனவும் உணர்க.

## புறச் சமயம்

**தார்க்கிகராவார்** வைசேடிகர் நையாயிகர் என இருவகைப் படுவர். அவருள் வைசேடிகர் திரவியம், குணம், தொழில் சாதி, விசேடம், சமவாயம், இன்மை என எழுவகைப் பொருள்கள் உண்டு என்றும், அவற்றின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை உணரவே உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவின் இயல்பு விளங்கும் என்றும், அதனால் உடம்பு முதலியவற்றை நான் என்று எண்ணிய மித்தைஞானம் கழியும் என்றும், அதனால் முயற்சி இன்மையின் அறம் பாவங்கள் இல்லையாய்ப் பிறவி ஒழியும் என்றும், அதனால் துன்ப இன்பங்கள் இலவாய் உடம்பு எடுத்துக் கொண்ட வினைப்பயன் துய்த்தலினாற் கழிந்தவிடத்து, இறுதித் துன்பம் கெட்டு மனத்தோடு கூடுவதற்கு ஏதுவின்மையின், அறிவின்றிப் பாடாணம் போற் கிடப்பதே முத்தி என்றும் கூறுவர்.

**நையாயிகர்** வைசேடிகரிற் சிறிது வேறுபட்டுப் பொருள்களைப் பிரமாணம், பிரமேய முதலாகப் பதினாறு வகையாக விரித்துக் கூறுவர். இவர் முத்தியில் ஆனந்தம் உண்டு என்பர்.

**மீமாஞ்சகர்** பாட்டாச்சாரியன் மதத்தினர், பிரபாகரன் மதத்தினர் என இருவகைப்படுவர். பாட்டாச்சாரியன் சைமினி சூத்திர மதம் பற்றி வழி நூல் செய்து கன்மமே பயன் கொடுக்கும் என்றும், முத்தியில் ஆனந்தம் உண்டு என்றுஞ் சொல்லுவன். பிரபாகரன் சூத்திர பாடிய மதம் பற்றி வழி நூல் செய்து, கன்மம் நாசமாகுங்கால் அபூர்வம் என் ஒன்று தோன்றி நின்று பயன் கொடுக்கும் என்றும், கல்லுப் போலக் கிடப்பதே முத்தி என்றும் கூறுவன். மீமாஞ்சை சூத்திரஞ் செய்தவர் சைமினி, அதற்குப் பாடியம் (பேருரை) செய்தவர் சபரர்.

**ஏகான்ம வாதியர்** சச்சிதானந்தமாய், நித்தமாய், வியாபகமாய் உள்ளது பிரமம் என்றும், இதுவே மெய்ப்பொருள் என்றும் இந்தப் பிரமத்துக்கு வேறாகிய எல்லாம் பிரமத்தின் விவர்த்தனமாய், இப்பியில் வெள்ளி போல அஞ்ஞானத்தினாற் காணப்படுதலிற் பொய் என்றும், இங்ஙனம் தோன்றும் உலகத்துக்கு முதற் காரணமாம் மூலப் பிரகிருதியாகிய மாயை பிரமம் போலச் சத்துமின்றி முயற்கோடு போல அசத்துமின்றிச் சொல்லொணாததாய் இருக்கும் என்றும், இந்த மாயைக்கு வேறாகிய அறிவு ரூபமாகிய யானே பிரமம் என்றும், இங்ஙனம் அறிவதே முத்தி என்றும் கொள்வர்.

**சாங்கியர்** இருபத்து நான்காம் தத்துவமாகிய மூலப் பிரகிருதி நித்தியமாய் வியாபகமாய், சடமாய், பொருள்களைத் துக்கும் காரணமாய், சாத்துவிக இராசத, தாமச குணங்கள் சமமாய் நிற்கும் நிலையினதாய், அருவமாய் உள்ளது என்றும், இதினின்று தோன்றும் புத்தி முதற் பிருதிவி யீறுகிய இருபத்து மூன்று தத்துவங் களும் காரியமாம் என்றும், இந்த மூலப் பிரகிருதிக்கு மேலாய் நித்தமாய் வியாபகமாய் அருவமாய் அறிவதுஞ் செய்வதுமின்றி அறிவு மாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலும் காரியமாதலு மின்றி நிற்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாம் தத்துவம் எனப்படும் என்றும், இருபத்தைந்தாம் தத்துவ புருடன் பெத்த முத்திகளில் ஒரு தன்மையனே என்றும், புருடன் தாமரையிலையில் நீர் போல யாதினும் ஒட்டின்றி நிற்பன் என்றும், மூலப்பகுதியையும் புருடனையும் பகுத் துணருங்கால் அஞ்ஞானம் நீங்கும் என்றும், அதுவே முத்தி என்றும், கொள்வர்.

**யோகமதத்தினர்** பிருதிவி முதற் புருடன் ஈறுகிய இருபத் தைந்து தத்துவமும் பெத்த முத்திகளும் சாங்கிய நூலிற் கூறியவாறே கொண்டு தத்துவ ஞானமாகிய விவேக ஞானத்தைப் போல் எட்டு உறுப்புக்களையுடைய யோகப் பயிற்சியும் முத்திக்கு ஏதுவாம். இருபத்தாறும் தத்துவத்தினராகிய இறைவர் சர்வஞ்ஞராய்ச் சாத்திரங்களை அருளிப் புருடனுக்கு ஞானத்தை உணர்த்துவராகலின், இறைவர் ஆன்மாக்களுக்கு வேறென்று உணரப்படுவர் என்றும் கொள்வர்.

**பாஞ்சராத்திரர்** இருபத்து நான்காம் தத்துவமாகிய குண தத்துவத்தின் மேலுள்ள இருபத்தைந்தாம் தத்துவத்தில் நாராயண ராகிய பரம்பொருள் ஒருவர் உளர் என்றும், அவருக்கு வாசுதேவர், அநிருத்தர், சங்கருடணர், பிரத்தியும்நர், என நான்கு வியூகர் உளர் என்றும், இவரால் உலகம் படைக்கப்பட்டது என்றும், பாஞ்சராத்தி ரத்தினன்றி வேதங்களில் உறுதிப்பயன் உண்டாகாது என்றும், பாஞ்ச ராத்திராகம முறைப்படி தீக்கை பெற்று நாராயணரில் ஒன்றுவதே முத்தி என்றும் கூறுவர்.

## அகப்புறச் சமயம்

**அவைதிக பாசுபதர்** ஆன்மாக்களுக்கு ஆணவமலம் என ஒன்று இல்லை என்றும், அவைகள் மாயை கன்மங்களாற் பந்தமுற்று இன்பத் துன்பங்களை நுகரும் என்றும், அவற்றில் வெறுப்புத் தோன்றிச் சாஸ்திர முறையால் தீக்கை பெற்றவனிடத்தில் ஈசருடைய ஞானம் போய்ப் பற்றும் என்றும், அப்போது குடும்ப பாரத்தைப்

புதல்வரிடத்து வைத்துவிட்டுத் துறவறத்திற் செல்வார் போல், ஈசரும் தம்முடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தாம் அதிகாரத்தினின்று ஒழிவு பெற்றிருப்பர் என்றும் கூறுவர். இவர் சங்கிராந்த சமவாதிகள் என்வும் படுவர்.

**மாவிரதர்** தமது சாத்திரத்திற் கூறியபடி ஆன்மாக்கள் தீக்கை பெற்று, எலும்புமாலை அணிதல் முதலிய ஒழுக்கங்களில் வழுவாது ஒழுகி முத்தராவர் என்றும், முத்தருக்குச் சிவனோடு சமமாகிய எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்றும் கூறுவர். இவர் உற்பத்தி வாதிகள் எனவும் படுவர்.

**காபாலர்** தமது சாத்திர முறைப்படி தீக்கை பெற்றுப் பச்சைக்கொடி ஒன்றைக் கையிற் கொண்டு, மனிதர் தலையோட்டில் ஐயம் ஏற்று உண்டு உன்மத்தராய்ச் சிவன் ஆவேசித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பர். இவர் ஆவேசவாதிகள் எனவும் படுவர்.

**வாம மதத்தினர்** சடமுஞ் சித்துமாகிய எல்லா உலகும் சத்தியின் பரிணமம் என்றும், வாம தந்திரத்திற் கூறப்பட்டவாறு ஒழுகிச் சத்தியில் ஒன்றுதலே முத்தி என்றும் கொள்வர்.

**வைரவ மதத்தினர்** பெரும்பான்மையும் வாம மதத்தாரோடொத்துச் சிறுபான்மை ஒழுக்கங்கள் வேறுபட்டு, வைரவரே பரம்பொருள் எனக் கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தி என்பர்.

**ஐக்கியவாத சைவர்** மாயா மலம், கன்ம மலம் என்னும் இரண்டு மலங்கள் உள்ளன என்றும், இறைவர் ஆன்மாக்களுக்கு முன்செய் வினைகளுக்கீடாகத் தனு, கரண, புவன மூன்றும் கொடுப்பாரென்றும், இந்தத் தனு, கரண, புவன வாயிலாக வினைக்கீடாய் இன்ப துன்பம் நுகர்வார் என்றும், அங்ஙனம் நுகருங்காற் சத்திநிபாதம் எய்திய விடத்து, திருவருளினால் மாயை கன்மங்கள் நீங்கிவிட அவர் தமக்குள்ள பேரறிவே பிரகாசித்து அந்த இறைவர் அறிவிலே நீரும் நீரும் சேர்ந்தாற் போலக் கலந்து விடுவர் என்றுங் கூறுவர்.

காளாமுகமும் சாம்பவ முதலியவும் இவ்வறுவகைச் சமயங்களின் பகுதியவாய் அடங்கும்.

## அகச் சமயம்

**பாடாணவாத சைவர்** ஆன்மா முத்தியிற் சகசமலம் நீங்காது கல்லுப் போலக் கிடக்கும் என்பர்.

**பேதவாத சைவர்** உயிர் மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த போதே மலம் நீங்கப் பெறும் என்றும், இதுவே முத்தி என்றும் கொள்வர்.

**சிவ சமவாத சைவர்** ஆன்மா பதிப் பொருளைத் தியானித்து, அதற்குச் சாமியமாய பின், அப்பதியின் ஐந்தொழிலும் செய்யும் என்பர்.

**சிவ சங்கிராந்த வாத சைவர்** விகாரமின்றி நிற்கும் ஆன்ம சன்னதியிலே அசத்தாகிய கருவிகள் சத்தாகிய சிவத்தைச் சிவ கரணமாய் நின்று அறியும் என்பர்.

**ஈசுரவவிகாரவாத சைவர்** வெயிலிலே நடந்தோரால் அடையப்படுகின்ற மரநிழல் போலப் பதி விகாரமின்றி நிற்க, ஆன்மா வானது தானே பக்குவம் அடைந்தபோது ஞானக்கண் பெற்றுப் பதியைச் சேரும் என்பர்.

**சிவாத்துவிதசைவர்** ஆன்மா (அபசுத பாப்மத்துவம் எனப் படும்) சர்வஞ்ஞாதி குணங்களைச்சிவோகம் பாவனையினுல் அடைந்து ஔிமார்க்க வாயிலாகச் சோமலோகம் எனப்படும். பிரமலோகத்தை அடைந்து, சிவசாரூப்பியமுற்றுச் சிவானந்தத்தோடு எல்லாப் போகங்களையும் துய்த்து, புநராவர்த்தியின்றி இருப்பர் என்று கூறுவர்.

இது **ஞான யோகத்தானம்** எனப்படும் **சிதம்பரமேயாம்**. இதுவே ஈசகேந முதலிய பரசுருதிகளால் முடித்துப் பேசப்பட்ட **வேதாந்தத்தின் முடிந்த நிலையாம்**. இந்த **வேதாந்தமே**, சைவ சித்தாந்தம் **வேதசாரம்** எனப்படுதற்கேதுவாய், பதி, பசு, பாசங்களைத் தடத்தமாய்க் கூறி முடித்ததாம் என்க.

உலகாயதர் முதல் ஐக்கியவாத சைவர் ஈருகிய முக்கூற்றுப் பதினெட்டு சமயிகளும் பிருதிவி முதல் அசுத்த மாயாதத்துவம் ஈருகிய முப்பத்தொரு தத்துவங்களிலே நிலைபெறுவர். பாடாணவாத சைவர் முதற் சிவாத்துவித சைவர் ஈருகிய அறுவரும் சுத்த வித்தியா தத்துவம், ஈசுர தத்துவம், சாதாக்கிய தத்துவம், சத்தி தத்துவம் சிவதத்துவங்களிலே நிலைபெறுவர். சிவஞான போதத்து ஒன்பதாம் பத்தாம் சூத்திரங்களாற் போதிக்கப்பட்ட தகராகாய சிதம்பர ஞான யோகத்திலே தலைப்பட்டு நின்றவர்க்கும், ஈசகேநாதி சைவோபநிட தங்களை ஆதாரமாகக் கொண்டு வியாசரருளிய வேதாந்த சூத்திரத் திலும், நீலகண்ட சிவாச்சாரியார் அவ்வேதாந்த சூத்திரத்துக்குத் திரிவுப் பொருள் கொள்ளாது சத்தியார்த்தம் வரைந்தருளிய சிவாத் துவித பாடியத்திலும் போதிக்கப்பட்ட தகராகாய சிதம்பர ஞான தியானம் எனப்படும் ஞான யோகத்தில் தலைப்பட்டு நின்றவர்க்கும்

முத்தித்தானம் அந்தப் பரப்பிரம சிவலோகமெனப்படும் சோம லோக மேயாம்.

**''சைவ சித்தாந்த மார்க்கஸ்தா: சைவா: பாசுபதாஸ்ததா |''**

''சைவ சித்தாந்த சமயத்தினரும், அங்ஙனம் சைவ பாசுபதர்களும்'' என்று கூறும் வாயு சங்கிதா சுலோகத்தினாலும், ஞான பாதத்தினர் ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்னும் நான்குக்கும் உரியர் என்று கொண்டு அருணந்தி சிவாச்சாரியார், ''ஞான யோகக் கிரியா சரியை நாலும் நாதன்றன் பணி, ஞானி நாலினுக்கு முரியன்'' என்று கூறுதலானும், ''நிலவுலகாய தாதி நிகழ் சிவாத்துவிதாந்தம்'' என்று உமாபதி சிவாச்சாரியர் கூறுமாறு, சிவாத்துவிதமே முடிந்த நிலையாகக் காணப்படலானும், வைதிக சைவ சித்தாந்த ஞானத்து ஞான பாதத்துக்கு அடுத்தபடியினர் ஞான யோகத்தானத்தினராகிய அத்தியாசிரம வைதிக பாசுபத சிவாத்துவித வேதாந்திகளே யாவர் என்பது தூணு நிகன நியாயத்தினால் நன்கு வலியுறுத்தப்பட்டதாயிற்று.

குடிலை யென்னுந் தடவய லுப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே

அவற்றுள்,

இலை கொண்டு வந்தனர் பலரே இலையொரீஇத்
தளிர் கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
அரும் பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டு கொண் டுவந்தனர் பலரே
அவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமு தருந்தினர்; சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய ருயினும்
அன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனால்
வேம் பெனக் கொண்டனன் விண்ணவ ரமுதே.

''சுவாமீ! குடிலை எனப்படும் விசாலமாகிய வயலின் கண்ணே, அருள் என்னும் வித்தை விதைத்து, (அதிற்) கருணை என்னும் நீரைப் பாய்ச்சி, (அதனின்றும் முளைத்துளதாம்) வேதம் என்னும் மரத்தை வளர்த்தீர், அம்மரத்தின் கண்ணே உளவாம் பயன்கள் பலவே, அவற்றுள் பலர் இலையையே (நன்றெனக்) கொண்டு மகிழ்ந்தார்; (வேறு) பலர் இலையை விடுத்துத் தளிரையே (நன்றெனக்) கொண்டு

மகிழ்ந்தார். வேறு பலர் அரும்பையும் (வேறு பலர்) மலரையும் (வேறு பலர்) பிஞ்சையும் (வேறு பலர்) காயையும் (நன்று நன்றெனக்) கொண்டு மகிழ்ந்தார்கள். அந்த (இலை முதலிய) ஆறு உறுப்புக்களும் அங்ஙனம் (பலர்க்கும் பல வகையில்) பயன் படுவனவேயாக (பெரியோரால்) ஆராயப்படும் வேதாந்தம் என்று கூறப்படும் அந்த மரத்து உச்சியிற் பழுத்த தெவிட்டாத சுவையை உடைய அரிய பழத்தைப் பிழிந்து சாரமாகக் கொண்ட சைவ சித்தாந்தத் தேனமுதைப் பருகினோர் சிலரே ஆவர். 'யான் அந்தச் சிலரது உத்தமோத்தம நிலையை அடைதற்கு இயலாத அன்னியனாக விருப்பினும், அவ்வியல்பினராகிய அவரது செந்தாமரை மலர் போலும் அழகிய திருவடிகளை விளக்கிய மேலான தீர்த்தத்தை உட்கொண்டேனாதலினால், தேவாமிர்தத்தை வேம்பு எனக் கசப்பாகக் கொண்டு வெறுத்தேன்'' என்றார் குமரகுருபர சுவாமிகளும்.

இங்கே வேத மரத்து இலையினால் தார்க்கிக மதத்தினரும், தளிரினால் மீமாஞ்சக மதத்தினரும், அரும்பினாற் சாங்கிய மதத்தினரும், மலரினால் யோக மதத்தினரும், பிஞ்சினாற் பாஞ்ச ராத்திரி மதத்தினரும், காயினால் ஏகான்ம வாத மதத்தினருமாக மூலப் பிரகிருதியைப் பற்றிய அறுவித சமயத்தினர் குறிக்கப்பட்டனர். உச்சியிற் பழுத்த பழத்தினாற் சிவாத்துவித வேதாந்தமும்.

**'சித்தாந்தோ வேதசாரத்துவாத் |'**

''சைவ சித்தாந்தமும் வேத சாரமாயிருத்தலான்'' என்று சுப்பிர பேதாகமமும்.

**வேத சார மிதந்தந்திரம் |**

''இந்தச் சித்தாந்தம் வேதசாரம்'' என்றும்,

**வேதாந்தார்த்தம் இதம் ஞானம் சித்தாந்தம் பரமம் சுபம் |**

வேதாந்தார்த்தமாகிய இந்தச் சைவசித்தாந்த ஞானமானது பரமோ சிதமாம் என்று மகுடாகமமும், வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தம் என்று சிவப்பிரகாசமும் கூறுமாற்றால், உச்சியிற் பழுத்த சிவாத்துவித வேதாந்தமாகிய பழத்தின் சாரத்தினாற் சைவ சித்தாந்தமும் குறிக்கப்பட்டனவாம் என்க.

ஏகான்ம வாதமானது வேதாந்தம் என வழங்கப்படுவதேயாக அதனையே வேதமரத்தின் பழம் என்று கூறினால் என்னை எனின் அது பொருந்தாது, இந்தச் சிவஞான போத வசனாலங்கார தீபத்து ஒன்பதாஞ் சூத்திரத்துக் குறிக்கப்பட்டவாறு, (விமல சத்துவப்

பிரதான மூலப் பிரகிருதி மாயோபாதிகனும், கற்பித ஆபாசனுமாகிய (தாழ்ந்த) ஈசுவரனது சகுண வழிபாட்டை உணர்த்தும் பௌதிக யோகத்துக்கும், (மூலப் பிரகிருதி கடந்து, அதற்கப்பாலுள்ள சூக்குமப் பிரகிருதி கடந்து, அதற்கப்பாலுள்ள பரப் பிரகிருதிப் பாற்பட்டுக்) கற்பிதரும் ஆபாசகருமாகாது நித்தியராய், சாத்து விகாதி குணங்கள் இலராய், சர்வஞ்ஞதாதி குணங்களையுடைய ராயுள்ள மகாருத்திர சமஷ்டி ரூப சதாசிவதாண்டவேசுவரரது வழி பாட்டுக்குரிய அத்தியாசிரம யோகத்துக்கும் இடையிலே, (மூலப் பிரகிருதிக்கு மேலேயுள்ள ஏகான்ம வாதிகளது நிர்குணப் பிரமத்துக் குரிய) சாங்கிய யோகம் நிலைத்தமையானும்,

ஈச கேனுதி பரோபநிடதங்களிலும், இவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ள வைதிக சைவ வேதாந்த சூத்திரங்களிலும் நித்திய பதார்த்தங்களாகப் பேசப்படும் பதி, பசு, பாசங்கள் சொரூப நிலை பேசும் சைவ சித்தாந்தத்தில் முறையே சிவம், ஆன்மா, மலம் என நிற்பனவேயாக, பசுவாகிய (ஆன்மப்பிரமம்) ஒன்றனையே நித்திய பதார்த்தமாகக் கூறும் ஏகான்மவாத வேதாந்தம் உச்சி வேதாந்தப் பழமாய் முற்றுதாதலினலுமாம் என்க.

வைதிக சைவப் பகைவரால் உடைக்கப்படாத வச்சிரமலை போன்றும், அதிலே கட்டப்பட்ட மநோஹர ஆனந்த சுவர்ண மாளிகை போன்றும் முறையே உள்ளன வேதாந்த சூத்திர சைவ பாடியமும், அதன் சாரமாகிய சிவஞான போத சைவ சித்தாந்த சாத்திரமுமாம் என்க.

திருச்சிற்றம்பலம்

# சிவஞான போதம்

## பொதுவதிகாரம்

## பிரமாணவியல்

## முதற் சூத்திரம்

சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்கள் **பொதுவதிகாரம்; உண்மை அதிகாரம்** என இருவகை அதிகாரங்களாகப் பகுக்கப்படும். பொதுவதிகாரத்திலே பிரமாணவியலும் இலக்கணவியலும், உண்மையதிகாரத்திலே சாதனவியலும் பயனியலும் கூறப்படும்.

பிரமாணவியலிற் கூறப்படும் **பதி பாசம் பசு** என்னும் முப்பொருள்களுள் முதற்கண்ணே உலகத்துக்கு முதற்கடவுளாகிய பதி ஒருவர் சிறப்பு வகையால் உளர் என்று அநுமானப் பிரமாணங் கொண்டு வலியுறுத்தப்படுகின்றது.

**"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்**
**அந்த மாதி என்மனார் புலவர்"**

என்பது சூத்திரம்.

இதன் பொருள்: அவன் அவள் அது எனுமவை = ஒருவன் என்றும் ஒருத்தி என்றும் ஒன்று என்றும் (சுட்டப்படும் பிரபஞ்சத்) தொகுதி, மூவினைமையின் = (சிருட்டியாதி) முத்தொழில் உடைமையால்; தோற்றிய திதியே = (ஒருவனால்) தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளேயாம்; ஒடுங்கி மலத்து உளதாம் = (அது கன்ம மலம் பரிபாகமாகும் பொருட்டுத் தான் முன் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய) கடவுளினின்றும், மலம் நீங்கும் பொருட்டு (மீளத்) தோன்றுவதாம்; (ஆகலான்), அந்தம் ஆதி = அச்சங்கார கருத்தாவே (உலகத்துக்கு) முதற் கடவுளாம்; என்மனார் புலவர் = என்று சொல்லுவர் அறிஞர்.

(சூத்திரக் கருத்துரை): **சங்கார காரணராயுள்ள முதல்வரையே கருத்தாவாக வுடைத்து இவ்வுலகம் என்பதாம்.**

சூத்திரக் கருத்துரைப் பொருள்; நிவிர்த்தி கலை முதற் சாந்தியதீத கலை இறுதியாகிய ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மகா சங்காரத்தைச் செய்யும் முதல்வரையே தனக்கு

முதலாக உடைத்து அவன் அவள் அது என்று சுட்டி உணரப்படுவதாகிய உலகம் என்று வேதாகமங்களிற் கூறப்படுகின்றது. அதனை இச் சூத்திரம் அனுமானம் கொண்டு வலியுறுத்துகின்றது.

(சூத்திரத்தின் பிண்டப் பொருள்): ஆண் பெண் அலி என்றுற் போலும் பிரபஞ்சத் தொகுதி சிருஷ்டி திதி சங்காரம் என்னும் மூன்று தொழிலுடைமையால் அஃது ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டு நின்றுளதேயாம். அங்ஙனமாயின் அப்பிரபஞ்சம் எவரினின்று தோன்றியதாமெனின், அது தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய கடவுளினின்றும் தோன்றியதாம். அது ஒடுங்கியவாறே நில்லாது மீளத் தோன்றுவது எதன் பொருட்டாமெனின் (ஆன்மாக்களைப் பற்றிய) சகசமாகிய ஆணவமலம் தீர்ந்தொடுங்காமையால் மீளத் தோன்றுவதாம். இங்ஙனமாதலின் மகா சங்காரத் தொழில் செய்யும் கடவுளே முதற் கடவுள் என்று அறிவுடையார் கூறுவர்.

**சங்காரம் ஐவகைப்படும்.** அவை நிவிர்த்திகலா சக்கரத்தில் அடங்கிய பிருதிவி தத்துவத்தினதும், அதில் அடங்கிய காலாக்கினி புவன முதல் வீரபத்திரபுவனம் இறுதியாகிய நூற்றெட்டுப் புவனங்களினதும் சங்காரம் ஒன்று.

பிரதிட்டாகலா சக்கரத்தில் அடங்கிய அப்புதத்துவ முதற் பிரகிருதித்த்துவம் இறுதியாகிய இருபத்துமூன்று தத்துவங்களினதும், அதில் அடங்கிய அமரேச புவன முதல் சீகண்ட புவனம் இறுதியாகிய ஐம்பத்தாறு புவனங்களினதும் சங்காரம் இரண்டு.

வித்தியாகலா சக்கரத்தில் அடங்கிய புருடதத்துவ முதல் அசுத்த மாயா தத்துவம் இறுதியாகிய ஏழு தத்துவங்களினதும் அவற்றில் அடங்கிய வாம புனவம் முதல் அங்குட்ட மாத்திர புவனம் இறுதியாகிய இருபத்தேழு புவனங்களினதும் சங்காரம் மூன்று.

சாந்திகலா சக்கரத்தில் அடங்கிய சுத்த வித்தியா தத்துவ முதல் சாதாக்கிய தத்துவம் இறுதியாகிய மூன்று தத்துவங்களினதும் அவற்றில் அடங்கிய வாமை புவன முதல் சதாசிவ புவனம் இறுதியாகிய பதினெட்டுப் புவனங்களினதும் சங்காரம் நான்கு.

சாந்தியதீதகலா சக்கரத்தில் அடங்கிய சத்திதத்துவம் சிவதத்துவம் என்னும் இரு தத்துவங்களினதும் அவற்றில் அடங்கிய நிவிர்த்தி புவன முதல் அநாசிருதை புவனம் இறுதியாகிய பதினைந்து புவனங்களினதும் சங்காரம் ஐந்து என்றுணர்க.

ஒரு மாநிலத்தில் மாவட்டங்களும், அவற்றினுள்ளே வட்டங்களும் அடங்குமாறு போல, ஒவ்வொரு கலா சக்கரத்துள்ளும் தத்துவங்களும், அந்தத் தத்துவங்களுக்குள்ளே புவனங்களும் அடங்கி நிற்பனவென்று உணர்க.

இந்த ஐவகைச் சங்காரத்துள்ளும் சாந்தியதீதகலா சக்கரத்தின் சங்காரமே மகா சங்காரம் எனப்படும்.

**பஞ்சாரே சக்ரே பரிவர்த்தமாநே தஸ்மிந் நாதஸ்துர் புவநாநி விச்வா! |**

(சிருட்டியாதி) பஞ்ச (கிருத்திய அவயவங்களாகிய) ஆரங்களைத் (தனித்தனியே கொண்ட ஐந்து) சக்கரங்கள் மேன்மேல் வியாபித்திருக்கும் என்றும், அவற்றிலே (காலாக்கினி புவன முதல் அநாசிருதை புவனம் இறுதியாகிய) எல்லாப் புவனங்களும் நிலையுறுவன என்றும் இருக்கு வேதத்து, 1-ம் மண்டலத்து, 164-ம் சூக்தத்து, 13-ம் மந்திரம் கூறுகின்றது.

''வேதங்களை இதிகாச புராணங்கள் கொண்டு பொருள் செய்க'' என்று வேத வியாச முனிவர் ஆணை தந்தமையின், அவர் ஆணையைச் சென்னியிற் கொண்டு சுப்பிரமணியப் பெருமான் வாமதேவ முனிவருக்கு உபதேசித்தருளிய இருக்கு வேத மந்திரப் பொருள் கைலாச சங்கிதை எனப்படும் புராணத்தைக் கொண்டு ஈண்டுச் சுருக்கி வரையப்படுகின்றது.

நிவிர்த்திகலை சிருட்டி சக்கரம்: இதனை அதிட்டிப்பவர் பிரமர். அவருக்கு இரணிய கருப்பர், விராட்டு, புருடர், காலர் என நான்கு வியூகர் உளர், அவர் அச்சக்கரத்திற் சிருட்டித் தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

பிரதிட்டாகலை திதி சக்கரம்: இதனை அதிட்டிப்பவர் விட்டுணு, அவருக்கு வாசுதேவர், அநிருத்தர், பிரத்தியும்நர், சங்கர்டணர் என நான்கு வியூகர் உளர். அவர் இச்சக்கரத்திற் காத்தற்றொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

வித்தியாகலை சங்கார சக்கரம்: இதனை அதிட்டிப்பவர் உருத்திரர், அவருக்கு சிவன், அரர், மிருடர், பவர் என்னும் நான்கு வியூகர் உளர். அவர் இச்சக்கரத்திற் சங்காரத் தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வர்.

சாந்திகலை திரோதான சக்கரம்: இதனை அதிட்டிப்பவர் மகேசுவரர், அவருக்கு ஈசர், விசுவேசுவரர், பரமேசுவரர், சர்வேசுவரர் என நான்கு வியூகர் உளர். அவர் இச்சக்கரத்திலே திரோதானத் தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

சாந்தியதீத கலை அநுக்கிரக சக்கரம்: இதனை அதிட்டிப்பவர் சிதாகாச பதிப்பிரபுவாகிய சமட்டிரூப சதாசிவர். அவருக்கு, மேலே கூறப்பட்ட (சாந்தி கலா சக்கரத்து) மகேசுவரர் (வித்தியா கலா

சக்கரத்து) உருத்திரர் (பிரதிட்டாகலா சக்கரத்து) விட்டுணு, (நிவிர்த்தி கலா சக்கரத்துப்) பிரமர் என்னும் நான்கு வியூகர் உள்ளர். அவர் இச்சக்கரத்தில் அநுக்கிரகத் தொழில் செய்தலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்.

இன்னும் சாந்தியதீத கலா சக்கரப் பாலராய் நின்ற அந்தச் சமட்டிரூப பஞ்சகிருத்திய பரப்பிரம சதாசிவராகிய மகாருத்திரருக்குத் தான் மகா சங்கார காலத்தில் நிவர்த்திகலைப் பாற்பட்ட பிருதிவி தத்துவ புவன முதற் சாந்தியதீத கலா சக்கரத்துச் சுத்தமாயா தத்துவ புவனுந்தஞ் சங்கரிக்கும் வன்மை உளதாம். ஏனைக் கலா சக்கரங்களிலே உள்ள பிரமர், விட்டுணு, உருத்திரர் மகேசுவர ராயினோர்க்குத் தத்தம் கலாதத்துவ புவனங்களுக்கு மேற்பட்ட கலாதத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் வன்மை இலதாம் என்க.

மகாசங்கார காலத்தில் தத்துவ புவனங்களோடு அவற்றிற்கு அதிபதிகளாகிய பிரம்மா விட்டுணு முதலாயினோரும் ஒருங்கு சங்கரிக்கப்படுவரோ எனின், அவர்களும் ஒருங்கு சங்கரிக்கப்படா தொழிவாராயின் அது மகா சங்காரமெனப்படாதாகலான், சங்கரிக்கப்படுவாரென்றே கொள்க

"அர்வாக்தேவா அஸ்ய விசர்ஜநேநாதா கோ வேத யத ஆபபூவ!"

தேவர்கள் உலக சிருட்டிக்குப் பின்னர்த்தான் உளராயினர்கள் அங்ஙனமாயின் அது எங்கிருந்து உளதாயிற்று என்று யார் அறிவார்? என இருக்கு வேதம் வினவி,

யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வியோமந்சோ அங்கவேத யதிவா நவேத!

பரமவியோமமாகிய திருச்சிற்றம்பலத்தின் கண்ணே எவர் பிரபஞ்சத்துக்கு அத்தியக்ஷராய் (அதிபதியாய்) நின்றுரோ, அவரே அதனை அறிவார். மற்றெவரும் அறியார்.'' என்று உத்தரம் கூறுதலான் (கைலாச சங்கிதை கூறியவாறு) பிரமன் முதலிய தேவர்களெல்லாரும் சங்கரிக்கப்பட்டுப்போக சிதாகாயப் பிரபுவாகிய சதாசிவரே சேடித்து நின்றுர் என்றும், அவரே சிருட்டியாதி கிருத்தியங்களுக்குக் காரணராகிய முதல்வராவர் என்றும், அவரே மகாசங்காரஞ் செய்ய வல்ல மகாருத்திரராகிய முதல்வராம் என்றும், இவரையே முதலாக உடைத்து உலகம் என்றும் ஒருதலையாக உணரற்பாற்றும்.

இருக்கு வேதத்திலே (அதிபதியாகிய) அத்தியக்ஷராகக் கூறப்பட்டவர் யாரெனில்,

ய ஏஷோந்தர்ஹிருதய ஆகாசஸ் தஸ்மிஞ்சேதே சர்வஸ்ய வசீ சர்வஸ் யேசாந: சர்வஸ்யாதிபதி: ||

"எது இதயத்துள் ஆகாசமாய் (சிற்றம்பலமாய்) இருக்கின்றதோ, அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபதியும், அனைத்துக்கும் ஈசானருமாயினுர் அமர்கின்றூர்" என்று பிருகதாரணியோபநிடதம் சுட்டிக் கூறிய அந்த அத்தியட்சராகிய ஈசானரே அநுக்கிரக சக்கரத்துச் சதாசிவராம். இருக்கு வேதத்திற் கூறப்பட்ட வியோமமும் பிருகதாரணியத்தில் கூறப்பட்ட ஆகாயமும் திருச்சிற்றம்பலத்தை உணர்த்துவனவாம் என்க.

பசுவும் பாசமும் அதிகாரஞ் செய்து நிற்பதாகிய பதியும், அதிகாரத்தின் ஒழிந்து தன்னியல்பில் நிற்பதாகிய சிவமும் எனப் பதார்த்தம் நான்கு என்று சர்வஞ்ஞானோத்தராகமம் எடுத்துக் கூறிய பின்னர், அதிகாரஞ் செய்து நிற்பதாகிய பதியையுற்றுக் கூறுங்கால்,

பதி : சதாசிவோ ஞேயோ மந்திராத்மா மந்திரவிக்ரஹ : |
சர்வ மந்திராதி பச்சாஸௌ இருஷ்டிசம்ஹாரகாரக |

"பதியாகிய சதாசிவர் மந்திரான்மாவும், மந்திர சொரூபியாயும், எல்லா மந்திரங்களுக்கும் அதிபராயும், சிருட்டி சங்காரங்கள் செய்பவராயும் உள்ளார்" என்று கூறுகின்றமையால், மகாசங்கார ருத்திரரே அந்த அதிகாரத்தோடு கூடிய சதாசிவராவர். இவரும் கைலாச சங்கிதையில் கூறப்பட்ட சமட்டிரூப சதாசிவரும் ஒருவரே ஆவர். இவரை இருக்கு வேதத்து, 2-ம் மண்டலத்து 36-ம் சூக்தத்து 2-ம் மந்திரம் பரதர் என்று கூறுகின்றது. சிருட்டியாதி பஞ்சகிருத்திய நடனஞ் செய்தலினுலன்றோ சிவபிரான் பரதர் எனப்படும் தாண்டவேசுவர மூர்த்தியெனப்பட்டார் என்க. அரதத்தாசாரியரும் இங்ஙனம் பொருள் கொண்டமை சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்து "நாத" என்றற்றொடக்கத்து 94-ம் சுலோகத்தினுல் அறிக.

சிவம் சக்திஞ்ச சாதாக்யமீசம் வித்யாக்ய மேவச |

"சிவதத்துவம், சத்தி தத்துவம், சாதாக்கிய தத்துவம் ஈசுவர தத்துவம், சுத்த வித்தியா தத்துவம்" எனச் சிவதத்துவங்கள் ஐந்தையும் பிருகச்சாபாலோபநிடதம் கூறிற்று. இச் சுருதியில் கூறப்பட்ட சிவதத்துவம் ஐந்தனுள்ளே, சிவதத்துவம் சத்தி தத்துவம் என்னும் முப்பத்தாறும் முப்பத்தைந்தாம் தத்துவங்கள் இரண்டும் அருவத் திருமேனியையுடைய இலய சிவனுர்க்கும், சாதாக்கிய தத்துவம் என்னும் முப்பத்து நான்காம் தத்துவம் அருவுருவத் திருமேனியையுடைய போகாவத்தையினராகிய வியட்டி ரூப சதா

**சிவனுர்க்கும்,** ஈசுரம் சுத்தவித்தை என்னும் முப்பத்து மூன்ரும், முப்பத்திரண்டாம் தத்துவங்கள் இரண்டும் உருவத் திருமேனியை யுடைய அதிகாரவவத்தையினராகிய **மகேசுவரனுர்க்கும்** தானங்களா மென்றும் பவுட்கராதி ஆகமங்கள் கூறுகின்றன. அங்ஙனமாகவும் சாதாக்கிய தத்துவத்தினராகிய சதாசிவனுர்க்கு மேல் இலயசிவனே உளராக, திருச்சிற்றம்பலத்து **நிருத்தரூப தாண்டவேசுவரராகிய** (பஞ்சகிருத்திய) **அதிகாரத்தினீங்காத சதாசிவர் ஒருவர் உளர்** என்று கூறுதல் பொருத்தமன்ரும் எனிற் கூறுதும்.

**சாதாக்யஸ்ய ததூர்த்வேது விந்யசேந் நிருத்தரூபகம் |**

**''சதாசிவனுர்க்கு மேல் தாண்டவேசுவரரை நியசிக்க''** என்று மகுடாகமம் கூறுகின்றது.

**பிரம்மதத்வம்தோந்யஸ்ய விஷ்ணுதத்வம்ததூர்த்வத : |**
**தத்பரம்ருத்ரதத்வஞ்ச தத ஊர்த்வம்மகேச்வரம் |**
**சாதாக்யதத்வம்தந்மூர்த்நி பிந்துதத்வமத : பரம் |**
**ததூர்த்வம் நாததத்வஞ்ச சக்திதத்வமத : பரம் |**
**தத்பரம்சிவதத்வஞ்ச பூஜயேஜ்ஞாநமூர்த்திகம் |**
**சர்வகாரணதேவேசம் தியாத்வாதாண்டவமீச்வரம் |**
**ஆவாஹயேத்ததோதேவம் புஷ்பஹஸ்தம் சுகாசந ||**

பிரமாவுக்கு மேல் **விட்டுணு;** அவருக்கு மேல் **உருத்திரர்;** அவருக்கு மேல் **மகேசுவரர்;** அவருக்கு மேற் **சதாசிவர்;** அவருக்கு மேல் **விந்து**, அதற்கு மேல் **நாதம்**, அதற்கு மேற் சத்தி, அதற்கு மேல் (சிருட்டி திதி சங்காரம் என்னும்) அனைத்துக்கும் காரணரும், தேவநாயகரும், ஞானமூர்த்தியுமாகிய **சிவதத்துவ தாண்டவேசுவரர்.** அவரைச் சுகாசனத்திருந்து மலர்களைக் கையிலே கொண்டு **சாதாக்கிய தத்துவத்துச்** சதாசிவரில் ஆவாகனஞ் செய்க'' என்று அந்த மகுடாகமம் கூறுமாற்ருல், தாண்டவேசுவரர் சிவதத்துவத் தினர் என்பது பெறப்பட்டது. படவே இலய சிவனுக்கும் தாண்டவேசுவரனுக்கும் சிவதத்துவமே இடம் என்பதறியக் கிடத்தலின், விரோதமுருது என்னை?

**லயசிவ சாமீப்யாந்நவதத்வ சமஷ்டி ரூபத்வாச்ச லயசிவே**
**தஸ்யாந்தர் பாவோ ஞேய : |**

''இலய சிவத்துக்குச் சமீபத்துள்ளாராதலினுலும், பிரமா முதலிய ஒன்பது தத்துவ சமட்டி ரூபராயிருத்தலாலும், இலய சிவத்திலே அந்தத் தாண்டவேசுவரர் அந்தர்ப்பாவமாயுளராக அறியற்பாலர்'' என்று கூறப்படுதலாலும், இலய சிவமும் நிருத்த மூர்த்தியும் நிட்களத்தால் ஒன்ருகக் கொள்ளப்படுதலின் என்க.

இன்னும் இதனுலே, மகேசுவர மூர்த்தம் இருபத்தைந்தனுட்பட்ட தாண்டவேசுவரர் வேறு, மகுடாகமங் கூறிய தாண்டவேசுவரர் வேறு என்பதும் தெள்ளிதினுணர்க.

இந்த மகாருத்திர தாண்டவேசுவரர் பிரமா, விட்டுணு, உருத்திரர் என்னும் மூவர்க்கும் மேம்பட்ட துரியமூர்த்தியென்று கைவல்லியம் தைத்திரீய ஆரணியக முதலிய சுருதிகள் முழங்கும் உண்மை உணரமாட்டாது, அம்மூவருளொருவராகிய காரியருத்திரர் என்றும், பிரமாவின் நெற்றியினின்று ஓர்கால் தோன்றிய நீலலோகித ருத்திரர் என்றும் உரைத்து இடர்ப்படுவாரை நோக்கியன்றே.

''தேவரிலொருவனென்பார் திருவுருச் சிவனைத் தேவர் மூவராய் நின்றதோரார்'' எனவும்,

''தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில்கள் பயந்து காத்தழிக்கு மற்றை, மூவர் கோனய் நின்ற முதல்வன்'' எனவும்,

''முந்து நடுவு முடிவுமாகிய மூவரறியாச் சிந்துரச் சேவடியானை'' எனவும்,

''அரியாகிக் காப்பான் அயனய்ப் படைப்பான் அரனய் அழிப்பவனுந் தானே'' எனவும் திருவாக்குகள் எழுந்தனவென்று உணர்க.

காணப்பட்ட காரியமாகிய குடத்தைக் கொண்டு அதனை வனைதற்குரிய காரணனுகிய குலாலன் ஒருவன் உளன் என்று அநுமானித்தல் போன்று, காணப்பட்ட காரியப் பிரபஞ்சத்தைக் கொண்டு, அதனைப் படைக்க வல்ல காரணராகிய கடவுள் ஒருவர் சிறப்பு வகையால் உளர் எனவும், அந்தக் கடவுள் மகா ருத்திரரே யாவர் எனவும், பிறப்பிறப்பிற் பட்டுழலும் பிரமா விட்டுணு முதலாயினேர் அன்னரல்லர் எனவும் மேலே காட்டிய சுருதிப் பிரமாணங்களாலே தெற்றெென அறிக.

## முதற் கூறு

**உலகம் தோற்றம் நிலை இறுதியாகிய முத்தொழில் உடையது.**

அவன், அவள், அது என்ற அவயவப் பகுப்புடைத்தாயிருக்கும் காரணத்தாலும் பலவாய்ச் சடமாயிருக்கும் காரணத்தாலும், சுட்டி அறியப்படாத முயற்கோடு முதலிய பொய்ப்பொருள் போலவன்றி, மெய்யாகச் சுட்டி அறியப்படும் காரணத்தாலும், இவ்வுலகம் தோன்றுதலாகிய பிறப்பும், நிலையுறுதலாகிய இருப்பும், அழிதலாகிய

இறப்பும் என்னும் முத்தொழில்களை யுடையது. இதனால் உலகம் நித்தமாய்க் காணப்படுவதேயாக, அதனை முத்தொழிலுடையதெனல் பொருந்தாதென்று கூறும் மீமாஞ்சகர் மறுக்கப்பட்டார்.

உலகத்துக்கு உளவெனக் கூறும் தோன்றுதல் முதலிய முத்தொழில்கள் கண்ணுக்குப் புலப்படவில்லையே என்று கூறும் உலகாயதரை மறுத்துக் கூறும் உதாரணம் வருமாறு:

(வெண்பாப் பொருள்)

பிரபஞ்சத்துக்குத் திதி கிருத்தியம் நிகழுங்கால், அது தோன்றும் செயலையும் அழிதலாகிய தொழிலையும் துணையாகக் கொண்டே நிகழும்; எங்ஙனமெனின், தாய் தந்தையர் நிலையுற்றிருக்குங்கால் மக்கள் பிறக்கவும், இருக்கவும், இறக்கவும் காணப்படுகின்றமை போலாம். அங்ஙனமாயின், ஒன்று பிறக்க, ஒன்று இருக்க, ஒன்று அழிவதன்றி எல்லாம் ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழியக் கண்டிலம் எனின் கார்ப்பருவமாகிய காலத்தில் ஒவ்வோர் இனமாகிய உயிர்கள், செடிகள் முதலியன ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழியக் காண்டலானும், பூகம்பம், எரிமலை, பெருவெள்ளம், போர் முதலியவற்றால் ஒருங்கே இருந்தவரும் இருந்தனவுமாகிய எல்லாப் பொருள்களும் ஒருங்கே அழியக் காண்டலானும், அங்ஙனமே என்றைக்காயினும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் பூதங்களை முதலாகவுடைய இவ்வுலகத் தொகுதியும் ஒருங்கே அழிதற்குரிய காலம் வருமென்று அக்காட்சியளவைகள் பற்றி ஆராய்ந்தறிந்து கொள்க.

இரட்டுற மொழிதலால் அவன் அவள் என்பதினாற் பெறப்படும் உயர்திணையும், அது என்பதினாற் பெறப்படும் அஃறிணையும் என்னும் இருதிணைப் பகுதியினையுடைத்தாகிய சொற்பிரபஞ்சக் கூட்டம் இங்ஙனம் அவயவப் பகுப்புடைமையானும், சடமுமாய்ப் பலவுமாக லானும், சுட்டி அறியப்படுதலானும், திதியின் கண்ணே தோற்றமும் அழிவுமாகிய இரண்டு தொழிலும் காணப்படலானும், அது தோன்றி நின்று அழிதலையுடைத்து எனவும் பொருள் கொள்ளப்படும்.

இங்ஙனம் கூறுதல் வேதமாகிய சொற்றொகுதி தோன்றி நின்று அழிதலாகிய முத்தொழிலுடைத்தென்று பெறப்பட்டு, வேதம் நித்தியமென்று கூறும் சுருதிகளோடு மாறுபடுமே எனின் மாறுபடாது என்னை? நித்தியராகிய சிவபெருமானால் அருளப்பட்டமையானும், இறுதிக் காலத்திலே பரமசிவனிடத்து ஒடுங்கிய வேதம் படைப்புக் காலத்தில் முன்போலவே தோன்றுதலானும், அது நித்தியமென்று பசரித்துக் கூறப்படும் என்பதே கருத்தென்க.

## இரண்டாங் கூறு

**அஃது அவற்றை அரனாலே உடையது.**

(இ. பொ.) ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் சிருட்டியாதி முத்தொழிலையும் சிவபெருமானாலே உடையது என்பதாம்.

இல் பொருளாகிய முயலின் கொம்புக்கு இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்காலத்தினும் தோற்றம் இன்மையானும், உலகத்துக்குத் தோற்றம் முதலியவை காணப் படலானும் அது சற்காரியப் பொருளே (உள்பொருளே) யாம்; ஆகலின், பிரபஞ்சம் தோன்றி அழியுமேனும், அஃது இல் பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி அழியும் எனப் புத்தர் கூறுவது பொருந்தாது.

மண் முதலாகிய முதற்காரணத்தினின்று உளவாகிய குட முதலிய காரியப் பொருள்களுக்குக் குலாலன் முதலிய நிமித்த காரணராகிய செய்வோரையின்றி வனைதல் முதலிய செய் தொழில்கள் நிகழமாட்டா; அதுபோல, மாயையாகிய முதற் காரணத்தினின்று உண்டாகும் பிரபஞ்சமாகிய காரியப் பொருளுக்கு நிமித்த காரணனாகிய ஓர் கருத்தாவின்றிப் படைத்தல் முதலிய செய்தொழில்கள் நிகழமாட்டாவாம்; ஆதலாற் பிரபஞ்சத்திற்கு ஒரு கருத்தாவாகிய செய்வோன் உளன் என்க. உள்பொருளாகிய பிரபஞ்சம் தத்தம் முதற்காரணத்தினின்றும் தாமே தோன்றி அழியும். அதற்கு ஓர் கருத்தா வேண்டா என்னும் சாங்கியர் கூற்றும் பொருந்தாதென்க. இதனாற் பொதுவகையாற் பிரபஞ்சத்துக்கு முதல்வன் ஒருவன் உளன் என்பது சாதிக்கப்பட்டது.

(வெ. பொ.) மாசங்கார காலத்திலே ஒடுங்கி நின்ற பிரபஞ்சம், தான் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய மாசங்கார கர்த்தாவினின்றே சிருட்டி காலத்தில் மீள உளதாம். ஒடுங்கிய உலகம் ஒடுங்கியவாறே நில்லாது மீள உண்டாக வேண்டா, அங்ஙனம் உண்டாக வேண்டு மாயின் முதற்கண்ணே ஒடுங்காது நிலைபெறவே அமையும்: அங்ஙனம் நிலைபெறாது ஒடுங்குதலும் மீளத் தோன்றுதலும் எதன் பொருட்டு? எனின், பிரபஞ்சம் கன்மமலம் பரிபாகமாகும் பொருட்டே ஒடுங்கும் எனவும், ஆணவ மலம் பரிபாகமாகும் பொருட்டே மீளத் தோன்றும் எனவும் ஓர்ந்து உணர்க.

அங்ஙனமாயின் முன்னின்ற பிரபஞ்சம் நாசமாய்விட வேறோர் பிரபஞ்சம் தோன்றும் என்று கூறாது ஒடுங்கிய பிரபஞ்சந்தான் மீள உளதாம் என்றற்குப் பிரமாணம் யாதோ? எனின், நெல்லானது

கமுகாய் முளைக்காது நெல்லாயே முளைத்து நீளுதலும், பாக்கானது நெல்லாய் முளைக்காது கமுகாயே முளைத்து நீளுதலும் போல, எது எவ்வாறு நின்று ஒடுங்கியதோ அஃது அவ்வொடுங்கியவாறே உளதாம் என்னும் நியமமே பிரமாணம் என்க.

குட முதலிய காரியங்கள் தத்தம் முதற்காரணமாகிய மண் முதலியவற்றில் ஒடுங்குமெனவே கொள்ளப் படுதலின் பிரபஞ்ச மாகிய காரியத்துக்கு முதற் காரணமாகிய மூலப்பிரகிருதி நாராயணரது வடிவமேயாதலான், அந்தப் பிரபஞ்சமானது அந்த நாராயணரிடத்து ஒடுங்குமெனக் கொள்ளுதலே பொருத்த மாவதன்றி, முதற்காரணத்தின் வேறாகிய நிமித்த காரணர் எனப் படும் சங்கார கர்த்தாவினிடத்து ஒடுங்குமென்று கூறுதல் பொருந்தா தென்னும் பாஞ்சராத்திரிகள் கூற்றை மறுத்து உதாரண வாயிலாக விளக்குவேம்.

(வெ. பொ.) பிரபஞ்சமானது மூலப்பிரகிருதி வடிவினராகிய திதி கர்த்தா எனப்படும் நாராயணரிடத்தில் ஒடுங்கியதெனில், மூலப் பிரகிருதிக்கு மேலுள்ள (வித்தியாகலையைச் சார்ந்த) அசுத்த மாயா தத்துவ புவனங்களும், அதற்கு மேற்பட்ட (சாந்தி, சாந்தியதீத கலைகளைச் சார்ந்த) சுத்த மாயா தத்துவ புவனங்களும் அம்மூலப் பிரகிருதியினால் வியாபிக்கப்படாமையின், அதற்குக் கீழுள்ள ஏக தேசத்தனவாகிய (நிவர்த்தி, பிரதிட்டா கலைகளைச் சார்ந்த) தத்துவ புவனங்கள் மாத்திரம் அம்மூலப் பிரகிருதியில் ஒடுங்குவனவாமன்றி மாயா காரியத் தொகுதி முழுவதும் அதில் ஒடுங்காதென்க.

அங்ஙனமாயின், மாயா காரியத் தொகுதி முழுவதும் எங்கே ஒடுங்குமெனில் அது திதி கருத்தாவாகிய நாராயணரோடும், சிருட்டி கருத்தாவாகிய பிரமாவோடும் தான் தோன்றுதற்குக் காரண மாயுள்ள அந்த மகா சங்கார ருத்திர தாண்டவேசுவரரிடத்தே ஒடுங்கும் என்க.

இதனால் பிரம விட்டுணுக்களும் அழிவரென்பது பெறப் பட்டது; படவே, ஒடுங்கின மகாசங்கார கருத்தாவினன்றி உற்பத்தி யில்லை என்று சிறப்பு வகையால் முதற்கடவுளது உண்மை சாதிக்கப் பட்டது. இதனால் நாராயணரிடத்திற் பிரபஞ்சம் ஒடுங்கும் என்னும் பாஞ்சராத்திரர் கூற்று மறுக்கப்பட்டதாயிற்று. மகாசங்கார கர்த்தாவின் மாட்டுப் பிரபஞ்சம் ஒடுங்கி உளதாகலின் இந்த ஒடுங்கிய அவத்தையிற் பிரபஞ்சத்தின் காரண சத்தி சமூகமாய் சூக்குமமாய் நிற்பது ஒன்று உண்டு; அதுவே, பிரபஞ்சத்துக்கு முதற் காரணமாகிய மாயையாமெனத் தெளிக. பிரபஞ்சமானது தனக்கு முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்குவதன்றி நிமித்த

காரணரிடத்தில் ஒடுங்குமென்றல் பொருந்தாது என்றும் யாது எதில் ஒடுங்கிற்றே அஃது அதனில் உற்பத்தியாம் என்னும் முறைமை பற்றி, மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும், அதற்கு ஓர் கருத்தா வேண்டா என்றும் சாங்கியர் கூறுவர். அது மண்ணில் ஒடுங்கிய குடத்தை மண்ணே மீளத் தோற்றுவிக்கும், அதனைத் தோற்றுவித்தற்கு ஓர் குலாலன் வேண்டா என்பது போலாமாதலின், அக்கூற்றுப் பொருந்தாது; ஆதலின் முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்கிய பிரபஞ்சத்தை நிமித்த காரணராகிய கருத்தாவானவர் அதனின்று மீளத் தோற்றுவிப்பார் என்பதை விளக்கும் உதாரணம் வருமாறு:

(வெ. பொ.) முளைக்கு ஆதாரம் வித்து; வித்துக்கு ஆதாரம் நிலம்; அதுபோலப் பிரபஞ்சத்துக்கு ஆதாரம் மாயை; மாயைக்கு ஆதாரம் சிவசத்தி. அச்சத்தி சிவனுக்கு வேருதலின்மையின், சிவன் பிரபஞ்சத்திற்கும் மாயைக்கும் ஆதாரமாதல் தானே பெறப்படும். அதனை,

''ஏதஸ்மிந் கல்வக்ஷரே கார்க்யாகாச ஓதச்ச ப்ரோதச்சேதி |''

''கார்க்கியே! இந்த அக்ஷரப்பிரம சிவத்தில்தான் (அருள் ஞான சத்தி எனப்படும்) ஆகாயம் குறுக்கும் மறுக்குமாய் அமைந்தது'' என்னும் பிருகதாரணிய சுருதியானும்,

''குணபூதா பராசக்திஸ் ததாச்ரயா குணீ சிவ: |''

''சிவசத்தியார் குணம்; அவர்க்குப் பற்றுக் கோடாகிய குணிப் பொருளாயினர் சிவபிரான்'' என்னும் காலோத்தர சுருதியானும் உணர்க.

நிலம் குளிர்ந்த போது வித்து அதனிடத்து உளதாக, அதனின்றும் முளை தோற்றுமாறு போல, சிவனரது அபின்ன சத்தி சங்கற்பித்த போது, அதனை யாதாரமாகக் கொண்டே மாயையினின்று பிரபஞ்சம் தோன்றும். அந்த மாயையானது சத்தியின் கண்ணுள்ளதாய் நின்று, அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக அவ்வக்காரியங்களை மாறுபடாது தோற்றுவிக்கும் வன்மையுடையதேயன்றி, அல்லாதவிடத்து அதனையுடையதன்று. அது நிலம் குளிர்ந்தவிடத்து வித்து அதன்கட் கிடந்தன்றி முளையைத் தோற்றுவிக்காத முறைமை போலாம். ஆதலால் மாயையில் ஒடுங்கித் தோன்றிய பிரபஞ்சம் தனக்கு ஆதாரமாய் நின்ற சிவபிரானது சத்தியில் ஒடுங்கித் தோன்றியதேயாம் என்பது. இதனற் சிவனரது தூல பஞ்ச கிருத்தியம் உரைக்கப்பட்டவாறு காண்க.

வேட்டை வாளி எனப்படும் குளவியாதற்கு உரிய புழுவுக்கு வேட்டைவாளியானது அப்புழுவிற்கு வேண்டியவற்றை அமைத்து அதனைத் தான் ஆக்குமாறு போல, சிவபெருமான் அவ்வவர்க்கு வேண்டிய உருவத்தை அவ்வர்க்கு அவ்வப்போது கொடுத்து, அவ்வக் கன்மங்களுக்கு இயைந்த பயனை அவ்வவர்க்கு அருளுவார்.

ஒரு காரியத்தை, ''இஃது இவ்வாறுருக'' என்று கருதலாகிய சங்கற்ப ஆற்றல் கொண்டு செய்பவரும், கை முதலிய அவயவ ஆற்றல் கொண்டு செய்பவரும் எனக் கர்த்தாக்கள் இருவகைப் படுவர்; சங்கற்பவாற்றலாற் செய்யவல்லவர் சிவபெருமான் ஒருவரே யாவர்; அவயவ ஆற்றலாற் செய்பவர் குலாலன் முதலியோராம். சங்கற்ப மாத்திரத்தினுற் செய்யும் சிவபெருமானுக்குக் குலால ஞதியோர் போலக் கட்டுண்டு தொடக்குறுதலாகிய குற்றங்கள் எய்தாவாம்; ஆதலால் அக்குற்றங்களுடைய குலாலன் முதலியோர் உவமை சிவபெருமானுக்கு ஒருபுடை உவமையாய்ச் செல்வதன்றி முற்றுவமையாகச் செல்லாதென்க.

(வெ. பொ.) காலமானது இறந்தகாலம் நிகழ்காலம் எதிர் காலம் முதலியவாக வெவ்வேறு வகைப்பட நின்று தொழிலனைத்துஞ் செய்தும் தான் விகாரமுறாது நிற்றல் போல, கரணங்களாற் படைக்காமலும், காவாமலும் அழிக்காமலும், சங்கற்ப ஆற்றலினுலே அவற்றைச் செய்தும் வருதலால், அநாதிமல முத்தராகிய சிவபெருமானுக்கு விகார முதலிய குற்றங்கள் நேராவாம். அவர் பந்தங்களாற்றொடக்குண்ணுதிருத்தல் எவற்றை ஒக்குமோ எனில், ஒருவன் கற்ற நூலிலே உள்ள சொல்லும் பொருளும் அவனுள்ளத் திலே உதிக்குங்கால், அவன் உள்ளமானது அவற்ருற்றொடக்குண்ணுத தன்மையினையும் கனவின் கண்ணே கண்டவைகளை நனவின் கண்ணே நன்கு புலப்படுமாறு அறிந்தவன் அப்பொழுது அக்கனவினுல் தொடக்குண்ணுத தன்மையினையும் ஒக்கும் என்பது.

## மூன்ருங் கூறு

### சங்காரக் கடவுள் ஒருவனே வினைமுதல்

(சூ. பொ.) மகா சங்காரத் தொழில் செய்யும் பெருமான் ஒருவரே எச்செயலுக்கும் முதல்வராக ஏனை யாவரும் அம்மகா சங்கார கருத்தாவினுற் சிருட்டியாதி முத்தொழிற்பட்டுச் சுதந்திரமின்றி நிற்பார் என்பது.

ஒவ்வொன்ருய்ச் சுட்டி அறிகின்ற சேதனப் பிரபஞ்சமானது அங்ஙனஞ் சுட்டுணர்வின்றி நின்று பிரபஞ்சமனைத்தையும் ஒருங்கு அறிந்து நிற்கும் சங்கார கர்த்தாவின் வழிப் பரதந்திரமாய்

நிற்பதன்றிச் சுதந்திரமாய் நிற்கமாட்டாமையாற் சங்கார கர்த்தா ஒருவரே முதற் கடவுள், ஏனையோர் அவன் அருள் வழிப்பட்டோரே என்பது.

தேர் முதலியவற்றைப் பலர் கூடிச் செய்கின்றார்; அது

**ஏகோஹவை நாராயண ஆசித் ।**
நாராயணர் ஒருவரே இருந்தார்'' என்றும்,

**ஹிரண்ய கர்ப்ப : சமவர்த்தத அக்ரே ।**
''பிரமா முதற்கண்ணே இருந்தார்'' என்றும்,

**நகரிந்திர துவதுத்தர : ।**
''இந்திரனே, உன்னில் மிக்கவன் இல்லை'' என்றும்

**அக்நிரக்ரேபிதமோ தேவதாநாம் ।**
''தேவர்களுக்கெல்லாம் முதன்மையாயுள்ள அக்கினி'' என்றும்,

**சூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷச்ச ।**
''இறந்தும் நிகழ்வதுமாகிய உலகத்துக்கு ஆன்மாவாயுள்ளான் சூரியன்'' என்றும், சுருதிகள் கூறுகின்றமையால் விளங்கும்.

ஆதலால் தேரினும் பார்க்க அதி விசித்திரமாயுள்ள பிரபஞ்சத்தைப் படைத்தற்கு நாராயணர், இந்திரன், அக்கினி, சூரியன் முதலாகிய அநேகரைக் கடவுளராகக் கொண்டால் என்னை ? என்று அநேகேசுவரவாதிகள் கூறின், அவரெல்லாரும் குட முதலிய வற்றுக்குக் குலாலன் முதலாயினோர் உளராதல் போல, பிரபஞ்சத்தின் ஏகதேசத்துக்கு அவாந்தர காரணமாய் இருப்பாரன்றி முதற் கடவுளர் ஆகார் என்க.

**இந்திரம் மித்ரம் வருணமக்நிமாகுரதோ திவ்ய :**
**ஸசுபர்ணோ கருத்மாந் ।**
**ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தி......**

''சத்தாகிய ஒருவரையே இந்திரன், மித்திரன், வருணன், அக்கினி அழகிய திவ்ய கருடன் என்றும் பலவகையாக (என்றமையால் இயமன், வாயு, நாராயணன், பிரமா என்றும்) அறிஞர் கூறுகின்றனர். என்று இருக்கு வேதம் கூறுமாறு, அந்நாராயணர் முதலிய பெயரெல்லாம் சங்கார காரணராகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்குமாதலான், செய்துஞ் செய்வித்தும் எல்லாத் தொழில்கட்கும் கர்த்தாவாய் நிற்கும் முதற்கடவுள் மகாசங்கார கர்த்தாவாகிய உருத்திரரேயாவர்.

புருஷோவை ருத்ர: சந்மஹோ நமோநம: |

"புருஷராவார் மகானுகிய சத்து எனப்படும் உருத்திரரே; (அவருக்கு) வணக்கம் வணக்கம்'' என்னும் சுருதியினுல் இருக்கு வேதத்திற் சத்து என்று கூறப்பட்டவர் சிவபெருமானேயாவர். சுட்டுணர்வுடைய சேதனப் பிரபஞ்சமாகிய பசுக்கள் பலவாயினுற் போல, சுட்டுணர் வின்றி நின்ற சங்காரக் கடவுளரும் பலர் எனக் கொண்டால் என்னை? ஒருவரே என்று கொள்ளுதற்குப் பிரமாணம் என்னை? எனிற் கூறுதும்; இவ்விஷயத்தையுற்று ஸ்ரீ நீலகண்ட சிவாச்சாரிய சுவாமிகளருளிய சைவ பாடியத்து ஈக்ஷத்தியதிகரணத்திற் காண்க (1. 1. 5-12)

(வெ. பொ.) அயன் மால் முதலிய சேதனப் பிரபஞ்சத் தொகுதிக்குட்படாத பரப்பிரம சிவபெருமானுலே அப்பிரபஞ்சத் தொகுதியானது படைக்கப்பட்டு, காக்கப்பட்டு, அப்பரம சிவனிடத்தே சங்கார முறுதலால், அந்தச் சங்காரக் கடவுள் ஒருவர் தான் பிரபஞ்சத்துக்கு முதற் கடவுளாவரன்றி ஏனையோர் அவ்வியல் பினராகார் என்க.

காரியமாகிய பிரபஞ்சம் சடமாகலானும், சேதனப் பிரபஞ்ச மாகிய பசுக்களும் ஆணவாதி பாசத்திஞற் கட்டுண்டு சுட்டுணர் வினவாய் நிற்றலானும், அவற்றை நடாத்துமாறு அவற்றுக்கு வேருய் ஓர் கடவுள் உளர் என்பது உணரப்படும். படவே, பிரபஞ்சம் விசித்திரமாய்த் தோற்றுதலால் அதனைத் தொழிற்படுத்தும் முதற் கடவுள் முற்றறிவு முற்றுத் தொழில் என்னும் இறைமைக் குணங் களுடையவர் என்பதும் பெற்றும். பெறவே, இவ்விறைமைக் குணங்களையுடைய கடவுளே அமையுமாதலின் மேலும் அவ்வியல்பின ராகிய கடவுளர் உளர் எனக் கோடல் மிகை என்னும் குற்றத்தின் பாலதாம். அங்ஙனமாயின்,

ததா வித்வாந் புண்யபாவே விதூய நிரஞ்சந:
பரமம் சாம்ய முபைதி (முண்டகம் 3.1.3)
ததாசிவவந் முக்தா: சர்வஞ்ஞத்வாதி தார்மிகா :|
இத்யேவம் குணசங்கிராந்த சாம்யபக்ஷோ நிரூபித ;|

"வித்துவான் நன்மை தீமை ஒழித்து மலம் நீங்கினவனுய்ப் பரம சாமி யத்தை அடைகின்ருன்'' என்றும், "அங்ஙனமே சிவபெருமானைப் போல முத்தராயினேரும் சர்வஞ்ஞத்துவாதி குணங்களையுடையரா கின்ருர்; அங்ஙனம் குணங்கள் ஆன்மாவிற் சங்கிரமிக்கும் என்னும் சாமியபக்ஷம் நிரூபிக்கப் பட்டது'' என்னும் வேதத்தினும் சிவாகமத் திலும் காணப் படுதலின், அச்சேதனப் பிரபஞ்சமாகிய பசுக்கள் முதற்கடவுளாவாரோ எனின், முத்தி தசையினும் அவ்வான்மாக்கள் பலவாற்ருனும் அடிமையேயாம்; எங்ஙனமெனின், இருணீங்கிய விடத்தும் கண்ணுக்குக் காட்சி சூரியனையின்றி அமையாதவாறு

போல, மலம் நீங்கப்பெற்ற முத்தி தசையினும் ஆன்மாவுக்கு அறிவு விளங்குதல் உடனின்று அறிவிக்குஞ் சிவத்தையின்றி அமையாமையானும், கண், படிகம், ஆகாயம் போல, ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்பதன்றிச் சிவபெருமானைப் போலத் தனித்து நிற்கும் ஆற்றலின்மையானும், விளக்கொளியுள் அடங்கிய கண்ணொளி போல, சிவ வியாபகத்துள் அவ்வான்மா வியாப்பியமாய் அடங்கி நிற்கும் இயல்பினதாய், சிவாநுபவம் ஒன்றினுக்கே உரியதா தலானும் அது சிவபெருமானைப் போலப் பஞ்ச கிருத்தியஞ் செய்தற்கு உரித்தாதலின்றிப் பலவாற்றானும் அப் பரம்பொருளுக்கு அடிமையேயாம் என்பது. (இதனால் ஆன்மாக்கள் பஞ்ச கிருத்தியஞ் செய்யும் என்னும் சிவ சமவாதிகள் மதம் மறுக்கப்பட்டது).

**முதற் சூத்திரத் தொகைப் பொருள் :**

பிரபஞ்சம் நித்தப்பொருள், அது முத்தொழிலுடையது எனக் கூறல் பொருந்தா தென்னும் மீமாஞ்சகர் கொள்கையும், பிரபஞ்சத்தின் தோற்றக் கேடுகள் கண்ணுக்குப் புலப்படாமையின் பிரபஞ்சம் நித்தப் பொருளென்னும் உலகாயதர் கொள்கையும், பிரபஞ்சம் இல் பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி அழியு மென்னும் புத்தர் கொள்கையும், பிரபஞ்சம் உள்பொருளாயின் கருத்தா வேண்டாம் என்னும் சாங்கியர் கொள்கையும், திதி கர்த்தாவாகிய நாராயணரே முதற் கடவுளாதல் வேண்டுமென்னும் பாஞ்சராத்திரிகள் கொள்கையும், அதிவிசித்திரமாகிய பிரபஞ்சம் ஒருவனாற் செய்யக் கூடாமையின், அயன் முதலிய அநேகர் கர்த்தராதல் வேண்டுமென்னும் அநேகேசுவரவாதிகள் கொள்கையும், ஆன்மாக்கள் மலம் நீங்கிய முத்திதசையிற் பஞ்சகிருத்தியம் செய்வ ரென்னும் சிவ சமவாதிகள் கொள்கையும் மறுத்துச் சித்தாந்தஞ் செய்து பதிப் பொருளாகிய மகா சங்கார ருத்திர சமட்டி ரூப சதா சிவ தாண்டவேசுவரப் பெருமான் ஒருவரே முதல்வராய் உளர் என்று சிறப்பு வகையால் நாட்டப்பட்டதா மென்பது.

## பொதுவதிகாரம்

## பாச உண்மை

## இரண்டாம் சூத்திரம்

**"அவையே தானே யாயிரு வினையிற்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே.**

(இ-ள்) அவையே ஆய் = (சிவபிரான்) உயிர்களேயாய்; தானே ஆய் = (உயிர்களுக்கு) வேறுமாய்; அவையே தானே ஆய் = (உயிர்க்குயிராதற் றன்மையால்) உடனுமாய்; (ஆணையின்) இருவினை

யின் போக்கு வரவு புரிய = (தமது ஆணையாகிய சத்தியினால் ஆன்மாக்கள்) இருவினை காரணமாக இறத்தலையும் பிறத்தலையுஞ் செய்யும்படி; ஆணையின் நீக்கமின்றி அன்றே நிற்கும் = (தமது சமவேத) ஆஞ்ஞா சத்தியினின்றும் பிரிப்பின்றி அநாதி தொடுத்து நின்றருளுவார். (எ-று)

(சூ. க. ரை.) **புநருற்பவம் வருமாறு உணத்துதல் நுதலிற்று.**
(புநருற்பவம் = மீள உண்டாதல்)

(க. பொ.) மகா சங்காரருத்திரரினின்றும் பிரபஞ்சம் மீள உளதாம் முறையை வகுத்து உணர்த்துதல் வாயிலாக, நிமித்த காரணராகிய சிவபெருமானுக்குச் சிற்சத்தியாகிய துணைக்காரண முதலிய உள என்று உணர்த்துகின்றது.

(சூ. பி. பொ.) மேலைச் சூத்திரத்தினால் உலகத்துக்கு நிமித்த காரணரெனப் பெறப்பட்ட பதியாகிய சிவபெருமான் **1. கலப்பினால்** உடல் உயிர் போல **அவ்வுயிர்களேயாய், 2. பொருட்டன்மையாற்** கண்ணின் ஞாயிறு போல அவ்வுயிர்களின் வேறுமாய் **3. உயிர்க்கு உயிராதற் றன்மையாற்** கண்ணொளியின் ஆன்ம போதம் போல உடனுமாய் நின்று, ஆணை எனப்படும் தமது சிற்சத்தியினால் வரும் நல்வினை தீவினைகளால் அவ்வான்மாக்கள் இறப்பினையும் பிறப்பினையும் எய்துமாறு, தாம் அந்தச் சிற்சத்தியினின்று பிரியாது சமவேதமாய் நிற்பார்

இதனாற் சங்கார காரணராகிய சிவபெருமானது தடத்தலக்கணம் எனப்படும் பொதுவியல்பு கூறப்பட்டதாயிற்று.

**முதற் கூறு**

**அரன் உயிர்களில் இரண்டற நிற்பன்**

(சூ. பொ.) (மேலைச் சூத்திரத்தில் முதற்கடவுள் அன்றென நீக்கப்பட்ட) சேதனப் பிரபஞ்சமாகிய ஆன்மாக்களும் முதல்வனும் பொன்னும் பணியும் போல அபேதமாமென்று மாயாவாதிகளும், இருளும் ஒளியும் போலப் பேதமென்று மத்துவரும், சொல்லும் பொருளும் போலப் பேதாபேதம் என்று பாஞ்சராத்திரிகளும் கூறுதல் பொருத்தமாகா என்பது போதர, ஆன்மாக்கள் பலவற்றிலும் சிவபெருமான் தானேயாய் நிற்பர் என்பது கூறப்படுகிறது.

ஒருவன் ஒரு பொருளை நோக்குங்கால் ஆன்ம போதமானது கண்ணொளி என்றும், தான் என்றும் வேறுபடாது உடனாய் நின்று நோக்குமாறு போல, சிவபெருமான் மீளச் சிருட்டிக்குங்கால் ஆன்மாக்களோடு உடனாய் நின்று செய்வன் என்பது பெறப்படும்.

**த்சாதிருச்ய மபாவச்ச ததந்யத்வம் ததல்பதா ।**
**அபிராசஸ்தம் நிரோதச்ச நஞர்த்தா : ஷட்பிரகீர்த்திதா. ।।**

நஞ்ஞுக்குச் (ந என்னும் வடமொழிச் சொல் எதிர்மறையைக் குறிப்பது) **சாமியம், இன்மை, பேதம், சிறுமை, இழிவு, மறுதலை** என்னும் ஆறு பொருள்கள் உண்டென்று சப்த கற்ப துருமம் கூறுகின்றது. இந்த ஆறு பொருள்களுள்ளே ஏகான்மவாதிகளால் **இன்மைப் பொருளும்,** மத்துவர்களால் **பேதப் பொருளும்,** சிவாத்துவிதிகளாலும் சைவ சித்தாந்திகளாலும் **சாமியப் பொருளும்,** கொள்ளப்படுகின்றன. சாதிருசியம், சாமியம் என்பன ஒரு பொருட் சொற்கள்; சாமியப் பொருளே அன்மைப் பொருளிற் செல்வதாம் என்க. அவ்வுண்மை,

**நஞிவயுக்த மந்ய சதிருசாதிகரணே**
**ததாஹ யர்த்த கதி :।**

இந்தப் பரிபாடையின் தாற்பரியம் வருமாறு:- "அநசுவத்தைக் கொணர்க" என்று தேவதத்தனை யஞ்ஞதத்தன் ஏவுங்கால், தேவதத்தன் (அநசுவம்) குதிரையல்லாதது, மண் கட்டியுமாகலாம் என்று கொண்டு, அம்மண் கட்டியை எடுத்துக் கொடுப்பானல்லன்; பின் குதிரையல்லாததாயும் (பேதமாயும்) குதிரையைத் தோற்றம் முதலியவற்றால் ஒருவாறு ஒப்பதாயும் (அபேதமாயும்) உள்ளதோவேறு கழுதையைக் கொணர்ந்து விடுவன். இங்ஙனம் வேறாயும், வேறன்மையாயும் உள்ள அன்மைப் பொருளே சைவ சித்தாந்திகளால் அத்துவிதத்திலுள்ள அகாரத்துக்குப் பொருளாகக் கொள்ளப் படுகின்றது. இந்த ஆறு பொருள்களுள் முதற்கணின்ற இந்தச் சாதிருசியமாகிய அன்மைப் பொருளையே பதஞ்சலி மகாபாடியகாரரும் 2-ம் அத்தியாயத்து, 2-ம் பாதத்து, 1-ம் ஆந்நிகத்து, 9-ம் சூத்திரத்தில் எடுத்து ஆண்டிருக்கின்றார். மேலும், இந்தச் சாமியப் பொருளே முண்டகோபநிடத்தினும் கொள்ளப்பட்டிருக்கின்றது.

**ஏகோ ருத்ரோ நதுவிதீயாய தஸ்து: ।**

"உருத்திரர் ஒருவரே; அவர் அத்துவிதீயராய் இருந்தார்" என்று யசுர்வேத (1-8-6)மும், சுவேதாசுவதரோபநிடத (3-2)மும் கூறுகின்றன. இங்கே நஞ் என்பதிலுள்ள ஞகாரம் நீங்கிவிட, நகாரம் நின்றது. இந்த யசுர் வேதத்திற் காணப்பட்ட சுருதியை ஆதாரமாகக் கொண்டே,

**சதேவ ஸௌம்யேத மக்ர ஆசித் । ஏகமேவாத் விதீயம் ।**

"ஸௌமிய, ஏகமாகிய சத்துத்தானே முதற்கண் அத்துவிதீயமாய் இருந்தது" என்று சாந்தோக்கியோபநிடதம் கூறுகின்றது.

இங்கே சத்து எனப்பட்டவரும், உருத்திரர் எனப்பட்டவரும் ஒருவராமெனக் கொண்டு உரைக்கப்பட்டிருப்பதை முதலாஞ் சூத்திரத்துக் காண்க.

யசுர் வேதத்தினும், சுவேதாசுவதரத்தினும் நத்விதீயாய என்னும் மொழியின்கண் வந்த (நகர) உயிர் மெய்யில் நின்ற (நகர) ஒற்று நீங்கிவிட, அகரம் நின்றது; நகரமும் அகரமும் ஒரு பொருளுடையனவேயாம். அகரம் இன்மைப் பொருள் பற்றி வருங்கால், அபோசனம் என்பது உணவின் அபாவம் (உபவாசம்) எனப் பொருள்படும். அகரம் மறுதலைப் பொருள் பற்றி வருங்கால், அதர்மம் என்பது தருமத்துக்கு மறுதலையாகிய பாவம் எனப் பொருள்படும்.

துவிதம் என்னும் எண்ணுப் பெயருக்கு முன் (அகரம்) எய்தி, அத்துவிதம் என நிற்குங்கால், அது சாமியமாகிய அன்மைப் பொருளையே உணர்த்திப் பொதுமையில் நிற்கும். இந்த எண்ணுப் பெயர் மேல் வந்த அகரம் ''அபோசனம்'' ''அதர்மம்'' என்பவற்றிற் போந்த அகரம் போல, இன்மைப் பொருளையேனும் மறுதலைப் பொருளையேனும் உணர்த்தி நிற்றல் வழக்கத்தின் கண்ணே இல்லை; எங்ஙனமெனிற் கூறுதும்:-

ஒருவன் தன்னிடத்திலே மாம்பழம் இரண்டு இல்லை என்றால், அவனிடத்தில் மாம்பழம் இல்லை என்றும் பொருள்படும்; இன்றேல் ஒரு மாம்பழந்தானுண்டு என்றும் பொருள்படும்; இன்றேல் அவனிடத்தில் இரண்டுக்கு மேற்பட்ட மூன்று நான்கு முதலிய அனேக மாம்பழங்கள் உள்ளன என்றும் பொருள்படும். ஆகலான், மாம்பழம் இரண்டில்லை என்றால், மாம்பழம் ஒன்றுதான் உண்டு என்று வரைவு படுத்திப் பொருள் கோடற்கிடனின்றாம். ஆதலின் மாயாவாதிகள் அத்துவிதம் என்ற சொற்கு இன்மைப் பொருள் பற்றி ஒன்றென்பதும், மத்துவர் மறுதலைப் பொருள் பற்றி இரண்டு என்பதும் ஒவ்வாவாம்; அத்துவிதம் என்ற சொல் மாத்திரையானே ஒரு பொருளென்று பொருள் கொள்ளுதல் பொருத்தமுடைத்தன்று; தானே தன்னை ஒன்றெனக் கருதவேண்டாமையின், அவ்வாறு கருதும் பொருள் வேறுண்டென்று பெறப்படுகின்றமையினாலாம். ஆதலால் அத்துவிதம் என்னும் மொழிதானே வேறு காரணம் வேண்டாது வேறன்மையை உணர்த்தி நிற்கும்.

சிவபெருமான் ஆன்மாக்களேயாய் நிற்குமியல்பை உணர்த்துதற்கு உதாரணம் வருமாறு:-

(வெ பொ.) ஆன்மாவானது உடம்பினையும் ஐம்பொறி முதலியவற்றையும் கொண்டு நிற்க, மற்றொருவன் உடம்புக்கிட்ட பெயராற்

சாத்தா! கொற்று! என்று அழைக்குமிடத்து தான் ''என்னை'' என்று நிற்றல் காணப்படுகின்றது. இருவர் கைகோத்துக் கொண்டு நிற்க, அவருள்ளே அழைக்கப்பட்டோனேயன்றி மற்றவன் ''என்னை'' என்றல் உலகத்தின்கண் இல்லை. ஆதலால் உடம்பின் பெயர் கொண்டு அழைத்த போது உயிர் ''என்னை'' என நிற்றற்குக் காரணம் அவ்வான்மாவானது உடலெனத் தானென வேற்றுமையுறாது அபேதமாய் நின்றமையேயாம். அதுபோலச் சிவபெருமான் ஆன்மாக்களிடத்து வேறுபடாது இயைந்துநிற்பர்; அங்ஙனம் இயைந்த விடத்தும்; ஆன்மா ஆன்மாவே; உடல் உடலே; ஆன்மா உடலாகாது; உடல் ஆன்மாவாகாது; அவ்வாறாயினும் ஆன்மா உடலாயும், அதற்கு வேறாயும் நிற்கும்; உடம்பு அங்ஙனம் நில்லாது; அதுபோல, சிவபெருமான் சிவபெருமானே; ஆன்மா ஆன்மாவே; சிவபெருமான் ஆன்மா ஆகார்; ஆன்மா சிவபெருமான் ஆகமாட்டாது; அவ்வாறாயினும்; சிவபெருமான் ஆன்மாவாயும் அதனின் வேறாயும் நிற்பர்; ஆன்மா அங்ஙனம் நிற்கமாட்டாது. இதனால் ஆன்மாவும் சிவனும் வேறாயினும் அபேதமாய் நிற்றற்கு அநுபவம் காட்டப்பட்டது.

ஏகம் அத்துவிதீயம் என்னும் இரண்டனுள்ளே, ஏகம் என்பதின் பொருள் உதாரண வாயிலாகக் கூறப்படுகின்றது:-

(வெ. பொ.) வேதமானது ஏகம் என்று கூறினமைக்குப் பொருள் ஒன்றென்பதேயாம், வேறு பொருள்படாது. அதற்குத் தாற்பரியம் பதிப்பொருள் ஒன்றே, இரண்டில்லை என்பதாம்; இங்ஙனம் பதிப்பொருள் ஒன்றென்று கூறுபவன் அப்பதிப் பொருளுக்கு வேறாகிய பசு எனப்படும் ஆன்மாவாம்.

பதியும் அறிவுடைப் பொருளேயாக, ஆன்மாவும் அறிவுடைப் பொருளேயாக, (ஆன்மாவைப் பிரமமென்று மாயாவாதிகள் கொள்ளுமாறு உரையாது), அவ்வான்மாவைப் பசு என்றது எதனாலெனின், அவ்வான்மா ஆணவமலத்தாற் கட்டுண்டு நின்றமை பற்றியே ஆம்.

இங்ஙனம் பதிக்கும் பசுவுக்கும் வேற்றுமை கூறின், பிரமமில்லையேல் ஒரு பொருளுமின்றாம் என்னும் சுருதியின் தாற்பரியம் என்னை எனில்,

சராசராதி ஜந்துநாம் சிவைக: பிராண உச்யதே |
தம்விநா நபிரவிருத்தி: ஸ்யாதக்ஷராணா மகராவத் ||

''அகர வுயிரில்லையேல் (ஏனைய) உயிரெழுத்து மெய்யெழுத்துக்களுக்கு இயக்கமில்லையாம்'' என்னும் முறைபற்றி ''சேதன சேதனப் பிரபஞ்சத்துக்குச் சிவபெருமான் பிராணன் எனப்படுகின்றமையின்,

பிரமமாகிய) அவரையின்றி அவற்றுக்கு இயக்கம் இன்றென்ப தேயாம்''. இதனாற் சிவபெருமான் ஆன்மாக்களுக்கு வேறன்றியும் வேறாய் நிற்றற்கு அனுபவம் காட்டப்பட்டது.

இனி அத்துவிதம் என்பதின் பொருள் உதாரண வாயிலாகக் கூறப்படுகின்றது:

(வெ. பொ.) பண்ணும் அதனின் வேறாக எண்ணப்படும் இசையும் போன்றும், பழமும் அதனின் வேறாய் எண்ணப்படும் சுவையும் போன்றும் சர்வவியாபகராகிய சிவபெருமானது திருவருள் ஆன்மாக்களிடத்தில் வேற்றுமையின்றி நிற்கும். இதனையுற்றே வேதம் அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும் என்பது. அஃதாவது, ஏகராகிய பதியாய் நின்ற பரப்பிரம சிவபிரான் ஆன்மாக்கண் மாட்டு வேறின்றி நிற்றலான், **ஏகமேவாத்விதீயம்** என்று சுருதி கூறியதாம் என்க. இசையாகிய குணமும் பண்ணாகிய குணியும், சுவையாகிய குணமும் பழமாகிய குணியும் வியாப்பிய வியாபகமாயிருக்கும். ஆன்மாக்களும் சிவபிரானும் வியாப்பிய வியாபகமாயிருக்கும் முறை பற்றி, அக்குணகுணிகள் உவமையாக எடுத்தாளப்பட்டன. இதனால் குண குணிகள் போல ஆன்மாக்களும் சிவபெருமானும் உடனாகியும், அவ்வாறு உடனாகாமைக்கு அநுபவம் கூறப்பட்டது. இங்ஙனம் ஆன்மாவும் சிவமும் வேறன்று என்றும் வேறு என்றும் உடனாய் உள்ளவை என்றும் தனித்தனி வெவ்வேறு உவமைகள் எடுத்துக் காட்டப்பட்டன. இப்போது அம்மூன்றும் ஓர் உவமைக்கண் நிகழுமாறு காட்டப்படுகின்றது.

(வெ. பொ.) உருக்கிய அரக்கோடு செறிந்த கற்பொடியானது, அவ்வரக்கினோடு சேர்ந்து (பேதமாய்) ஒருங்கியைந்து (அபேதமாய்) நீக்கமின்றி (உடனாய்) நின்றாற் போல, சிவபெருமான் ஆன்மாக்கண் மாட்டு, ஒருங்கு கூடி (அபேதமாய்) நின்று (பேதமாய்) நீக்கமின்றி யுடனாதலால், (கலப்பினால், அபேதமாய்,) உலகேயாம், (பொருட்டன் மையாற் பேதமாய்த்) தானேயாம், (உயிர்க்குயிராதற்றன்மையால் உடனாய்த்) தானே உலகேயாம் என்க.

மேலே கூறிய பொருள் ஞானவரண பாடியத்தில்,

**ல்ராக்ஷாசிலிஷ்டம் சிலாசூர்ணம் யதா தந்மயதாம் கதம் |**
**ததா ஸ்வாத்மநி திருஷ்ட வேசம் வதாம்யேநம் ஜகந் மயம் ||**

"அரக்கினோடு சேர்ந்த கற்சூர்ணமானது அரக்கினியல்பை அடைந்தவாறு போல, எனது ஆன்மாவிற் சிவபெருமானைக் கண்டு, இவரை உலகமேயாயுள்ளார் என்று கூறுகின்றேன்'' என்றும், சடையார் புனலுடையான் என்றற்றொடக்கத்துத் திருவீழிமிழலைத்

தேவாரத் திருப்பதிகத்தில், ''எட்டுத்திசை தானுய், வேருயுடனுனிடம் வீழும் மிழலையே'' என்றும், '' புறச் சமயத்தவர்க் கிருளாய்'' என்றற்றெடுக்கத்துச் சிவப்பிரகாசச் செய்யுளில், ''பொற்பணி போல் அபேதப் பிறப்பிலதாய் இருள்வெளி போற் பேதமும் சொற்பொருள் போற் பேதா பேதமும் இன்றிப் பெரு நூல் சொன்னவறத்திறனுல் விளைவதாய், உடலுயிர், கண்ணருக்கன், அறிவொளி போற் பிரிவறும் அத்துவிதமாகும்'' என்றும் காணப்படு கின்றமையால் பிற மதத்தினர் கூற்று மறுக்கப்பட்டவாறும், சைவ சித்தாந்திகள் கொள்கை நிறுத்தப்பட்டவாறும் காண்க.

**அஹம் மநுரபவம் சூர்யச்சாஹம் கக்ஷீவா ந்ருஷிரஸ்மி விப்ர: |**
**அஹம்குத்ஸமார்ஜு நேயந்யிருஞ்ஜேஹம் கவிருசநா பச்யதா மா ||**

''நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன், நான் கட்சீவான் என்னும் இருடியாயினேன் விப்பிரனுகின்றேன். அர்ச்சுநி குமார னுகிய குற்சருக்கு அருள்பாலிக்கின்றேன். மேதாவியாகிய உசனரா யுள்ளேன். என்னைப் பாருங்கள்'' என்று இருக்கு வேதத்து, 4-ம் மண்டலத்து 26-ம் சூக்தத்து 1-ம் மந்திரத்தினும்,

**ருஷிர் வாமதேவ; பிரதிபேதேஹம் மநுரபவம் சூர்யச்சேதி !**
**ய ஏவம் வேதாஹம் பிரம்மாஸ்மி ச இதம் சர்வம் பவதி |**

''நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன் என்றும், நான் பிரமமாயிருக்கின்றேன் என்று எவன் அறிகின்ருனே அவன் இவை யெல்லாம் ஆகின்ருன் என்றும், வாமதேவ முனிவர் கூறினுர் என்று **பிருகதாரணியத்து** 3-ம் அத்தியாயத்து, 4-ம் பிராம்மணத்து, 10-ம் மந்திரத்தினும், **சிவோகம் பாவனையுற்று** வாமதேவ முனிவர் யானே உலகெலாமாயினேன் என்று கூறுகின்ருர்.

**மயா வியாப்தமிதிம் சர்வம் திருச்யா திருச்யம் சராசரம் |**
**அஹமேவ ஜகந்நாதோ மத்தஸ் சர்வம் பிரவர்த்ததே |**
**அஹமேவ பரம்பிரம்ம அஹம் ஞேயமநக்ஷரம் |**

''காணப்படுவதும் காணப்படாததுமாகிய ஈதெல்லாம் என்னுல் வியாபிக்கப்பட்டன. நானே உலகத்துக்கு நாதன் என்னிலி ருந்தே அனைத்தும் செல்கின்றன. நானே பிரமம் நானே அநக்ஷரமாக அறியற்பாலன்'' என்று சர்வஞ்ஞானுேத்தரம் ஆன்மா **எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய்** நிற்குமென உயிர்கண்மேல் வைத்துக் கூறுகின்றது.

இவற்றுல் ஆன்மாக்களும் சிவபெருமானைப் போல பிற பொருள்களில் அபேதமாயும், பேதமாயும், உடனுயும் நிற்கும் சிவனது இலக்கணத்தை உடையனவோ எனின் அன்று; பாசக் கூட்டத்தினின்று நீங்கித் தனியாய் நின்ற ஆன்மாவினகத்துச்

சிவோகம் பாவனையினுற் சிவபெருமான் புகுந்து வேற்றுமையின்றித் தோற்றுதலான், இந்த முத்தி நிலையில் யானே உலகெலாமாயினேன் என்று கூற நேர்ந்ததாம். அதுபற்றி ஆன்மாக்கள் அவ்வாருகமாட்டா என்க.

மகாபாரதம், அரிவம்சம், வாயு சங்கிதை, கூர்ம புராணம், இலிங்க புராணம், காந்த புராணம் என்னும் இதிகாச புராணங்கள் கூறுமாறு உபமன்னியுவினிடத்துக் கிருஷ்ணர் வைதிக பாசுபத தீக்கை எனப்படும் மந்திர சமஸ்கார தீக்கை பெற்றுத் தம்மையும் தமது தலைவராகிய சிவபெருமானையும் உணர்ந்து, சிவோகம் பாவனையில் தேர்ந்து நின்றமையால் வாமதேவ முனிவரைப் போல, அந்தக் கிருஷ்ணரும்

**அஹமிதம் கிருத்ஸ்ந மேகாம்சேந ஸ்திதோ ஜகத் ।**
*(பகவத்கீதை 10:42)*

நான் இவ்வுலகமனைத்தையும் ஓர் அம்சத்தினுலே வியாபித்திருக்கின்றேன் என்று பகவத்கீதையில் கூறுகின்றுர்.

**ஏவமுக்துவா ததோ ராஜந் மஹா யோகேச்வரோ ஹரி:**
**தர்சயா மாஸ பார்த்தாய பரமம் ரூபம் ஐச்வரம் ||**

''இங்ஙனஞ் சொல்லி, மகாராஜாவே! மகாயோகீசுவரராகிய கிருஷ்ணர் அர்ச்சுனற்கு மேலாகிய விசுவரூபத்தைத் தரிசிப்பித்தார்'' என்று கூறுமாறு, அர்ச்சுனர்க்கு விசுவரூபம் காட்டினுர்.

**தஞ்சோப ஹாரம் ஸ்வகிருதம் நைசம் நைகமாத்மந:**
**ததர்ச திரியம்பகாப் யாசே வாசுதேவ நிவேதிதம் ।**
(துரோண பருவம், 81.2)

''அருச்சுனர் தாம் இராப் போதிலே தம்மாற் கிருஷ்ணருக்கு நிவேதிக்கப் பட்டவற்றைச் சிவபிரான் பக்கத்திற் கண்டார்'' என்று துரோண பருவம் கூறுமாறு, தம்மேல் அர்ச்சிக்கப்பட்ட மலர்களைச் சிவபிரான் திருமுடிமேற் காட்டற்கும் கண்ணபிரான் வன்மையுடையராயினுர். இவற்றுல் கண்ணபிரான் அருச்சுனனுக்கு ஞான குரவனுக இருந்ததன்றி முதற் பொருளாக இல்லை என்பதைத் தெளிக.

## இரண்டாங் கூறு

### ஆன்மாக்களுக்கு வினைப்பயனை அரனே கொடுப்பன்.

(சூ. பொ.) ஒரு பட்டணத்தைக் காக்கும் அரசன் தனது சிறைச்சாலைத் தொழிலை ஒருவனிடத்து வைத்து நடத்தல் போல, முற்றறிவும் பேரருளுமுடைய நிமித்த காரணராகிய சிவபெருமான் உயிர்களோடியைந்து நின்று உலகத்தை மாயையினின்று தோற்று

விக்குங்கால், அவர் தமது துணைக் காரணமாகிய சிற்சத்தியை இருவினைகளிடத்து வைத்து நடாத்துதல் முறைமையாதலால், ஆன்மாக்களுக்கு இருவினைகளையும் சிவபெருமான் தனது ஆணையினால் அருளுவர் என்பதாம். இருவினை எனப்படுவது முற்பிறப்புக்களில் ஈட்டப்பட்டு மாயையிலே கட்டுண்டு கிடந்த புண்ணிய பாவங்களாம்; இதனால் மாயை என ஒன்று உளதாதலும் பெறப்பட்டது. இங்ஙனம் தமது அருளாணை கொண்டு சிவபெருமான் செய்யுங்கால், அவரது சுவதந்திரத்துக்கு யாதும் இழுக்கில்லையாம். வினை ஒன்று உண்டு என்பதற்கும், அதுவே உயிர்க்குப் பயனாய் எய்தும் என்பதற்கும், மறுபிறப்பில் பயன் தரும் வினை ஏறுவதற்கும், அது சிவபெருமானையின்றி எய்தாது என்பதற்கும் பிரமாணம் என்னை எனிற் கூறுதும்:

(வெ. பொ.) இல்லது தோன்றாது என்பது முதலாஞ் சூத்திரத்துப் பெறப்பட்டது. முன் உளதாகும் புண்ணிய பாவம் என இருவகைத்தாகிய சஞ்சித வினையானது தன் பயனாகிய இன்பத் துன்பங்களையும், அவை நுகர்தற்குரிய இடமாகிய உடலையும் தோற்றுவிக்க, அவ்வின்பத் துன்பங்களின் நுகர்ச்சி ஆன்மாக்களுக்கு அன்றி உடலுக்கின்மையால் அவ்வான்மாக்கள் உடலை அடைந்து இன்பத் துன்பங்களை அனுபவிக்கும்; முன் வினையானது அநுபவிக்கப் பட்டொழிந்தால் மறுபிறவியாகிய மேலைக்கு வினை எங்ஙனம் உண்டாகுமெனில், முன் செய்த வினையை இப்போது அநுபவிக்குங் கால் அதற்குத் துணைக் காரணமாய் நேரும் விருப்பு வெறுப்புக்களே மேலைக்கு வினையாய் ஏறும்.

அங்ஙனமாயின் அந்த வினையே பயனாக வருதல் சாலும்; சிவபெருமான் என ஓர் கடவுள் எதன் பொருட்டோ? எனில், உழவர் செய்யும் தொழிலுக்குத் தக்கபயனை விளைநிலம் பிறப்பிப்பதன்றி அத் தொழில் தானே உண்டாக்க மாட்டாதவாறு போல, உணவும் வித்துமாய் பண்டுதொட்டு முறையே வரும் பிராரத்த வினை ஆகாமிய வினை என்பவற்றைச் சிவபெருமான் அவ்வான்மாக்களுக்குக் கூட்டுவாரன்றி, அவ்வினைகள் தாமே வந்து ஆன்மாக்களுக்குப் பயன்களாக எய்தாவாம்.

இருவினை சடமாதல்பற்றி ஆன்மாவைச் சென்றடையமாட்டா வாயினும் ஆன்மாக்கள் அறிவுடைப் பொருள்களாதலின் அவ்விரு வினைப் பயனை அறிந்து எடுத்து அநுபவிக்கும், அதற்கு ஓர் கர்த்தா எற்றுக்கெனிற் கூறுதும்;-

(வெ. பொ.) ஒருவன் இரும்பினை எடுத்து நேரே பிடிக்குங்காற் காந்தமானது அதனை வலித்துக் கொள்ளுமாறு போல, சிவபெருமான் வினைப்பயன்களைப் பிறழாமல் நுகர்விக்குங்காற் புண்ணிய பாவங்

களைச் செய்யும் ஆன்மாக்கள் தமக்கு நிலைக்களமாகிய உடம்பின் கண்ணேயிருந்து அவ்வினைப் பயன்களை அநுபவிக்கும். ஆன்மாக்களுக்குத் தமக்கெனச் சுதந்திர அறிவின்மையானும் வினை சடமாதலானும், மாயை சிவபெருமானது ஆணையையே தனக்குத் தாரகமாகக் கொண்டு நிற்றலானும், சிவபெருமானொழிந்து அவ்வினைப் பயன்களை வேறு எவர்தாம் பெத்த காலத்தில் அறிந்து ஆன்மாக்களுக்குக் கூட்டுவர்? எவருமிலர் என்பதாம். அவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதி எனில், முன்பில்லாதது இடையே தோற்றும் எனல் சற்காரிய வாதத்துக்கு ஏலாது; அநாதியாயின், ஒருவர் கூட்ட வேண்டுவதில்லையாமெனின், கூறுதும்:-

(வெ. பொ.) நெல்லின் கண்ணே உமியும், செம்பின் கண்ணே களிம்பும் எக்காலத்து உளவாயின என்று ஆராயுங்கால், அந்த நெல்லும் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தன அல்ல என்னும் துணிவு கிடைக்கும்.

தாம்ர காளிகவத் யோகாத் ஸஹஜஸ் சமுதாஹ்ருத : |

''செம்பிற் களிம்பு போல ஆணவம் (ஆன்மாவைப் பற்றியிருத்தலால்) அது சகசம் எனப்பட்டது.'' எனச் சிவாகமம் கூறுகின்றது. அதுபோல மலம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியே உள்ளனவாம். சூரியனால் தாமரைப் பூவுக்கு அலர்தலும் கூம்புதலும் நிகழுமாறு போல, சிவபெருமானது திரோதான சத்தியினால் மும்மலங்களும் தத்தம் காரியங்களைச் செய்யும் என அறிக.

**மும்மல காரியம்:** மூல மலத்தின் காரியம் மயக்கத்திற்கு ஏதுவாதலாகிய மோகமும்; மதித்தற்கு ஏதுவாதலாகிய மதமும், ஆசை மிகுவதற்கு ஏதுவாதலாகிய அராகமும், கவலுதற்கு ஏதுவாதலாகிய கவலையும், தபித்தற்கு ஏதுவாதலாகிய தாபமும், வாடுதற்கு ஏதுவாதலாகிய வாட்டமும், பலவகை உணர்வுக்கு ஏதுவாதலாகிய விசித்திரமுமென எழுவகைப்படும். இங்ஙனம் பவுட்கராகமத்துப் பசுப்படலத்திற் கூறப்படுகின்றது.

மாயையின் காரியம் தனு கரணம் புவனம் போகம் என்பன. இருவினையின் காரியம் இன்பத் துன்ப மயக்கம் என்பன. திரோதான சத்தியானது பாகம் வருவித்தற் பொருட்டு ஆணவ மலத்தின் வழி நின்று மோக முதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்துக்கு ஏதுவாதல் பற்றி மலம் என்று உபசரிக்கப்படும்.

இங்ஙனம் மலம், கன்மம், மாயை, திரோதானம் மாயா காரியம் எனப் பாசம் ஐவகைப்படும். இச்சூத்திரத்தினாற் பாசத்தினுண்மை சாதிக்கப்பட்டது.

மாயையானது சுத்தமாயை எனவும், அசுத்த மாயை எனவும் இருவகைப்படும். சுத்த மாயையானது ஊர்த்துவ மாயை எனவும், அசுத்த மாயையானது அதோ மாயை எனவும் படும். சிவபெருமானது தாதான்மிய சத்தியாகிய கிரியா சத்தியைப் பரிக்கிரக சத்தியாகிய சுத்தமாயை என்று சிலர் கூறுவது பொருந்தாது என்க. பரிக்கிரக சத்தி என்பது வேண்டும் போது தொழிற்குக் காரணமாகக் கொள்ளப்படுவது. தாதான்மிய சத்தி என்பது எக்காலத்தும் விட்டுப் பிரியாத சத்தி; அஃது அறிவு வடிவினது.

சுத்த மாயையானது (இலய, போக, அதிகாரத்துக்குரிய) சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன் என்போர்க்கும், விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்கும், சரியை கிரியா, யோகத்துற்றோர்க்கும் தனு கரண புவன போகங்களைப் பிறப்பிப்பதாய், நித்தியமாய், வியாபகமாய், அருவமாய், சடமாய், சொல் வடிவும் சுத்தமாகிய பொருள் வடிவும் தோன்றுதற்கு முதற் காரணமாய், மயக்கஞ் செய்யாததாய் இருப்பது.

**லயாதி வ்யாவிருதிர் யத்ர சுத்தாத்வா யதோஜநி |**
**ஸாது குண்டலிநீ சம்போர் நித்யாதிஷ்டேய ரூபிணீ ||**

''எந்தப் பொருளிலே சிவபெருமானுடைய இலய, போக, அதிகாரம் உளதோ, எதினின்று சுத்தாத்துவாவானது பிறக்கின்றதோ, அது சிவபெருமானுக்கு தங்குமிடமான சுத்த மாயை எனப்படும்'' என்று பவுட்கராகமம் கூறுகின்றது. சுத்தமாயையினின்றும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் நால்வகை வாக்கும் தோன்றும். சுத்த மாயையினின்று சிவ தத்துவம், சத்தி தத்துவம், சாதாக்கிய தத்துவம், ஈசுவர தத்துவம், சுத்தவித்தியா தத்துவம் என்னும் சிவதத்துவம் ஐந்தும் தோன்றும்.

அசுத்தமாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்னும் ஏழும் வித்தியா தத்துவங்களாம். இதற்குப் பிரமாணம்,

**கால : சுவபாவோ நியதிர் யதிருச்சா பூதாநி யோநி:**
**புருஷ இதி சிந்தியம் |**

என்னும் சுவேதாசுவதரோபநிடத்து 1-ம் அத்தியாயத்து 2-ம் மந்திரமே. இம்மந்திரம் வித்தியா தத்துவம் ஏழையும் உணர்த்தும் என்பதற்கும், பிருகச்சாபாலோபநிடத்திற் கூறப்பட்ட சிவதத்துவம் ஐந்துக்கும் உபப்பிருங்கணப் பிரமாணம் வருமாறு:-

**..................புருஷஸ்யது |**
**அந்தரங்கதயா தத்வபஞ்சகம் பரிகீர்த்திதம் |**
**நியதி: காலராகச்ச வித்யாச ததநந்தரம் |**

கலாச பஞ்சகமிதம் மாயோத்பந்நம் முநீச்வர !
(மாயாந்து பிரகிருதிம் வித்யாந் மாயாசுருதி ரிதீரிதா !)
தஜ்ஜாந் யேதாநி தத்வாநி சுருத்யுக்தாநி ந ஸம்சய: !
கால: ஸ்வபாவோ நியதிரிதிச சுருதிரப்ரவீத் !
ஏதத் பஞ்சக மேவாஸ்ய பஞ்சகஞ்சுக முச்யதே !
அஜாநந் பஞ்ச தத்வாநி வித்வாநபி விமூடதீ: !
நியத்யதஸ்தாத் பிரகிருதேருபரிஸ்த: புமாநயம் !
வித்யாதத்வமிதம் புரோக்தம் சுத்தவித்யா மஹேச்வரௌ !
சதாசிவச்ச சக்திச்ச சிவச்சேதந்து பஞ்சகம் !
சிவதத்வமிதம் பிரம்மந் பிரஞ்ஞாத பிரம்ம வாக்யத: !

''புருடனுக்கு நியதி, காலம், அராகம், வித்தை, கலை என்னும் தத்துவங்கள் ஐந்தும் அந்தரங்கமாகக் கூறப்பட்டன எனவும், இவை மாயையினின்று உண்டாயின எனவும், இதற்குப் பிரமாணம் ''காலஸ்வபாவோநியதி'' என்னும் (சுவேதாசுவதர) சுருதியாம் எனவும், புருடனுக்கு இந்த ஐந்தும் பஞ்சகஞ்சுகம் என்படும் எனவும், இதனை உணராதோன் வித்துவானாயினும் மூடனே எனவும், பிரகிருதிக்கு மேலும் நியதிக்குக் கீழுமுள்ளான் புருஷன் எனவும், (இங்ஙனம்) இந்த வித்தியாதத்துவம் கூறப்பட்டது எனவும், சுத்த வித்தியாதத்துவம், ஈசுவரதத்துவம், சாத்ாக்கிய தத்துவம், சத்தி தத்துவம், சிவதத்துவம் என்னும் ஐந்தும் சிவதத்துவங்களாம் எனவும், இந்தச் சிவதத்துவம் முற்றறிவு, முற்றுத்தொழிலுடைய பிரமம் என்னும் வாக்கியத்தோடியைந்தது எனவும் கைலாச சங்கிதை 9-ம் அத்தியாயத்து 29-ம் சுலோக முதலியவற்றிற் கூறப் பட்டிருக்கின்றது.

ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும் 4-ம் பிரசிநோபநிடத்து 8-ம் மந்திரத்தினும், மாயாவதிகட்குரிய வராகோபநிடத்தினும், சூதகீதையினும், சாங்கிய நூலினும், பிரசித்தமாதலின் அவை ஈண்டுக் கூறப்படாது விடப்பட்டன.

சிவ தத்துவம் ஐந்தும், வித்தியா தத்துவம் ஏழும், ஆன்ம தத்துவம் இருபத்து நான்குமாகச் சேர்ந்த முப்பத்தாறு தத்துவங் களும் பொதுவும், சிறப்பும், பொதுச் சிறப்பும் என மூவகைப் படும்.

புவன வடிவாகிய தத்துவங்கள் எல்லோர்க்கும் பயன்படுதலிற் பொது எனப்படும். சூக்கும தேக வடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போக நுகர்தற்குக் கருவியாதலின் சிறப்பு எனப்படும். தூல தேக வடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போக நுகர்தற்கும், சந்தனம், பூ மாலை போல மனைவி முதலியோர் அநுபவித்தற்கும் பயன் படுதலிற் பொதுச் சிறப்பெனப்படும்.

சிவசத்திக்குரிய ஞானேச்சாக் கிரியை மூன்றனுள்ளே யாண்டும் ஒரு பெற்றித்தாய்ச் செல்லும் இச்சா சத்தி யொழிந்து, மற்ற ஞானமும் கிரியையுமாகிய இரண்டும் தனித்தனி செல்லுங்கால்,

**சிவ தத்துவம்** ஞானமாயும்,

**சத்தி தத்துவம்** கிரியையாயும், ஒத்துச் செல்லுங்கால்,

**சாதாக்கிய தத்துவம்** ஞானமும் கிரியையும் ஒத்ததாயும், ஏறிக் குறைந்து நிகழுங்கால்,

**ஈசுவர தத்துவம்** கிரியை ஏறி ஞானம் குறைந்தும்,

**சுத்த வித்தியா தத்துவம்** ஞானம் ஏறிக் கிரியை குறைந்தும் நிற்கும்.

அசுத்த மாயா தத்துவம் நித்தமாய், அருவமாய், ஒன்றாய், பிரபஞ்சத்துக்கு வித்தாய், முதல்வனுக்கு ஓர் பரிக்கிரக சத்தியாய், புவனம், போகம், தனு, கரணங்களை உயிர்களுக்குக் கொடுப்பதாய் உள்ளது.

**காலதத்துவமானது** இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என முத்திறப்பட்டுக் காரியப் பிரபஞ்சத்தைக் காலவரையறை செய்து கன்மத்தை எல்லைப்படுத்தி நிற்பது.

**நியதி தத்துவமானது** அவரவர் செய்த கன்மத்தை அவரவரே நுகருமாறு நியமிப்பது.

**கலா தத்துவமானது** ஆன்மாவைப் பற்றிய ஆணவத்தை ஏகதேசத்தில் நீக்குவது.

**வித்தியா தத்துவமானது** ஆன்மாவின் ஞான சத்தியை ஏக தேசத்தில் விளக்குவது.

**அராக தத்துவமானது** ஆன்மாவின் இச்சா சத்தியை விளக்கிப் போகத்திற் செலுத்துவது.

**புருடதத்துவமானது** (மாயையினின்று தோற்றிய) கலை வித்தை அராகம் என்பன ஆன்மாவின் கிரியை ஞானம் இச்சை என்பவற்றை விளக்கிய போது, காலம் நியதிகளுட்பட்டுப் பஞ்ச கஞ்சுகமுடையதாய் அந்த இச்சை முதலிய மூன்றையும் ஏகதேசத்தில் மருவிப் போகத்தில் உன்முகமாய் நிற்பது.

**குண தத்துவமானது** (கலையினின்றும் பிரிப்பின்றித் தோன்றிய) மூலப் பிரகிருதியின் கண்ணே சாத்துவிகம், இராசசம், தாமசம் எனப் பிரிந்து விளங்கி மூவகைத்தாய், ஒவ்வொன்று முத்திறப்பட்டு ஒன்பது வகைப்படுவதாம்.

**புத்தி தத்துவமானது** குணதத்துவத்தினின்றும் தோன்றி ஆன்மாக்கள் செய்யும் இருவினைக் கீடாக வந்த விடயத்தை இன்னதென நிச்சயிப்பது,

**அன்பளிப்பு :**
**தஞ்சாவூர்**
**நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T**

அகங்கார தத்துவமானது என்னேடொப்பாரில்லை என அகந்தைப் படுதற்குக் காரணமாய், யான் என்றும், எனது என்றும் ஒருப்பட்டெழுந்திருப்பது.

மனத் தத்துவமானது தைசதவகங்காரத்தின் நின்றும் தோன்றி எதிர்பட்டதொரு விடயத்தை இஃது யாதா கற்பாற்றெனச் சித்த ரூபமாய் நின்று சிந்தித்தும், பின் அதன் மீது ஐயமுற்று நிச்சயிக்குமாறு ஆசை பிறப்பித்தும் நிற்கும்.

செவி ஆகாயத்தினிடமாக நின்று சத்தத்தை அறிதற்குத்தானமாயுள்ளது.

(இந்தச் சத்தம் பரிச முதலியன. ஆகாயம் வாயு முதலிய பூதங்களின் குணங்களாம். 27, 28, 29, 30, 31ம் இலக்க முதலியவற்றிற் காணப்படும் சத்தம் பரிசம் முதலியன, சூக்கும பூத தன் மாத்திரைகளாம். அதுபற்றி அவ்விரு திறத்துச் சத்தாதிகளுக்குள்ள பேதம் கண்டு கொள்க.)

மெய் வாயுவினிடமாக நின்று பரிசத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

கண் அக்கினியினிடமாக நின்று உருவத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

வாய் அப்புவினிடமாக நின்று இரசத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

மூக்கு பிருதிவியினிடமாக நின்று கந்தத்தை அறிதற்குத் தானமாயுள்ளது.

வாக்கு ஆகாயத்தினிடமாக நின்று உரையாகும்.
பாதம் வாயுவினிடமாக நின்று போதல் வருதல் செய்யும்.
பாணி தேயுவினிடமாக நின்று இடுதல் ஏற்றல் செய்யும்.
பாயுரு அப்புவினிடமாக நின்று மலசலங்களைப் பிரிக்கும்.
உபத்தம் பிருதிவியினிடமாக நின்று ஆனந்தஞ் செய்விக்கும்.

சத்தம் ஆகாயம் தோற்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன் மாத்திரை.

பரிசம் வாயு தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன் மாத்திரை.

ரூபம் தேயு தோன்றுவதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன் மாத்திரை.

இரசம் அப்பு தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன் மாத்திரை.

கந்தம் பிருதிவி தோன்றுதற்குக் காரணமாயுள்ள சூக்கும தன்மாத்திரை.

ஆகாய தத்துவம் வெளியாதல் இடங்கொடுத்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

வாயு தத்துவமானது சலித்தல், பரந்தவற்றைத் திரட்டுதலாகிய குணமும் தொழிலுமுடையது.

தேயு தத்துவமானது சுடுதல், ஒன்றுவித்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

அப்பு தத்துவமானது குளிர்தல், பதஞ்செய்தலாகிய குணமும் தொழிலுமுடையது.

பிருதிவி தத்துவமானது கடினமாதல், தரித்திடுதலாகிய குணமும் தொழிலுமுடையது.

இங்ஙனம் சிவதத்துவமுதற் பிருதிவி தத்துவம் இறுதியாகிய முப்பத்தாறு தத்துவங்களின் தொழிலை அறிதலே தத்துவ ரூபம் எனப் படும். வினையானது ஈட்டப்படுங்கால், மனம், மொழி, மெய் என்னும் மூன்றினாலும் மந்திராத்துவா முதலிய அத்துவாக்களிடமாக ஈட்டப் பட்டுத் தூல கன்மமாய் ஆகாமியம் எனப் பெயர் பெறும். பின்னர்ப் பக்குவமாகும் வரையும் சூக்கும கன்மமாய்ப் புத்திதத்துவம் பற்றுக் கோடாக மாயையிலே கிடந்து சஞ்சிதம் எனப் பெயர் பெறும்.

பின்னர், சாதி, ஆயுசு, போகம் என்னும் மூன்றிற்கும் ஏதுவாய், முறையே, சனகம், தாரகம், போக்கியம் என்னும் மூவகைத்தாய், அபூருவம், சஞ்சிதம், புண்ணிய பாவம் என்னும் பரியாயப் பெயர் பெற்று, ஆதிதெய்விகம், ஆத்தியான்மிகம், ஆதி பௌதிகம் என்னும் முத்திறத்தினாற் பலதிறப்பட்டு, அதி சூக்கும கன்மமாகிய பிராரத்தம் எனப் பெயர் பெறும்.

[சனகம்—சரீராதிகளை உண்டாக்குவது. தாரகம்—குறித்த காலம் வரையும் சரீரமாகத் தாங்குவது. போக்கியம்—நுகரப்படுவது. அபூர்வம்—காணப்படாதது.]

ஆதிதெய்விகமாவது தாய் வயிற்றின் கண்ணே கருப்பாசயத்து வேதனை பிரசவ வேதனை, உடம்புதிரைதல் முதலிய மூப்பால் வரும் துன்பம், அளவிலா அஞ்ஞானத்தால் வரும் சங்கற்ப வேதனை, யமன் உயிர் கொண்டு போகும் போது எய்தும் மரண வேதனை, நரகத் துன்பம் முதலியவாக இங்ஙனம் தெய்வத்தையே காரணமாகக் கொண்டு வருவதாம்.

**ஆத்தியான்மிக**மாவது தேகத்தைப் பற்றி வரும் விதனமும், மனசைப் பற்றி வரும் விதனமுமாக இருதிறப்படும். அது சடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவதாம். அவ்விரண்டனுள்ளே,

வாத பித்த சிலேட்டுமங்களாலும், குட்ட வியாதியாலும், நீரிழிவாலும், வெதுப்பினுலும், சூலை வியாதியினுலும், சத்துருக்கள், மனிதர், விலங்குகள், பேய், கள்வர் என்பவராலும், கொசு, ஈ முதலியவற்ருலும் இராக்கதர்களாலும், ஆண் - பெண் கூடிப் பிரிதலாலும், குரு லிங்க சங்கமமாதி தேவதா காரிய பரிபாலனம், தவம் என்பவற்ருலும் சம்பத்து மிகுதியினுல் அடாதன செய்து அநுபவித்தலாலும் உண்டாவன சரீரத்தைப் பற்றிய வித்னமாம்.

மனைவி மைந்தரைப் பிரிதலாலும், திரவிய முதலியன தம்மை விட்டு நீங்குதலாலும் உண்டாகும் சோகம், அறிவுடையோரை, வடிவுடையோரை, சம்பத்துடையோரைக் காண்டலாலும் கேட்டலாலும் உண்டாகிய அழுக்காற்றினுல் எய்தும் விதனம்; மானத்துக்கு அழிவு வந்த காலத்தில் உண்டாய விதனம், பஞ்சேந்திரியங்களுக்கு எதிர் பொருளாயுள்ள பதார்த்தங்களின் மீது வைத்த ஆசையால் வரும் துன்பம், கோபத்தினுல் வரும் விதனம் என்னும் இவை மனத்தைப் பற்றிய விதனமாம்.

**ஆதிபௌதிக**மானது குளிரால் வரும் துக்கம், மழையினுல் வரும் நடுக்கம், கோடைக் காலத்தால் வரும் துன்பம், காற்றினுல் வரும் துன்பம், மின்னல் இடி என்பவற்ருல் வரும் துன்பம் என்பவைகளாம். ஆதிபௌதிகமானது சடப்பொருள் காரணமாக வருவதாம்.

இவ்வினைகள் **உலகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்** என ஐவகைப்பட்டு ஒன்றற்கொன்று உயர்வுடையதாய் முறையே நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்பவைகளில் அடங்கி, அசுத்தபோகம், மிச்சிரபோகம், சுத்தபோகம் என்பவைகளைக் கொடுக்கும், கிணறு தண்ணீர்ப் பந்தல் முதலியவற்றை அமைத்தல் உலக புண்ணியம்; யாக முதலியவற்றைச் செய்தல் வைதிக புண்ணியம்; சிவபூசை முதலியவற்றைச் செய்தல் அத்தியான்மிக புண்ணியம்; யோகஞ் செய்தல் அதிமார்க்க புண்ணியம்; மந்திரோச்சாரணம் ஞான சாத்திர முதலியவற்றை ஓதுதல் மாந்திர புண்ணியமாம்.

## மூன்றும் கூறு

**உயிர்கள் மாறிப் பிறந்து வரும்.**

(சூ. பொ.) தோற்ற மறைவுகளைத் தொடர்ச்சியாய்ப் பெறும் உரிமையாயுள்ள பொருட்கேயன்றி ஏனைப் பொருட்கு உற்பத்தி கூடாமையால், ஆன்மாக்கள் இறந்தும் பிறந்தும் தொடர்ப் பிறவியுள்ளனவாய் வரும்.

கண் காது முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவிடத்து, ஆன்மாவானது படைப்புக் காலந் தொட்டுச் சங்கார காலமளவும் அழியாதுள்ள சூக்கும தேகம் வாயிலாகப் பூதசார சரீரம், யாதனு சரீரம் என்பவற்றை எடுத்துக் கொண்டு முறையே சுவர்க்கத்திலும் நரகத்திலுஞ் சென்று இன்பத் துன்பங்களை அநுபவிக்கும்; பின்னர்ச் சாக்கிராவத்தையிற் கண்டவைகளைக் கனவு காணும் போது மறந்து அறிவு வேறுபட்டாற் போல, முன்னரே உடம்பு நீங்குங்காற் கண்ணும் காதும் கெட்டமையும், பூதசார சரீர முதலியவற்றை எடுத்துச் சுவர்க்க முதலியவற்றிலே சென்றமையும் அங்கே இன்ப முதலியவற்றை அநுபவித்தமையுமாகிய இவற்றை மறந்து அறிவு வேறுபடும்.

அந்நிலையில் முன்னுடம்பு நீங்குங்கால் அடுத்த வினையினாற் காட்டப்படும் தெய்வப் பிறப்பு, மக்கட் பிறப்பு, விலங்கின் பிறப்பு, நரகர் பிறப்பு என்னும் நால்வகைப் பிறப்புள் ஒன்றை ஆன்மா அவாவுமாறு மனஞ்செலுத்துதலால், அந்தப் பிறவியின் கண்ணே செல்லுதற்கு ஏதுவாகிய புண்ணிய பாவ எச்சத்தினாலே சூக்கும தேகத்தோடே சென்று, அம் மனம் தள்ளிய பிறவிக்கு வாய்ந்த கருவின் கண்ணே விழும்.

இதனாற் பிறவி யெடுக்குங்காற்படும் இயல்புகள் கூறப்பட்டவாறு காண்க; அவை அறிவு வேறுபடுதலும், அச்சு வேறுபடுதலும், இடம் வேறுபடுதலும் முதலாயின.

சூக்கும உடம்பாவது சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்னும் காரண தன்மாத்திரை ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம், என்னும் அந்தக்கரணம் மூன்றுமாகிய எட்டினாலும் ஆக்கப்பட்டது. இந்தச் சூக்குமவுடம்பின் காரியமே தூலவுடம்பு; இறக்குங்கால் ஐம்பொறிகளுள்ளே கண்ணும் காதுமே முதற்கண் கெடும்.

தூல சரீரம் கெட்டுப்போகச் சூக்கும தேகத்தோடு ஆன்மாவானது பூதசாரமாகிய தேவ சரீர முதலியவற்றை எடுக்கும் என்றமையால் உடல் மாறுதலும், சுவர்க்கலோக முதலியவற்றிற் செல்லும் என்றமையால் இடம் மாறுதலும், நனவின் கண்ணே கண்ட

வற்றைற் கனவின்கண்ணே மறந்தாற் போல, கண் செவி கெட்டமை, சுவர்க்கமடைந்தமை, ஆண்டு அநுபவித்தமை என்ப வற்றை மறக்கும் என்றமையால் அறிவு மாறுபடுதலும் விளங்கும்.

கண் செவி கெட்டுச் சுவர்க்கஞ் சென்று, கன்ம சேடத்தினுற் கருவில் விழும் என்றமையாற் பஞ்சாக்கினி வித்தையினியல்பும் பெறப்படும்.

இந்தச் சரீரத்தை விடுத்துப் போகுங்கால், இச்சரீரத்துள்ள மற்றைப் பூதங்களோடியைந்த சூக்கும பூதமாகிய தண்ணீரோடு கூடி அக்கினியாகக் குறிக்கப்படும் சுவர்க்கலோகத்தை அடைந்து, அந்த அமிர்த மயமாகிய தேகத்தின் வடிவமாய் உருத்திரிந்த தண்ணீரோடு சேரப் பெற்றுத் தேவர்களுக்கு உபயோகமாகி, அத்தேவர்களோடு அங்கே விசேட போகங்களை அநுபவித்து, தவத்தைத் தரும் சரீரத்தைக் கொடுக்கும் எஞ்சிய கன்மத்தோடு அவ்வான்மாவானது கன்மங்களைச் செய்யும் பொருட்டு இவ்வுலகத்தை நோக்கி, அக்கினியாகக் குறிக்கப்படும் மேகத்தை அடைகின்றது.

பின்னர் மழைத் துளிகளோடு அக்கினியாகக் குறிக்கப்படும் பூமிக்கு வருகின்றது. அங்கிருந்து நெல் முதலிய தானியங்களோடு சேர்ந்து உணவு வடிவாகி அக்கினியாகக் குறிக்கப்பட்ட ஆண் சரீரத்தை அடைந்து, இந்திரிய மயமாகிய அப்புவோடு கூடி மற்றோர் அக்கினியாகக் குறிக்கப்படும் கருப்பையை அடைகின்றது. பின் கன்மத்துக்கியைந்தவாறு பிறக்கின்றது. இது பஞ்சாக்கினி வித்தையினியல்பு. துறக்கம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாய் என்னும் இவ்வைந்திடத்தையும் அக்கினியாகவும் அவ்விடங்களில் எய்திய ஆன்மாவை ஆகுதியாகவும் வைத்துத் தியானித்தலே, பஞ்சாக்கினி வித்தையாம் என்பது பெறப்படுகின்றது.

(வெ. பொ.) பாம்பு தோலை உரித்துப் பிறிது ஒரு தோலைப் போர்த்துச் செல்லுதலும், புருடன் நனவுடம்பினின்று நீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தமது உடம்பை விடுத்து மற்றோர் சரீரத்திற் போய் மீளுதலுமாகிய இம் மூன்றும் ஆன்மா தூல சரீரம் விட்டுப் போதற்கு உவமைகளாக மிக்கெடுத்துப் பேசப்படுகின்றன. வேதங்களில் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுதல் என்பது ஆன்மா மகாசங்கார காலத்திற் சூக்கும தேகம் விட்டுப் போதற்கு உவமையாக அவற்றில் கூறப்படுகின்றது. குடாகாய உவமை உயிர் தூல சரீரம் விட்டுப் போதற்கு உவமையாகக் கூறுப்படுவது அன்று.

## நான்காம் கூறு.

### அரன் தன் ஆணையின் நீக்கமின்றி நிற்பன்

(சூ.ள்) சிவபெருமான் தான் ஒன்றே, வேறே என்னும் இரு தன்மையுமின்றி, அவ்விரண்டற்கும் பொதுவாய் யாங்கணும் வியா

பகமாய் நிற்றலால்; அவர் ஆன்மாக்களுக்கு மீளச் செனனம் உளதா தற்குக் காரணமாய், இருவினைகளைச் செலுத்தி நிற்கும் தமது ஆணை எனப்படும் சிற்சத்தியோடு சம வேதமாய் நீக்கமின்றி நிற்பர் என்பதாம்.

''சக்த யோஸ்ய ஜகத் க்ருத்ஸ்நம் சக்திமாம்ஸ்து மஹேச்வர: |
சக்திஸ்து சக்திமத் ரூபாத் வ்யதிரேகம் நவாஞ்சதி |
தாதாம்மிய மநயோர் நித்யம் வந்நிதாஹக யோரிவ |
சக்தி சக்தி மதோர்ய ஸ்மாத பேதஸ் சர்வதாஸ்தித : |

''இவ்வுலகெலாம் அவர் சத்திகளே; மகேசுவரர் சத்திமான்; சத்திமானை விடுத்துச் சத்தி வேறுபடாது. (சத்தியும் சிவமுமாம்) இருவரின் தாதான்மியம் அக்கினியும் சூடும் போல நித்தியம், சத்திக்கும் சத்திமானுக்கும் எக்காலத்திலும் பிரிவில்லையாகலின்'' என்று நீலகண்ட சிவாசாரியர் பிரம சூத்திரத்து, 1-ம் அத்தியாயத்து, 2-ம் பாதத்து, 1-ம் சூத்திரபாடியத்தில் உதகரித்துள்ளார்.

தாதான்மியம் என்பது பொருளான் ஒன்றேயாயும் ஒருவாற்றாற் பேதமாதற்கும் உரிமை உடையது. குணத்திற்கும் குணிக்கும், முதலுக்கும் சினைக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மியம். இது சமவாயம் எனவும்படும். ஒரு பொருளோடு சமவாய சம்பந்தத்தில் உள்ளது சமவேதம் எனப்படும்.

(வெ. பொ.) ஆன்மாக்கள் பலவும் தாமேயாம் என்னும் படி நிற்பவரென்று மேலே கூறிய பிரமாணத்தினால், சிவபெருமான் ஒரு பொருளாதல் கூடாது. எங்ஙனமெனின், ஒன்றேயாயின், கங்கைக் கரையில் நின்ற ஒரு மனிதன் காவிரிக் கரையிலும் ஒருங்கு நிற்க மாட்டாமை போல, ஒரு பொருள் ஓரிடத்திருப்பதன்றி யாங்கணும் வியாபிக்க மாட்டாமையான் என்க. அங்ஙனமாயின், சிவபெருமான் இருபொருளாய் நிற்பவரெனக் கொண்டால் என்னை எனின், யாங்கணும் அவையே தானாய் உளனாதல் கூடாது; அஃதாவது தன்னிடத்தே வேற்றுமையுடையானுக்குப் பிற பொருளின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் கூடாதாமாதலின் என்பது.

எவ்விடத்தும் அவர் உளரல்லர் எனக் கொண்டால் என்னை எனின், எவ்விடத்து எத்திறப்பொருள்கள் உண்டோ அவ்விடத்து அவையெல்லாம் அகரவுயிரெழுத்தில்லையேல் ஏனை எழுத்துக்கள் இயங்கமாட்டாமை போல, சிவபெருமானையின்றி ஏனைப் பொருள்கள் இயங்கமாட்டாவாதலின், யாண்டும் அவர் இல்லை எனல் பொருந்தாது. பின் இதற்கு அமைதி என்னை எனில், எங்கும் உளராகிய முதல்வர், சூரியனும் கிரணமும் போல ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் (தாதான்மியத்தினாற்) சிவமும் சத்தியுமாய் இயைந்து நிற்பர் என்பதாம்.

அங்ஙனமாயின், பசு பாசங்களும் தம் தம் எல்லைகளில் வியாபகம் உடையன எனப்படுதலின் அவைகளும் ஒன்று வேறு என்னும் இரண்டுமின்றிச் சிவபெருமானைப் போல குண குணிகளாய் நிற்பனவாம் எனப் பெறப்பட்டு, அவை சிவபெருமானோடு சமமா மாறு செல்லுமோ எனின், அவை சிவபெருமானது வியாபகத்தை நோக்கி வியாப்பியமாதலினாலும், பாசங்கள் சிவபெருமானுக்கு உடைமைப் பொருள்களும், பசுக்களாகிய ஆன்மாக்கள் அவருக்கு எப்போதும் மீளா அடிமைகளும் ஆதலினாலும் செல்லாதென்க.

இது பற்றியே சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூர்த் தேவாரத்தில் ''மீளா வடிமை உமக்கே யாளாய்'' என்றும், கச்சியப்ப முனிவரர் திருத்தணிகைப் புராணத்தில்,

''பாய வாருயிர் முழுவதும் பசுபதி யடிமை
ஆய எவ்வகைப் பொருள்களும் அவனுடைப் பொருள்கண்
மேய விவ்வண மலது வேறின்றென வுணர்ந்த
தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம்''

என்றும் ஓதியருளியதூஉம் என்க.

தன்னை விளக்குவதும் பொருள்களை விளக்குவதும் தானேயாய சூரியனே, பொருள்களை விளக்குங்கால் கதிர் எனவும், தன்னை விளக்குங்கால் கதிரோன் எனவும் இருதிறப்பட்டு இயைந்து நிற்பன், அதுபோல அநாதி முத்த சித்துருவாகிய முதல்வர் புறப் பொருளை நோக்காது ஒன்றிலும் தோய்வின்றித் தாமே சுயம்பிரகாசமாய் நிற்கும் தம் உண்மையிற் சிவம் எனவும், புறப்பொருளை நோக்கி உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இங்ஙனம் ஆன்மாக்களிடத்து நிற்கும் தன்மையிற் சத்தி எனவும், தாதான்மியத்தால் இருதிறப்பட்டு நிற்பர்,

பின்னர்ச் சிருட்டியாதி பஞ்ச கிருத்தியஞ் செய்யுந் தன்மையிற் பதி எனப் பெயர் பெறுவர். தீயின் சத்தி ஒன்றுதானே சுடுதல், அடுதல், விளக்குதல் முதலிய வேறுபாட்டினால், அடும் சத்தி, சுடும் சத்தி, விளக்கும் சத்தி என்றற்றொடக்கத்தனவாகப் பலவேறு வகைப் பெயர் பெறுவது போல, சிவசத்தி ஒன்றே காரிய வேறுபாட்டினால்,

''பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே
ஸ்வாபாவிகீ ஞாநபலக்ரியாச !''

என்று சுவேதாசுவதரம் கூறுமாறு, பராசத்தி, ஆதிசத்தி, இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி எனப் பஞ்ச சத்திகளாயும்,

ஈசானத்துக்குரிய பஞ்சகலா சத்திகளாகவும், தற்புருடத்துக்குரிய நான்கு கலா சத்திகளாகவும், அகோரத்துக்குரிய எண் கலா சத்திகளாகவும், வாமதேவத்துக்குரிய பதின்மூன்று கலா சத்திகளா

கவும், சத்தியோசாதத்துக்குரிய எண் கலைச் சத்திகளாகவும் சேர்ந்த முப்பத்தெட்டுக் கலா சத்திகளாயும், ஆரிணி, சனனி, ரோதயித்திரி என்னும் மூவகைச் சத்திகளாயும், நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் ஐவகைச் சத்திகளாயும், வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோன்மணி என்னும் ஒன்பது சத்திகளாயும், (பரவாகீசுவரியாகிய) சத்தி, (அபரவாகீசுவரியாகிய) விந்துச் சத்தி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்னும் எழுவகைச் சத்திகளாயும், ஆத்தியான்மிகம் எனப்படும் உன்மனை, சமனை, அநாசிருதை, அனந்தை, அநாதை, வியோமரூபை, வியாபிணி முதலிய பதினறு கலைப் பிராசாத சத்திகளாயும் நின்றருளுவர்.

## இரண்டாம் சூத்திரத் தொகைப் பொருள்

சிவபெருமான் ஆன்மாக்களிடத்து மாயாவதி கூறுமாறு பொன்னும் பணியும் போல அபேதமாகாது, உடலும் ஆன்மாவும் போல (அபேதமாய்) ஒன்ருயும், மத்துவர் கூறுமாறு இருளும் ஒளியும் போலப் பேதமாகாது, கண்ணும் ஒளியும் போலப் (பேதமாய்) வேருயும், பாஞ்சராத்திரிகள் கூறுமாறு சொல்லும் பொருளும் போலப் பேதா பேதமாகாது, ஆன்ம போதமும் கண்ணொளியும் போல உடனும் நிற்பர் என்றும், ஆன்மாக்கள் பிறந்து இறத்தற்குக் காரணமாகத் தமது ஆணை வாயிலாக அவ்வான்மாக்களுக்குக் கன்ம பலனைக் கொடுப்பார் என்றும், ஆன்மாக்கள் தம்து தூலவுடம்பு நீங்கிய உடனே சூக்கும தேகத்தோடு பூதசார சரீர முதலியவற்றைப் பொருந்தித் துறக்க முதலியவற்றிலே போய் இன்பம் அநுபவித்து, எஞ்சிய கன்மத்தினுற் சூக்கும தேக மாத்திரையே கொண்டு மனஞ் செலுத்திய மானிடம் விலங்கு முதலிய பிறவிக்கமைந்த கருவிலே படும் என்றும், சிவபெருமான் ஒருவரே சிவமும் சத்தியுமாய்த் தாதான்மியத்தினுல் இருதிறப்பட்டுச் சர்வவியாபியாய்ப் பொதுமையினிற்பர் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## பிரமாணவியல்

### மூன்ருஞ் சூத்திரம்

(உயிரின் உண்மை)

"உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலிற் கண்படில்
உண்டிவினை யின்மையின் உணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா."

(சூ பொ.) இலது என்றலின் உளது = இல்லை என்று சொல்வதால் (இலதென்று கூறும்) ஆன்மா உளது, எனது உடல் என்றலின் உளது = எனது உடம்பு என்று கூறுவதால் (உடம்புக்கு வேறாக) ஆன்மா உளது; ஐம்புலன் அறிதலின் உளது = (ஓசை முதலிய) ஐம்புலன்களை ஒருங்கே அறிதலால், (தனித்தனி அவற்றை அறியும்) ஐம்பொறிகளுக்கு வேறாக ஆன்மா உளது. ஒடுக்கம் அறிதலின் உளது = (ஐம்புலனும் ஒடுங்கப் பெறும் சூக்கும தேகம் வாயிலாக எய்தும்) சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை (மயங்கி) அறிதலின் நுண் உடலின் வேறாக ஆன்மா உளது; கண்படில் உண்டி வினையின்மையின் உளது = துயிலுமிடத்து (இன்பத்துன்ப) நுகர்ச்சியும் (உடம்பின்) சேட்டையும் இன்மையின் உயிர்ப்பின் வேறாக ஆன்மா உளது. உணர்த்த உணர்தலின் உளது = அறிவிக்க அறிதலின் (அறிந்தாங்கு அறிந்து நிற்கும் பிரமத்துக்கு வேறாக) ஆன்மா உளது. மாயா இயந்திரதனுவினுள் ஆன்மா உளது = மாயா காரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப்பாவை போலும் உடம்பின் கண்ணே எல்லாம் கூடிய சமுதாயமாகிய உடம்பின் வேறாக ஆன்மா உளது.

(சூ. கருத்துரை) **ஆன்மாவின் உண்மை உணர்த்துகின்றது.**

(க. பொ.) சிவபெருமான் ஆன்மாக்கள் பலவும் தாமேயாய் நிற்பர் என்று இரண்டாஞ் சூத்திரத்தினுல் எடுத்துக் கொள்ளப்பட்ட ஆன்மாவானது சூனிய முதலியவற்றுள் ஒன்றும் என்று அவ்வம் மதத்தினர் கூறுகின்றவற்றை மறுத்து, அந்தச் சூனிய முதலியவற்றுக்கு வேறாயுள்ளது அவ்வான்மா என்று உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பதாம். உலகத்தைக் கொண்டு சிவபதி ஒருவர் உளர் என்று சாதிக்கப்பட்டாற் போல, உடலைக் கொண்டு ஆன்மா ஒன்று உளது என்று சாதிக்கப் படுகின்றது.

(சூ. பி. பொ.) இல்லை என்னும் அறிவுடன் கூறுதலானும், எனது உடல் என்று தன்னின் வேறாகக் கூறுதலானும், ஐம்புலனையும் ஒருவனே அறிதலானும், கனவுடலை விட்டு நனவுடலிலே வருதலானும், நித்திரையிற் பிராணவாயு தொழில் செய்தவிடத்தும் உடலுக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாமையானும், மறந்து மறந்து நினைத்தலானும், உருவக்கந்த முதலிய மாயா காரிய தத்துவங்களுக்கு வெவ்வேறு பெயர்கள் உளவாதலானும், சூனியம், தூலதேகம், இந்திரியம் முதலியவற்றுக்கு வேறாய் இவ்வுடம்பினுள்ளே ஆன்மா என்பதொன்று உண்டு.

## முதலாம் கூறு

### இல்லை என்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு

(சூ. பொ.) ஆன்மா இலது என்று கூறுதல் பற்றி, அஃது உண்டெனக் கொள்ளுதல் முயற்கோடு இல்லை என்று கூறுதல் பற்றி அஃது உண்டு எனச் சாதித்தலோடு ஒக்குமென்று கூறும் சூனியான்ம வாதிகளை மறுக்கின்றது இக்கூறு. ஆன்மா இல்லை என்று கூறும் அச்சூனியான்ம வாதிகளும் இல்லை என்று வாளா கூறுதல் கூடாமை யால், உடல்பொறி முதலியனவற்றையெல்லாம் முறையே ''இஃது ஆன்மா அன்று, இஃது ஆன்மா அன்று'' என்று ஒவ்வொன்றாக் கழித்து, அங்ஙனம் இல்லை என்னும் அறிவுடனே கூறிக் கொண்டு நிற்கும் ஓர் அறிவு உளதாதலின், அவ்வறிவே ஆன்மா என்று உணரப் படும். அந்த அறிவையும் சூனியமென்று சூனியான்மவாதிகள் கூறில், அது என் தாய் மலடி என்பதனோடொக்கும், ஆதலின் அங்ஙனம் கூறுதல் இயையாதாம் என்க,

சூனியமாவது உள்ளதுமன்று, இல்லதுமன்று, இரண்டுமாவது மன்று, வேறுமன்று எனப்படும் பாழாம். அவ்வறிவை உடல் பொறி முதலியவற்றுக்கு வேறாகப் பிரித்துக் காணுமியல்பை உதாரணங் கொண்டு கூறுவேம்.

(வெ. பொ.) உடல்பொறி முதலிய அனைத்தும் அதுவது தானாக நின்று, பின் முறையே ''இது நானன்று, இது நானன்று'' என ஒரோவொன்றாகக் கண்டு கழித்தபோது, அகர முதலிய சூக்கும பஞ்சாக்கர ரூபமாய் அறிந்து வந்ததோர் அறிவு நிலைபெற்றுள தன்றே. அந்த அறிவே ஆன்மா எனப்படும்.

இரண்டாம் சூத்திரத்தினால் மாயேயமும், முதற் சூத்திரத் தினாற் சிவமும் உள என்பது பெறப்பட்டமையால், அவ்விரண்டுமே அவ்வறிவையும் அறிந்து நிற்பனவாம் என்று கொண்டால் என்னை எனில், அந்த மாயையானது பிருதிவி முதலிய தத்துவ காரியமனைத்து மாய் ஆன்மாவோடு விரவி நின்று பெத்த காலத்திற் கண்ணுக்குக் கண்ணாடி போல, ஆன்மாவின் ஞான இச்சாக் கிரியைகளை விளக்கி நிற்பது மாத்திரையேயன்றி, தானே அறியும் அறிவின்றாம். மாயை யான் விளங்கி நிற்கும் அறிவாகிய ஆன்மாவானது அதற்கு அதீத மாகிய சிவமுமன்றாம். ஆதலால், ''இது அன்று, இது அன்று'' எனக் கழித்து நீங்கி நின்ற ஆன்மாவானது அந்த மாயேயத்துக்கும் சிவத் துக்கும் வேறாம் என்க. சூக்கும பஞ்சாக்கரம் பிரணவ கலைகள் எனப்படும் அ, உ, ம, விந்து, நாதம் என்பவை.

## இரண்டாம் கூறு

**எனது உடல் என்று பொருட் பிறிதின் கிழமையாகச் சொல்லு கையினலே உடற்கு வேருய் உயிர் உண்டு.**

(சூ-பொ) "நான் பருத்தேன், நான் சிறுத்தேன், நான் பெரியேன், நான் மனிதன், நான் பார்ப்பான்" என உடம்பின் குண விசேடங்களை உபசாரத்தினல் உயிருக்கு ஏற்றி வழங்கினலும், "யான் உடம்பு, யான் கை, யான் கால், என உடம்பை அவ்வாறு வழங்கு வாரின்றி, எனது என வேற்றுமைப் படவே யாவரும் வழங்கக் காண்டலான், உடம்புக்கு வேருய் ஆன்மா என்பது ஒன்றுண்டு. ஆதலால் அவ்வுடம்பே ஆன்மாவாகும் என்று தேகான்மவாதி கூறுவது ஒவ்வாதென்றேம்: ஆயின் அவன் பின்னரும், "எனது உடல்" என்பது பிறிதின் கிழமைப் பொருள்படாது தலை மாத்திரை யாய் நிற்கும் இராகுவை இராகுவின்றலை என்று வழங்குமாறு போல, அபேதம் புற்றி வழங்கப்படும் எனக் கூறுகின்றேம் என்கின்றன். அதனை மறுக்குமாறு பின் வருகின்றது.

இராகுவின்றலை என்றற் போல்வன சிறுபான்மையாய் வழங்கும் வழக்கமேயாதலின், ஆண்டு (தலையும் இராகுவும் ஒன்று தானே என) ஒற்றுமைப் பொருள் கொள்வது பொருத்தமாகும்; அங்ஙனமன்றி, "என் பதி, என் மனைவி, என் பொருள் என்றற் போல, என் கை, என் கால், என் கண், என் செவி, என் பொறி, என் பிராணன், என் அறிவு" எனப் பலவாற்றானும் பெரும்பான்மையும் உலகத்தில் வழங்கக் காணப்படலான், இவ்வழக்கம் மிகுதியும் பிறிதின் கிழமைப் பொருட்கணன்றி வாராமையான், அங்ஙனம் கூறி நிற்கும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுகின்றது. அந்தப் பொருளே ஆன்மாவாம்; அஃது காணப்படும் உடம்பு அன்று.

(வெ. பொ.) ஒருவன் உலகாயத நூல் கேட்டற்கு முன்னர் பதி, மனைவி முதலிய புறப் பொருள்களையே ஆன்மா எனக் கொண்டு மயங்கி நின்றன்; அக்காலத்திலே அப்பதி, மனைவி முதலியவற்றைத் தனது அன்றென வேறு காணுது தனித்தனி தனது என்றே (தன்னேடு ஒற்றுமையுடைய) தற்கிழமைப் பொருளாகவே கூறிக் கொண்டு நின்றன்; அது தனது அன்றாகிய தன் கை, கால் முதலியவற்றைத் தனித்தனி தன்னுடையது என்றும், அந்தப் பாச அறிவைத் தன் அறிவு என்றும் தற்கிழமைப் பொருளாகக் கொண்டு கூறிவரும் ஓர் பொருள் வேருக நின்றதன்றே; உலகாயத நூல் உணர்ந்த பின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்களைத் தனக்கு வேருகக் கண்டாற் போல, கை கால் முதலியவற்றையும் ஆராயின், அவை ஆன்மாவுக்கு வேரும் என்று உணரப்படும்.

## மூன்றாம் கூறு

**ஐந்தையும் ஒருவனே அறிதலின் ஒவ்வொன்றை மட்டும் அறிகிற ஐந்திற்கும் வேறாய் உயிர் உண்டு.**

(சூ. பொ) செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐந்து இந்திரியங்களும் சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐம் புலன்களையும் அறியும் என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்தமை யானும், அவை உடல் போலச் சடமல்லாமையானும், அவற்றை எனது என்னும் வழக்கம் பெறும் பான்மை அல்லாமையானும், அவைகளே ஆன்மாவாம் என்னும் இந்திரிய ஆன்மவாதிகளை மறுத்து, ஐம்புலன்களுள் ஒன்றறிந்ததை ஒன்றறியாமையின் இந்த ஐந்து புல னலும் ஐம்புலன்களையும் அறியும் அறிவு அவற்றின் வேறு உளது. அதுவே ஆன்மாவாம்.

ஐந்து இந்திரியங்களையும் ஆன்மா எனக் கொண்டால் எய்தும் குற்றம் இன்றாம் என்றும், ஐம்புலன்களையும் ஒரு பொருளே அறியும் என்பதற்குப் பிரமாணம் இல்லை என்றும் கூறுவோரை மறுத்து, ஐம்புலன்களுக்கும் வேறாய் ஆன்மா உண்டு என்று வலியுறுத்தப்படு கின்றது.

(வெ. பொ.) உடலின்கண்ணே இருந்து ஒரு பொருளை அறிந்த இந்திரியம் மற்றோர் பொருளை அறியாது, தம்முள்ளே மாறு படும் ஓசை (முதலிய ஐம்புலன்) சூக்கும பஞ்சாக்கரத்தினுற் செலுத் தப்பட்டு ஆராய்ந்து அறிகின்ற ஐம்பொறிகளினது தொழிற் பாட்டை (கண் உருவத்தை அறிவது செவி ஓசையை அறிவதென்று இவ்வாறு) உணர்தலையுடைய தொரு பொருள் உளதாம். அங்ஙனம் அறிகின்ற அப்பொருள் ஆன்மாவாம். அவ்வாறு அறிவனவும் இந்திரி யங்களே யாமாயின் அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங்களை வெவ் வேறுகக் காண்கின்றனவே யன்றி, தாம் இத் தொழிற்பாட்டை உடையேம் என்று அறிய மாட்டாமையினுல், அந்த ஐம் பொறிகளின் தொழில்களையும் அறிந்து, அவற்றான் வரும் பயன்களையும் அடை கின்ற ஆன்மா அந்த இந்திரியங்களின் வேறாம் என்று உணரப்படும்.

அந்தக்கரணான்மவாதி மறுக்கப்படுதலை நான்காஞ் சூத்தி ரத்துக் காண்க.

## நான்காம் கூறு

**கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக்கனவு உடற்கு வேறாய் உயிர் உண்டு.**

(சூ. பொ.) இந்திரியங்களின் வேறாய் நின்று அறிவது சூக்கும வுடம்பேயாம் என்றும், அது புறத்து நிகழாதாயினும் அகத்தே நின்று

இந்திரியங்களைப் புறத்தே செலுத்தி அறியும் என்றும் சூக்கும தேகான்மவாதிகள் கூறுவது ஒவ்வாது என்றும், இந்திரியங்கள் ஒடுங்கியவிடத்தே உளதாகும். சொப்பனம் கண்ட நுண் உடம்பே நனவின்கண் கனவில் நிகழ்ந்தவற்றை அறியுமாயின், அது கண்டவாறு அறியுமேயன்றி மயங்கி அறிதல் கூடாமையின், ஆன்மாவுக்காயின் அதுபோல ஒரு தன்மைத்தாகாது உள்ளே போதலும் வெளியே வருதலுமாகிய வேறுபாடுடைமையின், அதுபற்றி மயங்கி அறிதல் கூடுமென்றும், அதனால் அங்ஙனம் அறியும் ஆன்மா கனவு கண்ட நுண் உடம்புக்கு வேறாக உண்டு என்றும் கோடற்பாலது என்பதாம்.

இதனாற் கனவின் கண்ணே செல்வதும், ஆங்கு நிகழ்வதும் மீள வருவதுமாகிய இவற்றை உணர்த்தி, ஆன்மா சூக்கும தேகத்துக்கு வேறாம் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) ஆன்மா அன்றெனச் சாதிக்கப்பட்ட தூல உடம்பின் கண்ணே உயிர்ப்பனவாகிய ஐம்பொறிகள் அவ்வுடம் பகத்தே தொழிற்பாடின்றிக் கிடப்பனவாக, அவை அங்ஙனம் கிடந்த போது புறத்தே நிகழும் தொழிற்பாடெல்லாம் அடங்கி அவ் வுடம்பினுள்ளே வருத்தமில்லாமற் போய் அந்தத் தூல உடம்பு போல அதற்கு வேறாகியதோர் உடம்பை எடுத்துக்கொண்டு மற்றோர் பிரகாரமாகக் கண்டு, கேட்டு, உயிர்த்து, உற்று, விளையாடிப் பின்னர், அதனை மாறி மேற் செல்லுதலான் ஆன்மா அச்சூக்கும தேகத்துக்கு வேறாம் என்பது.

## ஐந்தாம் கூறு

**நித்திரையிலும் பிராணவாயு தொழில் பண்ணவும் சரீரத்துக்குப் புசிப்பும் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.**

உடம்பு உயிரன்மையால், துயிலின் கண்ணே அவ்வுடம்புக்கு இன்ப, துன்ப நுகர்ச்சியும், சேட்டித்தலும் இல்லை என்பது பற்றி யாதும் இழுக்கு இல்லை; துயின்றெழுந்த பின்னர்ச் சுகமாய்த் துயின்றேன் எனப்படுதலின், துயிலின் கண்ணே இன்ப, துன்ப நுகர்ச்சி உள்தாதலின், அது பிராணவாயுவுக்காமெனின், கருவிக ளெல்லாம் ஒடுங்கிய உறக்கத்தின் கண்ணே அப்பிராணவாயு இயங்குங்கால் (இன்பத் துன்ப நுகர்ச்சியாகிய) புசிப்பு, (உடம்பு சேட்டித்தலாகிய) தொழிற்பாடு என்னும் இரண்டும் உடம்பின் கண்ணே நிகழாமையானும், கருவிகள் ஒடுங்காத சாக்கிரத்தின் கண்ணே புசிப்பும் தொழிற்படுதலுமாகிய அவ்விரண்டும் நிகழக்

காண்டலானும், அந்த நிகழ்ச்சி நிகழாமை என்னும் இரண்டுக்கும் காரணமாகக் கருவிகளை ஒடுக்கியும் ஒடுக்காமலும் நிற்பது யாது, அதுதான் அப்பிராணவாயுவுக்கு வேருகிய ஆன்மா என்பதாம்.

பிராணவாயு ஆன்மா அன்று என்பது மேலும் விளக்கப் படுகின்றது.

(வெ. பொ.) சூக்கும தேகம் போலாகாது, சுழுத்திதுரியங் களிலே தொழிற்படும் பிராண வாயுவே அடங்கி விடுதல் செய்யும் ஆன்மாவாகும் என்று பிராணான்மவாதிகள் கூறுவர்; கண்டறிதற்கு நிலைக்களமாகிய உடம்பின் கண்ணே கருவிகள் தொழிற்படாதொடுங் கவும், அங்ஙனம் ஒடுங்கியவிடத்து புலன்களால் வரும் இன்பத்துன்பப் புசிப்பு உடம்புக்கு இலதாகவும், அங்ஙனம் பிராணவாயு இயங்கிக் கொண்டிருந்தவிடத்தும் அதற்கு அப் புசிப்பு இல்தாகவும் போதலால், கருவிகளின் தொழிற்பாட்டாலாகிய இன்பத் துன்பங்களைக் கண்டறியும் உரிமையுடைய ஆன்மா அப்பிராண வாயுவுக்கு வேருய் உண்டு என்பது உணரப்படும்.

**ஆரும் கூறு**

**மறந்து மறந்து நினைக்கிறபடியினுலே எப்போதும் மறவாமல் இருக்கிற அரனுக்கு வேருய் உயிர் உண்டு.**

(சூ. பொ.) பிரமமானது சடப்பொருளாகாத சித்துப் பொரு ளாகலின் அதுவே ஆன்மாவாகும் என்று விஞ்ஞானன்மவாதிகள் கூறுகிருர்கள். ஆனுல் அவ்வான்மாவானது கேவலாதீதத்திலே நின்ற போது யாதும் அறியமாட்டாது பின்னர்ச் சாக்கிரத்திலே கலாதி தத் துவக் கருவிகளால் அறிந்து வருதலானும், கருவிகளோடு நின்ற போதும், அவிச்சை நீங்காமையின் தன்னியல்பினை அறியமாட்டாமை யானும் மறத்தல் இன்றி அறிந்தவாறே எப்போதும் அனைத்தையும் அறிந்து நிற்கும் பேரறிவுடையார் பரப்பிரம சிவபெருமான் என்று வேதாகமங்கள் வாயிலாக ஞானசிரியர் அறிவுறுக்கும் உபதேச மொழியைப் பெற்றுடைய பொருள் ஒன்று உண்டு, அந்தப் பொருள் பரப்பிரம சிவபிரானுக்கு வேருகிய ஆன்மா என்பதாம்.

ஆன்மா கருவிகளோடு கூடியவிடத்தும், அவிச்சை நீங்கா மையின் விடயங்களை மாத்திரம் அறியும் தன்னை அறியாது என்பர் விஞ்ஞான ஆன்மவாதிகள். அங்ஙனம் அறியுமிடத்தும் உளவாம் வேறுபாடுகள் கூறப்படுகின்றன.

(வெ. பொ.) கருவிகளெல்லாவற்ருேடும் கூடிச் சாக்கிரத் தானத்தில் நின்று விடயங்களை அறியுங்காலும், ஒருங்கே அறிய மாட் டாது. ஒன்றினையே அறிந்தும், மற்ருென்றை அறியப் புகுந்தும்,

முன் அறிந்ததை அறியாதொழிந்தும், இங்ஙனம் ஒவ்வொன்ருக அறிந்த விடயத்தையும் இடையீடின்றி அறிய மாட்டாது விட்டு விட்டு ஐந்தவத்தைப்பட்டு அடங்கி, மீள அறிந்து வருதல் கண்கூடாகக் காணப்படுதலான், அங்ஙனம் அறிந்து வந்த பொருள் சடமுமன்று, இயல்பாக உணரும் பேரறிவுமன்று. பின் அது யாதெனின், காட்டும் ஒளிக்கு வேருகிய கண்ணொளி போல், அந்தப் பேரறிவும் பொருளாகிய பரப்பிரம சிவத்துக்கு வேருய், அது அதுவே தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் தன்மையுடைய ஆன்மாவாம்.

இதனுற் சிவபெருமான் அறிந்தவாறே அனைத்தையும் அறிபவர் என்பதும், உயிர் மறந்து மறந்து அறியும் என்பதும் சார்ந்து நின்றே அறியும் என்பதும் உணர்த்தப்பட்டன.

## ஏழாம் கூறு

**எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினலே அத்தத்துவங்களுக்கு வேருய் உயிர் உண்டு.**

(சூ. பொ.) உருவக் கந்தம், வேதனைக் கந்தம், ஞானக் கந்தம், குறிக் கந்தம், வாதனைக் கந்தம் என்னும் ஐந்து கந்தமெனப்படும் மாயை காரியங்கள், சமூகான்மவாதிகள் கூறுமாறு, ஆன்மா எனப் பெயர் பெருது, வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான், மாயா காரியங்களால் ஆக்கப்பட்டுச் சூத்திரப் பாவை போலுள்ள உடம்பின் கண்ணே அவ்வுருவக் கந்த முதலியவற்றுக்கு வேருய் ஆன்மா உண்டு. (கந்தம்—தொகுதி)

இனி உருவக்கந்த முதலியன மாயா காரியங்களாம் என்றும், அவை கூடிய சமுதாயத்தினும் ஆன்மா எனப் பெயர் பெருது வேறு பெயர் பெறும் என்றும் கூறப்படுகின்றது.

(வெ. பொ.) சமுதாய வாதிகளாற் சமுதாயமாகக் கொள்ளப்பட்டவை யாவை எனின், கலை முதற் பிருதிவியீருகிய தத்துவங்களேயாம். அவையெல்லாம் மாயையின் காரியங்களாதலின், சில காலம் நிலைத்து அழிவனவேயாம். அவை தொக்க சமுதாயத்தில் விளங்குவதாகிய ஞானத்தின் இயல்பைக் கருத்தொருங்கி முன்னுணர்ந்து, பின் அச்சமுதாயத்தை ஆராயின், அந்தச் சமுதாயம் கண்ணுக்கு விளக்குப் போல உயிருக்குத் தூல சூக்கும பரங்களாகிய உடலாம். கண் விளக்குக்கு வேருயினுற் போல ஆன்மாவானது சூத்திரப் பாவை போலும் உடம்புக்கு வேரும். இந்த மூன்ருஞ் சூத்திரத்தினுல் ஆன்மா ஒன்று உளது என்பது சாதிக்கப்பட்டது.

முதலாம் இரண்டாம் மூன்றுஞ் சூத்திரங்களாற் சைவாகமங்களுட் கூறப்படும் **பதி, பாச, பசுக்களினுண்மை** அநுமானப் பிரமாணத்தினுல் வலியுறுத்தப் பட்டது. ஆகமப் பிரமாணமே அமைவதாயிருப்ப, அநுமானப் பிரமாணம் எற்றுக்கெனின் கூறுதும், மந்த வுணர்வுடைய மாணுக்கர் வேறு சமய நூல்களைப் பார்த்தவிடத்துச் சைவாகமப் பொருளில் மலைவு கொள்வர்; அங்ஙனம் மலைவு பிறவாமைப் பொருட்டும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் நான்கு வகையாலும் மெய்யறிவு எய்து மாதலினுல், சிந்தனை செய்து வன்மை மென்மைகளை உணர்ந்து கொள்ளுதற் பொருட்டும் அநுமானப் பிரமாணம் கூறப்பட்டதாம் என்க.

**மூன்றும் சூத்திரத் தொகை பொருள்**

சூனியான்ம வாதி, தேகான்ம வாதி, இந்திரியான்ம வாதி, சூக்குமதேகான்ம வாதி, பிராணுன்ம வாதி, விஞ்ஞானுன்ம வாதி, சமுதாயான்ம வாதி என்னும் எழுவரும் முறையே சூனியம், தேகம், இந்திரியம், சூக்கும தேகம், பிராணன், விஞ்ஞானம், சமுதாயம் என்பவற்றை ஆன்மா என்று கூறிய கூற்றுக்களை மறுத்து, ஆன்மா அவற்றுக்கு வேருக உள்ளது என்று சாதிக்கப்பட்டது.

## இலக்கணவியல்

### நான்காம் சூத்திரம்

### பசு இலக்கணம்

**அந்தக் கரண மவற்றினென் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)**
**அமைச்சரச யேய்ப்ப நின் றஞ்சவத் தைத்தே.**

(இ-ள்) ஆன்மா அந்தக் கரணமவற்றின் ஒன்று அன்று = ஆன்மாவானது மன முதலிய அந்தக்கரண நான்கனுள் ஒன்றன்று. (ஆயினும்) சகச மலத்து உணராது = சகசமாய் நின்ற மலத்தினுல் உணர்வின்றி, அமைச்சு அரசு ஏய்ப்ப = மந்திரிமாரோடு கூடி நின்ற அரசன் போல; அவை சந்தித்து நின்று = அவ் வந்தக்கரணங்களோடு கூடி நின்று - ஐந்தவத்தைத்தே = ஐந்தவத்தையுடையதாம்.

(க. ரை) **இஃது ஆன்ம இலக்கணம் கூறுகின்றது.**

(க பொ.) மேலே முதலாஞ் சூத்திரத்திற் **பதி** உண்டென்றும், இரண்டாஞ் சூத்திரத்தினுற் பாசம் உண்டென்றும், மூன்றுஞ் சூத்திரத்தினுற் பசு உண்டென்றும் நிறுவப் பெற்ற முப்பொருள் களுக்கும் இலக்கணம் கூறத் தொடங்கி, முதற்கண் இதனுல் ஆன்மாவின் இலக்கணம் கூறப்படுகிறது.

(சூ. பி. பொ) ஆன்மாவானது அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கனுள்ளே ஒன்று அன்றாயினும், அரசன் நுண்ணிய அறிவில்லாமையால் ஆலோசனைத் துணைவர்களாகிய மந்திரிமாரோடும், (மற்றும் சேனைகளோடும்) கூடி நின்று தன் தொழில் நடாத்துமாறு போல, அவ்வான்மாவானது ஆணவ மல மறைப்பினால் அறிவின்றிச் சட்டை போலும் கலை முதலிய தத்துவங்களாற் பொது வகையால் அறிவு நிகழப்பெறுமேனும் சிறப்பு வகையால் உணருமாறு தனக்கு ஆலோசனைத் துணைவராகிய அந்தக்கரணங்களோடு கூடி நின்று சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தையைப் பொருந்தும்.

அந்தக்கரணங்களோடு ஆன்மா நின்று சாக்கிர முதலிய ஐந்து அவத்தைப் படுதல் அவ்வான்மாவுக்குத் தடத்த லக்கணமாம்.

## முதலாம் கூறு

**அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாத படியினாலே, அந்தக் கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.**

(சூ. பொ) ஆன்மாவினால் அதிட்டிக்கப்பட்டு (ஐம்பொறிகள் அறிந்த புலன்களுள்) ஒன்றை இஃது யாதாகற்பாற்றெனச் **சித்தம்** சிந்தித்து அறியும், யான் சிந்தித்தேன் என்று அறிய மாட்டாது, **மனம்** அதனை இன்னது ஆகலாம் எனவும், இன்னதாமோ அன்றோ எனவும் சங்கற்ப விகற்பஞ் செய்யும், சங்கற்ப விகற்பஞ் செய்தேன் என்று அறிய மாட்டாது, **அகங்காரம்** அதனை இன்னது எனத் துணிவேன் யான் என்று ஒருப்பட்டு எழுந்து அறியும், யான் ஒருப்பட்டு எழுந்தேன் என்று அறிய மாட்டாது; **புத்தி** அதனை இன்னது இது என நிச்சயித்து அறியும், நான் நிச்சயித்தேன் என்று அறிய மாட்டாது. ஆதலால், அவ்வாறின்றி அவற்றோடு கூடி யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன், நிச்சயித்தேன் என்றும், அதன் பின் அதுவதுவாய் மாறிய சுக துக்க மோக ரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களாகிய இன்பத் துன்ப மோகங்களைக் கலாதிகளோடு கூடி நின்று, "இது சுகம், இது துக்கம், இது மோகம்" என்று அறிந்தும், யான் சுகித்தேன், யான் துக்கித்தேன், யான் மோகித்தேன் என்று அறிந்தும், இங்ஙனம் தன்னை நோக்கியும் பிறவற்றை நோக்கியும் சித்தாயுள்ள ஆன்மாவானது தன்னை நோக்கச் சடமாயுள்ள சித்தம், மனம், அகங்காரம், புத்தி என்னும் அந்தக்கரணங்களுக்கு வேறாயுள்ளது என்பதாம்.

(வெ. பொ) ஐம்பொறிகளால் உணரப்படுவன புறத்துள்ள சத்தாதி புலன்கள்; இது வாயிற்காட்சி எனப்படும். இந்த ஐம்பொறிகளால் உணரப்படும் புலன்கள் மன முதலிய புற அந்தக்கரணங்

களால் இஃது இன்னது என அறியப்படுவனவாம். இது மானதக் காட்சி எனப்படும். அந்தக்கரணங்களுள்ளே மனதுக்கு மேலாய்ப் புத்தியிற்றோன்றும் சத்துவம் முதலிய குணங்களே பின் ஆன்மாவினுல் உணரப்படுவன. இங்குக் கருவிகள் கஞ்சுகம் எனப்படும் கலை முதலியவை. இது தன்வேதனைக் காட்சி எனப்படும். (கஞ்சுகம்—சட்டை)

வாயிற்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக்காட்சி என்பன கடலின் கண்ணே எழுந்து கரையை அடையும் திரை போன்று ஆன்மாவினிடத்திற் பரம்பரையாய் வந்து தோன்றும். பரம்பரையாய் வந்து தோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சியும், பின்னர் மானதக் காட்சியும், அதன் பின்னர்த் தன்வேதனைக் காட்சியும் ஆன்மாவின் கண்ணே தோன்றுதலாம். அதனுல் மன முதலிய அந்தக் கரணங்கள் ஓசை முதலிய ஐம்புலன்களுக்கு வேருயினுற்போல, ஆன்மாவும் அம் மனம் முதலியவற்றுக்கு வேரும். (இதனுல் அந்தக் கரணான்மவாதி மறுக்கப்பட்டான்.)

ஐம் பொறிகளினுலும் புத்தியினுலும் முறையே தோற்றும் வாயிற்காட்சி மானதக் காட்சி இரண்டும் திரையையும், ஆன்மா கடலையும் ஒப்பனவாம். அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம் என்பன சூக்கும பஞ்சாக்கரங்களாம். இவ்வக்கரங்கள் பகுக்கப்படாது நிற்குங்காற் பிரணவம் எனப்படும்.

(வெ. பொ.) ஞாயிறு முதலியவற்ருேடு கூடி நின்று நாழிகை, நாள், பக்கம், மாசம், வருட முதலியவாகப் பாகுபடும் கால தத்துவமானது அந்த ஞாயிறு முதலியவற்றுக்கு வேருயினுற் போல, செவி முதலிய ஐம் புலன்களால் அறியப்படும் ஓசை முதலிய புலன்களுள் ஒன்றை, சதாசிவத்தை அதி தெய்வமாகக் கொண்ட நாதத்தினுற் செலுத்தப்பட்டு உணரும் புருட தத்துவமாகிய ஆன்மாவானது, மகேசுவரனை அதி தெய்வமாகக் கொண்ட விந்துவினுற் செலுத்தப் பட்ட சித்தமாய் நின்று, இஃது யாதாகற்பாற்றெனச் சிந்தித்தும், உருத்திரரை அதி தெய்வமாகக் கொண்ட மகாரத்தாற் செலுத்தப் படும் மனசாய் நின்று, இஃது இன்னதாகற்பாற்றெனப் பற்றியும், இஃதாமோ அனறே என ஐயுற்றும், அதன் பின், பிரமாவை அதி தெய்வமாகக் கொண்ட அகாரத்தினுற் செலுத்தப்படும் அகங்கார மாய் நின்று, இஃது இன்னதெனத் தெளிவேன் யான் என எழுந்தும், அதன் பின்னர், மாயோனை அதி தெய்வமாகக் கொண்ட உகாரத் தினுற் செலுத்தப்பட்ட புத்தியாய் நின்று, இஃது இன்னது எனத் தெளிந்தும், இங்ஙனம் அறிந்து வரும் ஆன்மாவானது அந்த மன முதலிய அந்தக்கரணங்களுக்கு வேரும்.

ஆன்மா என்பது வியாபகம் எனப் பொருள் படும். இந்த மன முதலிய அந்தக்கரணம் புற அந்தக்கரணம் ஆகும். கலை முதலியவை அக அந்தக்கரணம் எனப்படும்.

## இரண்டாம் கூறு

### மல மறைப்பால் உயிருக்கு அறிவு விளங்கவில்லை

(சூ. பொ.) ஆன்மா சிவபெருமானைப் போல, அந்தக்கரண முதலியவற்றுக்கு வேருய, அறிவுடைப் பொருளாயினும், செம்பிற் களிம்பு போல வேறு காரண மின்றித் தன்னோடு உடனுய் நிற்கும் மலத்தின் மறைப்பினுல் தன்னியல்பை உணருமாறு இல்லை என்பதாம்.

(வெ. பொ.) ஆன்மாவானது ஆகந்துக மலம் எனப்படும் மாயா காரியமாகிய உடம்பு தன்க்குக் காண்பிப்பது கொண்டு காணுதாயின், அது ஒரு விடயத்தையும் அறியுமாறில்லையாம். சகச மல் மாகிய ஆணவம் ஆன்மாவை அநாதியே மறைத்து நிற்றல், விறகினுள்ளே மறைந்த போது விறகேயாயும், சூரிய காந்தத்துள்ளே மறைந்த போது அதுவேயாயும் நின்றும் தனக்குக் கேடில்லாத தீயைத் தனக்குள்ளே மறைத்து வைத்து (அத்துவிதமாய்) ஒன்றேயாய் நிற்கும் விறகு, சூரிய காந்தம் என்பன போலாம். (இயற்கை-சகசம், செயற்கை-ஆகந்துகம்) கலை,வித்தை, அராகம் முதலியவை வாயிலாகப் பொருள்களை அறியும் வண்ணம் ஆன்மாவுக்கு அறிவை விளக்குதல் மாயையின் செய்கை. அவ்வறிவைத் தடை செய்து நிற்பது மலத்தின் செய்கை, ஆதலால் ஆணவ மலம் இருளையும் கலை, வித்தை, அராக முதலிய மாயேயம் ஒளியையும் நிகர்க்கும். மாயேயம் — மாயையின் ஆக்கப் பொருள்கள்.

ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தில் நிகழும் இயல்பே மலத்துக்குத் தன்னியல்பெனப்படும் சிறப்பிலக்கணமாம். ஆன்மாவானது ஐம்புலன் முதலிய கருவிகளோடு கூடி அவத்தை யுறுவதாகிய விபரீத வுணர்வைச் செய்யும் சகலத்தில் நிகழும் இயல்பே மலத்துக்குப் பொதுவியல்பெனப்படும் தடத்த லக்கணமாம். இதனுல் மலத்துக்கு இருவகை இலக்கணங்களும் கூறப்பட்டவாறு உணர்க. அறியாமையினையும், அறிவையும் உடைத்தாய் வேறு வேறு அவத்தையுறுதல் பசுவின் தடத்த லக்கணம்.

ஒவ்வொரு சமயத்தார் மலத்தை ஞானபாவம் என்றும், பிராந்தி ஞானம் என்றும், தமோ குணம் என்றும், பஞ்சக்கிலேசத்துள் ஒன்றுகிய அவிச்சை என்றும், மாயா கன்மங்கள் என்றும் தத்தம் சமய நூல் பற்றி மயங்குவர்.

இந்தச் சகச மாகிய ஆணவ மலம் ஞானத்தை மறைப்பதாய், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய், செம்பிற் களிம்பு போல உயிரின் குற்றமாய், அநாதி பந்தமாய், ஒன்றேயாய், உயிர்கடோறும் தனித்தனி வெவ் வேருய், தத்தம் கால வெல்லையில் நீங்குவனவாகிய சத்திகள் பற்பல வுடைத்தாய், ஆன்மாக்கள் கேவலாவத்தை முதலிய மூன்று அவத்தை அடைதற்கு மூல காரணமாய், நித்தமாய், வியாபக மாய் வியாபகமாகிய உயிரை அணுத் தன்மை யுறுமாறு செய்தலினுல் ஆணவம் எனப் பெற்றதாய்,

**பசுத்வ பசுநீஹரா மிருத்யு மூர்ச்சா மலாஞ்ஜனை : |**
**அவித்யாவிருதி ருக் கிலாநி பாபமூல க்ஷயாதிபி : ||**

(என்று மிருகேந்திராகமம் கூறுமாறு), '' பசுத்துவம், பசுநீகாரம், மிருத்தியு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்தை, ஆவிருதி, ருக்கு, கிலானி, பாவமூலம், க்ஷயம்'' என்னும் காரணப்பெயர்களுடைய தாய் நிற்பதெனவும்; படலம் படர்ந்த கண்ணுனது சூரியன் சந்நிதியில் நிற்பினும் படலத்தினுல் அவ்வொளியை இழந்து இருளில் அழுந்துமாறு போல, சிவ சன்னதியில் நிற்பினும் படி முறையினுல் அறிவிக்க அறியும் தன்மைத்தாய ஆன்மா அநாதியே அறிவித்தால் அறியமாட்டாமையின், அதுபற்றி அவ்வறிவை இழந்து அறியா மையாய் அழுந்துதலின், அந்த ஆணவமலம் அவ்வுயிர்க்குப் பந்த மாயிற்று என்க.

அநாதியே மலத்தினின்று நீங்குதல் முதல்வன் வினையாய் முற்றறிவு எனப்படும் சர்வஞ்ஞதை, வரம்பிலின்பமுடைமை எனப்படும் திருப்தி, இயல்பாகவே பாசங்களினீங்குதலாகிய அநாதிமுத்தத்தன்மை பேரருளுடைமை எனப்படும் அலுத்த சத்தி, முடிவிலாற்றல் எனப்படும் அனந்த சத்தி, தன்வயம் உடைமை எனப்படும் சுதந்திரத்துவம், தூயமேனியுடைமை எனப்படும் விசுத்த தேகம், இயற்கையுணர்வினுதல் எனப்படும் அநாதிபோதம் என்னும் எண்குணங்களுள்ளே, அநாதிமுத்தத்தன்மை என ஓர் குணம் வைத் தெண்ணப்படுவது சிவாகமங்களுக்கு ஒப்ப முடிந்த முடிபாம். அது போல, அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின் வினையாய், கிஞ் சிஞ்ஞதை, அதிருப்தி, அநாதி பந்தத்துவம், லுப்தசத்தி, அந்த சத்தி, பரதந்திரத்துவம், அசுத்ததேகம், ஆமயான்மா என்னும் ஆன்மாவுக் குரிய எண்குணங்களுள்ளே அநாதி பந்தத்துவம் என்பதோர் குணம் வைத்தெண்ணப்படுவது அவ்வாகமங்கட்கெல்லாம் ஒப்ப முடிந்த முடிபாம்.

**ஸ்வபாவ விமலோ யத்வத் சர்வாநு கிரஹகாரக : |**
**ஸ்வபாவமலிநாஸ் தத்வாத் மாநோ ஜீவசம்ஞிதா : ||**

"சர்வாநுக்கிரகஞ் செய்யும் சிவபெருமான் எங்ஙனம் இயல்பாகவே மலமிலராய் உளரோ, அங்ஙனம் இயல்பாகவே மலத்தோடியைந்தமையால் ஆன்மாவுக்குச் சீவன் என்னும் பெயர் உள்தாம்" என்று வாயு சங்கிதையும்,

**அநாதிமல முக்தத்வாத் சர்வஞ்ஞஸ் தேநதச் சிவ: ।**
**அநாதிமல சம்பந்தாத் கிஞ்சிஞ்ஞோயம் மயோதித: ।**

"சிவன் அநாதிமல முத்தராதலின் அவர் முற்றறிவினர். ஆன்மா அநாதிமல சம்பந்தமுடைத்தாதலினுல் அது சிற்றறிவினது என்று எம்மாற் கூறப்பட்டது" என்று கிரணாகமமும் கூறியிருப்பது காண்க.

சூனியம், தூலதேகம், இந்திரியம் சூக்குமதேக முதலியவற்றுக்கு வேறாய், மலத்துக்குப் பற்றுக்கோடாயுள்ள ஆன்மாவைச் சடமென்றும், குணிப்பொருள் என்றும், சுவதந்திர அறிவுடைய பிரமம் என்றும், அவ்வுடம்பளவினதென்றும், அணுவளவினதென்றும், உருவென்றும், அரு என்றும், உருவரு என்றும் பலதிறப்படக் கூறி மயங்கும் பலதிறப்பட்ட சமயிகள் உளர் என்க.

## மூன்றும் கூறு

**உயிர் மூன்றவத்தைப்படும்.**

(சூ. பொ.) ஆன்மா மலத்தினுல் மறைப்புண்டபோது சூக்கும தேகம் எனப்படும் அருவுடம்பாகிய தத்துவ சொரூபியாயிருத்தலால், அத்தத்துவங்கள் தொழிற்படும் அவத்தை வேறுபாடு பற்றி ஆன்மாவானது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து காரியாவத்தையுறுதற்குக் காரணமாகிய கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை என மூன்று அவத்தையுறும் என்பதாம்.

### சகலத்திற் கேவலம்

(வெ. பொ.) சாக்கிரத்தானமாகிய இலாடத்திலே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்தும் வாக்கு, பாதம், பாணி, பாயிரு, உபத்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தும், சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்னும் சத்தாதி விடயம் ஐந்தும், வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் வசனாதி ஐந்தும், பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் பிராணாதி பத்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும், புருடனுமாகிய முப்பத்தைந்து கருவிகள் தொழிற்படும்.

சாக்கிராவத்தையில் எய்தும் வரன்முறை கூறின், செவிக் கண்ணே நின்று போகம் துய்க்கும் வாயின் மிலேச்சராகிய அநாரிய மெய்க்காவலரும், சரீரத்து நின்று போகம் துய்க்கும் சாரணராகிய ஒற்றரும், கண்ணிடத்து நின்று போகம் துய்க்கும் தூதிடைச் செல்வாரும், வாயிலே நின்று போகங் கொள்ளும் நின்று துதிப் போராகிய சூதர், இருந்து ஏத்துவாராகிய மாகதர் என்னும் புகழ் வோரும், மூக்கிலே நின்று போகம் கொள்ளும் புரோகிதருமாகிய ஞானேந்திரிய வர்க்கமும், வாக்கினின்று போகம் துய்க்கும் குதிரை வீரரும், காலிலே நின்று போகம் துய்க்கும் யானை வீரரும், கையில் நின்று போகம் துய்க்கும் தேர் செலுத்தும் வீரரும், பாயுருவில் நின்று போகம் துய்க்கும் காலாள் வீரரும், உபத்தத்தினின்று போகம் துய்க்கும் சேனாதிபதிகளுமாகக் கூறப்படும் கன்மேந்திரிய வர்க்கமும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், பேச்சு, நடை, கொடை, போக்கு, இனப்பெருக்கம் என்னும் விடயமாகிய பரிவாரங்களும்;

இந்திர நீல நிறத்தினையுடையதாய் இடை பிங்கலை சுழுமுனையிற் போக்கு வரவு செய்யும் பிராண வாயுவும், இந்திர கோப நிறத்தின தாய்க் குதத்தில் மலசலங்களைப் பிரிக்கும் அபான வாயுவும், மின்னிறத்ததாய் நாபியில் அக்கரங்களைப் பிரிக்கும் உதான வாயுவும், பால் நிறத்ததாய் உடல் முழுவதும் வியாபித்துச் சுழித்தல் முதலிய தொழில்கள் செய்யும் வியான வாயுவும், காயா மலர் நிறத்தினதாய் உணவுக் குழாயிலிருந்து அன்ன சாரத்தை நாடி தோறும் செலுத்தும் சமான வாயுவும், பால சூரியனின் நிறத்தினதாய் நகைப்பு முதலிய தொழில்கள் செய்விக்கும் நாக வாயுவும், குருந்த மலர் நிறத்தின தாய்க் கண்ணிமைப்பிக்கும் கூர்ம வாயுவும், மஞ்சள் நிறத்தினதாய்த் தும்மல் செய்விக்கும் கிருகர வாயுவும் பளிங்கு நிறத்தினதாய்க் கொட்டாவி செய்விக்கும் தேவதத்த வாயுவும், நீலாஞ்சன நிறத்தின தாய்த் தேகத்தை வீங்கி வெடிக்கச் செய்யும் தனஞ்சய வாயுவுமாகிய தச வாயுக்கள் எனப்படும் உறுதிச் சுற்றத்தாரும்; சித்தம் சிந்தித்தும், புத்தி விசாரித்தும், அகங்காரம் துணிந்தும், மனம் பற்றியும் போதரும் அந்தக்கரண நான்கு மந்திரிமாருமாகிய இவரோடு சாக்கிரத்தானம் எனப்படும் இலாடத் தானமாகிய அத்தாணி மண்டபத்தில் ஆன்மாவாகிய அரசன் இங்ஙனம் இசைந்து அமர்வன் என்பதாம்.

சொப்பனத்தனமாகிய கண்டத்திலே சத்தாதிவிடயம் ஐந்தும் வசனாதி ஐந்தும், பிராணாதி பத்தும், அந்தக்கரணம் நான்கும், புருடனுமாகிய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும். சுழுத்தித் தானமாகிய இதயத்திலே சித்தம், பிராணன், புருடன் என்னும்

மூன்றும் தொழிற்படும். துரியத்தனமாகிய உந்தியிலே பிராணவாயு, புருடன் என்னும் இரண்டும் தொழிற்படும். துரியாதீதம் எனப்படும் மூலாதாரத்திலே புருடன் ஒன்றே தொழிற்படும்.

இங்ஙனம் துரியாதீதத்திலே மூல மலத்தோடு சம்பந்தப்பட்டு அறிவின்றிப் புருடன் நிற்பது கேவலாவத்தை எனப்படும். கலாதிகளும் சிவதத்துவ முதலிய சுத்த தத்துவமும் அவத்தைக் கேதுவாய்க் கூடியும் பிரிந்தும் நில்லாமையால் அவை உடன் எண்ணப்படவில்லை.

## சகலத்திற் சகலம்

(வெ. பொ.) இலாடத்தானத்தினின்று அங்கங்கே அவத்தைப் பட்டு, ஈண்டுக் கூறியவாறு கீழே போந்து மூலாதாரத்தை அடைந்த பின்னர், மேல் நோக்கி அங்ஙனம் ஆண்டாண்டு அவத்தைப்பட்டுப் போய் இலாடத்தானத்தில் சாக்கிரத்தானத்தை அடைந்த புருடன், அச்சாக்கிராவத்தையின் கண்ணும் சாக்கிர சாக்கிர முதலிய ஐந்து அவத்தைப்படும். அங்ஙனம் அவத்தையுறுமிடத்து, சாக்கிர சாக்கிரத்திற் சிவதத்துவ முதற் சுத்த வித்தியாதத்துவம் இறுதியாகிய ஐந்து கருவிகளும், சாக்கிர சொப்பனத்திற் சிவதத்துவ முதல் ஈசுரதத்துவம் இறுதியாகிய நான்கு கருவிகளும், சாக்கிர சுழுத்தியிற் சிவதத்துவ முதற் சாதாக்கிய தத்துவம் இறுதியாகிய மூன்று கருவிகளும், சாக்கிர துரியத்திற் சிவதத்துவம் சத்திதத்துவம் என்னும் இரண்டு கருவிகளும், சாக்கிர துரியாதீதத்திற் சிவதத்துவம் என்னும் ஒரு கருவியும் கலாதிகளைச் செலுத்தி நிற்கும்.

அந்தச் சாக்கிராதி அவத்தைகள் கருவிகளால் விடயங்களை அறியும் செய்கைதோறும் அதி நுட்பமாய் இடையீடின்றி நிகழ்வதை நுண்ணுணர்வினாற் கண்டு கொள்க. சாக்கிர சாக்கிர முதலிய ஐந்து அவத்தையினும் ஆன்மா அந்தக்கரணங்கள் வாயிலாக அவ்வப் பொறிகளால் அவ்வவ்விடயங்களை உணர்ந்து அவ்வப்போது அவ்வவ் விடயங்களினின்று நீங்கும். சுத்தாவத்தையும் நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மல சுழுப்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் என ஐவகைப்படும்.

## நான்காம் சூத்திரத் தொகைப் பொருள்

ஆன்மாவானது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களுள் ஒன்றன்று என்றும், அகாராதி சூக்கும பஞ்சாக்கரத்துள்ளே அகார முதலிய நான்கினாற் குறிக்கப்படுவன அகங்கார முதலிய அந்தக்கரணம் நான்குமாம் என்றும், இறுதிக் கண்ணதாகிய நாதத்தினாற் குறிக்கப்படுவது ஆன்மாவாம் என்றும், இந்த அகார முதலிய ஐந்தும் பிரமன் முதலிய ஐவராலும் செலுத்தப்படுவனவாம்

என்றும் கண்ந்தோறும் நினைப்பாகிய சகலமும் மறப்பாகிய கேவலமும் அதிநுட்பமாய்க் காற்றாடி போல மாறி மாறி நிகழும் என்றும், சகலாவத்தையின்கண்ணேகணந்தோறும் அவ்வாறு அறிவு தோன்றியும், ஒடுங்கியும் வருவது கடலின் கண்ணே புதிது புதிதாய்த் திரை தோன்றியும், ஒடுங்கியும் வருதல் போலுமாம் என்றும், மலத்தின் சொரூபமும், தடத்தமும் இது இதுவாம் என்றும், ஆன்மாவின் மாட்டு மலமானது செம்பிற் களிம்பு போல அநாதிக் கண்ணுளதாம் என்றும், மலத்தினுல் மறைப்புண்ட ஆன்மாவின் ஞான இச்சாக் கிரியைகளை (மாயாதத்துவ கருவிகளாகிய) வித்தை, அராகம், கலை என்பன தீபத்தையும், கண்ணுடியைப் போன்று நின்று விளக்குவனவாம் என்றும், சகச மலம் ஆணவம் என்றும், ஆகந்துக மலம் மாயா காரிய உடம்பு முதலியவை என்றும், ஆன்மாவானது கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தைகளிற் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐவகை அவத்தைகளை அடையும் என்றும், ஆன்மாவானது நெற்றித் தானமாகிய சாக்கிரத்தினின்றும் மூலாதாரத்துத் துரியாதீதம் இறுதியாகிய ஐந்து அவத்தைப்படுதலாகிய கேவலாவத்தை இந்த நான்காம் சூத்திரத்திலுற் கூறப்பட்டதாம் என்றும், சகலாவத்தை ஐந்தாம் சூத்திரத்தினும், சுத்தாவத்தை ஆரும் சூத்திரத்திலுலும் கூறப்படும் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

## ஐந்தாம் சூத்திரம்

### (பாசத்தின் இயல்பு)

**விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு**
**அளந்தறிந் தறியா வாங்கவை போலத்**
**தாந்த முணர்வின் றமியருள்**
**காந்தங் கண்ட பசாசத் தவையே.**

(சூ.பொ) விளம்பிய உள்ளத்து = (மேலே) கூறப்பட்ட ஆன்மாவினுல் மெய், வாய், கண், மூக்கு = மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன; அறிந்து அறிந்து அறியா = தத்தமக்கு உரிய புலன்களை (இஃதின்னதென்று) அளவிட்டறிந்தும் (தம்மையும், தம்மை இடங்கொண்டு செலுத்தும்) ஆன்மாவையும் அறியமாட்டா; ஆங்கு அவை போல = அந்த இந்திரியங்கள் போல, தாம் தம்முணர்வின் = (ஆன்மாக்களாகிய) தாம் தமது அறிவிற்கு வியஞ்சகமாகிய; தமி அருள் (அளந்தறிந்து அறியா) முதல்வனது திரோதான சத்தியால் எல்லாம் அளவிட்டு அறிந்தும் தம்மையும் முதல்வனையும் (அறியமாட்டா) அவ்வ காந்தம் கண்ட பசாசத்து = அவ்வான்மாக்கள்

(அவ்வாறு உணர்தல்) காந்தத்தை (எதிர்ப்பட்ட) இரும்பு போலாம். ஆதலால் முதல்வன் காந்தம் போல மாறுபாடு இல்லாதவனே ஆவன்.

**(க. ரை) ஆன்மாக்களிடத்துச் சிவபெருமான் செய்யும் உபகாரம் உணர்த்துகின்றது.**

சூத்திரத்தில் தமி யருள் என்றது தமது முதல் எனப்படும் திரோதான சத்தியினையே எனக் கொள்க.

(க. பொ) ஆன்மா சாக்கிர முதலிய ஐந்து அவத்தைப் படும் போது, அவ்வான்மாவும் கருவிகளும் அரசனும் அமைச்சும் போல நிற்குமாயின், அவைகளே சாலுமாதலின் சிவபெருமானால் ஆகற் பாலதொன்றில்லை போலும் என்பாரை மறுத்து, அப்போதும் சிவபெருமானது உதவியாகிய உபகாரம் எனப்படும் திரோதான சத்தியின் தொழில் இன்றியமையாது வேண்டப்படும் என்பதாம். மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின், திரோதான சத்தியின் இலக்கணம் கூறவே, அம்மாயா கன்மங்களுடைய இலக்கணங்களும் கூறப்பட்டனவாய் முடியும்.

(சூ. பி. பொ) ஆன்மாவினால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் தத்தம் விடயங்களை அறிந்து வருமிடத்தும், அவை அங்ஙனம் அறிந்து வரும் தம்மையும், தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வான்மாவையும் அறிவதில்லை. அது போல, ஆன்மாக்களும் சிவபெருமானது சிற்சத்தியினால் கேவலாவத்தையினும் சகலாவத்தையினும் உபகரிக்கப்பட்டு சாக்கிர முதலிய ஐந்து அவத்தைகளினின்று கன்ம பயன்களை அறிந்து அநுபவித்தும், அவ்வாறு செய்யும், தம்மையும், தம்மைச் செலுத்தும் திரோதான சத்தியையும் அறிய மாட்டாவாம். காந்தத்தை எதிர்ப்பட்ட இரும்பானது அதன் சந்நிதி மாத்திரையானே இழுக்கப்படுவது போல, கரணத் தானன்றிச் சங்கற்ப மாத்திரையினாலே செயலாற்றும் சிவபெருமானது சந்நிதி மாத்திரத்தினால் அவ்வான்மாக்கள் இருவகை ஐந்தவைத்தையினும் உணரும்; அதனாற் சிவபெருமான் விகாரமடைவாரல்லர்.

## முதற் கூறு

### உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

(சூ பொ.) தாமரையிலையின் நீர் போலப் புருடன் பற்றற்று நிற்ப, அவ்வான்மாவின் சந்நிதியில் புத்தி தத்துவமே மெய், வாய் முதலிய ஐம்பொறி வாயிலாக அறியும் என்றும், அவ்வான்மா கருவி

களோடு கூடிப் புருடன் என நின்று ஐந்து அவத்தையுறும் என்றல் பொருந்தாதென்றும் சாங்கியர் கூறுவர். அவரை மறுத்து ஐம்பொறிகளோடும் ஆன்மா ஒற்றுமைப்பட்டு நின்றறிதலான் அவ்விந்திரியங்கள் ஒவ்வொரு புலனையும் அறிகின்றமையால் ஆன்மாவினால் ஐம்பொறி முதலிய தத்துவங்களெல்லாம் தொழிற்படுகின்றன என்பது தெளிவு.

ஆன்மா அங்ஙனம் ஐம்பொறிகளோடு ஒற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலும், அவ்வைம் பொறிகள் ஆன்மாவை யின்றி நடைபெறாமையும் விளக்கப்படுகின்றன.

(வெ. பெ) அரசனானவன் தனது அத்தாணி மண்டபத்திலிருந்து தன் கீழ்ச் சேவகரை அவ்வவர்க்குரிய காரியங்களிலே செலுத்தி ஆளுமாறு போல, ஆன்மாவும் மெய் வாய் முதலிய பொறிகளை அவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்திக் கொண்டு இலாடத் தானத்திருத்தலான், சேவகர்கள் ஏவிய கரும மாத்திரையின் அன்றி மேற்பட்டுச் செல்ல மாட்டாமை போல, அவ்வைம் பொறிகள் ஆன்மாவை அறிய மாட்டாவாயின. அங்ஙனமாயின், ஐம்பொறிகள் ஆன்மாவினாலன்றி விடயத்தை அறிய மாட்டாவாயினும், ஆன்மாவானது ஐம்பொறிகளை விடுத்து அறிய மாட்டாதோ எனின் ஒரு கருமஞ் செய்தற்கு அரசனும் மந்திரி முதலாயினோரும் தம்முள் ஒருவரை ஒருவர் இன்றியமையாதிருத்தல் போல, ஒரு விடயத்தை அறிதற் கண்ணும் ஆன்மாவும் ஐம்பொறிகளும் தம்முள் இன்றியமையாவாம். இவ்வுண்மை இலாடத்தானத்தை விடுத்துச் சொப்பனத்தானத்து எய்திய விடத்திற் காணப்படும்

இங்கே இலாடத்தானத்தில் மாயாதத்துவங்களோடு இயைந்து சிறிது அறிவு விளங்கிப் போகங்களை ஆன்மா புசித்து நிற்கும் சகலாவத்தை கூறப்பட்டவாறு காண்க.

## இரண்டாம் கூறு

### அரனாலே உயிர்கள் அறியும்.

(சூ. பொ.) ஐம்பொறி முதலிய கருவிகள் அறிவில்லனவையாதலின் அவற்றுக்கு ஆன்மா இன்றியமையாது வேண்டப்படும். சித்தாகிய ஆன்மா சிவபெருமானது உபகாரத்தை அவாவுமென்பது பொருந்தாது அங்ஙனம் அவாவுமெனக் கொள்ளின், அந்தச் சிவபெருமானும் பிறிதொன்றன் உபகாரத்தை அவாவுவாரெனப் பட்டு வரம்பின்றி ஓடுமாலோ எனின், அது பொருந்தாது. தத்துவங்களும் ஆன்மாவும் தமக்கொரு முதலையுடையனவாதலும், சிவபிரானுக்கு அங்ஙனம் ஓர் முதல் இல்லையாதலும் மேலே போந்த

சூத்திரங்களாற் பெறப்பட்டமையின், ஆன்மாக்களும் சேதனமும் ஐம்பொறிகள் சடமுமாயிருக்கும் வேறுபாட்டினுல் தம்முள் ஒவ்வா வாயினும், தம்மையும் தமது முதல்வராகிய சிவபெருமானையும் உணரமாட்டாதிருத்தற் கண் ஐம்பொறியும் ஆன்மாவும் தம்முள் ஒக்குமாதலின், அவ்வான்மாக்கள் சிவபெருமான் அறிவிக்கவே அறியும் என்பதாம்.

ஆன்மாவினுல் உணரும் இந்திரியங்களுக்கு வரும் பயன் அவற்றோடு ஒற்றித்துக் காணும் அவ்வான்மாவுக் காயவாறு போல, ஆன்மாவுக்கு வரும் சுக துக்கங்கள் ஆன்மாவினேடு ஒற்றித்துக் காணும் சிவபெருமானுக்காம் என்பது ஒவ்வாதென்று கூறப் படுகின்றது.

தஸ்யபாசா சர்வமிதம் விபாதி |

''அவரது (சத்திப்) பிரகாசத்திஞல் ஈதெல்லாம் (பிரபஞ்ச மெல்லாம்) பிரகாசிக்கின்றது'' என்று கடவல்லி சுருதி கூறியவாறு, அவ்வக் காரியங்களில் உன்முகமர்கும் சிவசத்தி சங்கற்பமாகிய சிவனது சந்நிதியிற் பிரபஞ்சம் செயற்படுகின்றது. இங்கு முதல்வன், ''மன்னுசிவன்'' எனக் குறிக்கப்படுகின்றனர். பேரின்பத்துக்குக் காரணர் என்பது இங்குச் சிவன் என்னும் சொற்குப் பொருள். தமக்கென ஓர் காரணமில்லாது ஆன்மாவின்பொருட்டு அறிகின்றன வாகிய பொறிகள் போலாகாமையால்,

ய: சர்வஞ்ஞ: சர்வவித் | மநோமய: பிராணசரீர நேதா |

''எவர் முற்றறிவினராய் அனைத்தையும் அறிந்துளரோ, அவர் ஞானமயராய், (ஆன்மாவின்) பிராணனையும் சரீரத்தையும் செலுத்து பவராயுள்ளார்'' என்று முண்டகோபநிடதம் கூறுமாறு; ஆன்மா வானது தனக்குச் சிவன் காண்பித்துக் கொண்டு நிற்பத் தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை அறிந்து நிற்கும்.

இங்கே முதல்வன் சொன்ன சிவன் எனப்படுகின்றனர். முற்றுணர்வினர் என்பது இங்குச் சிவன் என்னும் சொற்குப்பொருள், இதனுல் அவர் ஆன்மாவுக்குக் காண்பித்துக் கொண்டு நிற்பவர் என்பது பெறப்படும். அங்ஙனம் ஆன்மாவுக்குக் காண்பித்துக் கொண்டு நிற்பினும், தமது சந்நிதியில் அசத்தெல்லாம் சூனியமாய் முனைக்கமாட்டாது போதலால் விசுத்த தேகர் எனப்படும் மங்கல வடிவினராகிய சிவன் அவ்வான்மாவைப் போல அவற்றை அநுபவியார்.

இங்கே முதல்வன் ''எண்ணுன் சிவன் எனப்பட்டு அசத்தை உணரா மைக்குக் காரணம் மங்கலவடிவாகிய அவரது தூய தன்மை என்பது உணர்த்திற்று.

பிருதிவி நாற்கோண வடிவம், பொன்னிறம், இந்தப் பிருதிவியின் பகுதி நரம்பு, இறைச்சி, என்பு, மயிர், தோல் என்னும் ஐந்துமாம்.

அப்பு பிறை வடிவம், வெண்ணிறம். அப்புவின் பகுதி நீர், மூளை சுக்கிலம், நிணம், உதிரம் என்னும் ஐந்துமாம்.

தேயு முக்கோண வடிவம், செந்நிறம், தேயுவின் பகுதி பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர் வேட்கை என்னும் ஐந்துமாம்.

வாயு அறுகோண வடிவம், புகை நிறம், வாயுவின் பகுதி போக்கு வரவு, நோய், கும்பித்தல், பரிசம் என்னும் ஐந்துமாம்.

ஆகாயம் வட்ட வடிவம், நீலநிறம், ஆகாயத்தின் பகுதி வெகுளி, மதம், மானம், ஆங்காரம், உலோபம் என்னும் ஐந்துமாம்.

கந்தம் பொன்னிறம், ரசம் வெண்ணிறம், ரூபம் செந்நிறம், பரிசம் புகைநிறம், சப்தம் நீலநிறம்.

உபத்தம் பொன்னிறம், பாயுரு வெண்ணிறம், பாணி செந்நிறம், பாதம் புகைநிறம், வாக்கு நீலநிறம்.

மூக்கு பொன்னிறம், வாய் வெண்ணிறம், கண் செந்நிறம், மெய் புகைநிறம், செவி நீலநிறம்.

மனம் வெண்ணிறம், புத்தி செந்நிறம், அக்ங்காரம் கருமை நிறம், சித்தம் வெண்ணிறம்.

பிரகிருதி சங்கு நிறம்.

புருடன் கருமை வெண்மை நிறம், அராகம் இருணிறம், வித்தை புகைநிறம், கலை குந்தபுட்ப நிறம், நியதி பொன்னிறம், காலம் வெண்மை, செம்மை, கருமை நிறம், அசுத்த மாயை இருணிறம்.

சுத்தவித்தை பொன்னிறம், ஈசுரம் இருணிறம், சாதாக்கியம் படிக நிறம், சத்திதத்துவம் இரத்த நிறம், சிவதத்துவம் சுவேத நிறம்.

அடியண்ட கடாகத்துக்கு மேலுள்ள காலாக்கினிருத்திரருடைய கோயில் ஒரு கோடி யோசனை, அவரது அக்கினிச் சுவாலை பத்துக்கோடி யோசனை, அதன் புகை ஐந்து கோடி யோசனை, அவரது சிங்காசனவுயரம் ஆயிரம் யோசனை, அதன் விலாசம் இரண்டாயிரம் யோசனை, அவர் திருமேனி உயர்வும் பதினாயிரம் யோசனை.

காலாக்கினி புவனத்துக்கு மேல் இருபத்தெட்டுக் கோடி நரகம் இதற்கு மேற் கூர்மாண்டர் புவனம் இதற்கு மேல் ஆகாயவெளி ஒன்பது லக்ஷ யோசனை. இதற்கு மேல் ஏழு பாதலம். இதற்கு மேல் கனிட்ட பாதலம். இதற்கு மேல் ஆடகேசுவரர் புவனம், இதற்கு

மேல் வெளி. இதற்கு மேல் ஆதிசேஷனால் தாங்கப்படும் பூமி. பூமியிற் சம்புத் தீவு முதலிய ஏழு தீவுகளும், உவர்க்கடல் முதலிய ஏழு கடல்களும் உள்ளன.

பிருதிவிதத்துவம் நூறு கோடி யோசனை நீளம் அகலம் உயர முடையதாய் ஆயிரகோடி அண்டமுடையது. இந்தப் பிருதிவி தத்துவத்திற் பத்து மடங்கு விரிவுடையது. அப்பு, இதிற் பத்து மடங்கு தேயு, இதிற் பத்து மடங்கு வாயு, இதிற் பத்து மடங்கு ஆகாசம், இதிற் பத்து மடங்கு (ஞானேந்திரியம், கன்மேந்திரியம், தன்மாத்திரை, மனங்கள் அடங்கிய) அகங்காரம் இதிற் பத்து மடங்கு புத்தி, இதிற் பத்து மடங்கு குணம், இதிற் பத்து மடங்கு பிரகிருதி.

இதில் நூறு மடங்கு அராகம்; இதில் நூறு மடங்கு வித்தை; இதில் நூறு மடங்கு நியதி, இதில் நூறு மடங்கு கலை, இதில் நூறு மடங்கு காலம், இதில் நூறு மடங்கு அசுத்த மாயை, இதில் ஆயிர மடங்கு சுத்தவித்தை, இதில் ஆயிரமடங்கு ஈசுரதத்துவம், இதில் ஆயிரமடங்கு சாதாக்கிய தத்துவம், இதில் இலக்க மடங்கு சத்தி தத்துவம், இதில் இலக்க மடங்கு சிவதத்துவம். இங்ஙனம் கூறப் பட்ட பிருதிவி முதலிய தத்துவப் பிரபஞ்சமனைத்தையும் ஆன்மா வானது அசத்தாகிய சடமென்று காண்டல் தத்துவ தரிசனம்.

சிவபெருமான் அறிவிக்க அறியுங்கால்; ஆன்மாவானது சிவ பெருமானின் வேறாய் நின்று உணருமோ? ஒன்றாய் நின்றுணருமோ? எனின், அவ்விரு தன்மையுமின்றி நிற்கும் அதற்கு உதாரணம் :

(வெ. பொ) சூரியப் பிரகாசத்துள் அடங்கி, அதற்கு வேறாய் விளங்கித் தோன்றுதலும், அதுவாயொழிதலுமில்லாத நட்சத் திரங்கள் அச்சூரியனாலே ஒளியை உடையவாமாறு போல, கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், தீண்டியும், அறியப்படும் ஐம்புலன் களையும் ஆன்மாவானது சிவபெருமான் அறிவித்தலாகிய முதலுப காரம் எனப்படும் சூக்கும பஞ்சகிருத்தியஞ் செய்யுங்கால் உணர்ந்து, அவருக்கு வேறாதலும், ஒன்றாதலுமின்றி, அவ்விரண்டிற்கும் பொதுவாய் அவருள் அடங்கி உடனாய் நிற்கும் என்க.

ஆன்மாக்களுக்குப் பல வளர்ச்சி முறையில் அறிவு நிகழு கின்றமையான், அது சிவபெருமான் அறிவிக்கும் வேறுபாட்டினாலாய தென்றல் வேண்டும்; அங்ஙனமாயின் அவர் நிர்விகாரி எனப்படுதல் போய், விகாரி எனப்படுவார் எனின், அவர் விகாரியாகார் எனக் கூறப்படுகின்றது :-

(வெ. பொ) ஆன்மாக்களுடைய பசுத்துவத்தை ஒழித்துச் சிவத்துவத்தை விளக்குதற்கு உளதாகிய இரக்கம் சிவபெருமானுக்கு அநாதிக் கண்ணதேயாம். அந்த இரக்கம் எனப்படும் அருள் பிறிதோர் பொருளன்று, சிவபெருமானுக்குளதாகிய சத்தியேயாம். இரக்கம் குணம்; அவ்விரக்க குணத்தையுடைய சிவபெருமான் குணி, அவ்வருட் குணம் அவரை விட்டில்லை, அவரும் அவ்வருளை விட்டிலர், இவ்வுண்மை,

குணபூதா பராசக்திஸ் ததாசிரய குணீ சிவ: |

''பராசத்தியார் குணம், இவர்க்குப் பற்றுக் கோடாயுள்ளார் குணியாகிய சிவன்'' என்று காலோத்தராகமம் கூறுகின்றது. சித்தாந்த நெறியுணர்ந்த ஞானக் கண்ணுடையார் உணர்வுக்கு, ஞாயிறு தன் ஒளியோடு தாதான்மியமாய் ஒற்றித்து நிற்குமாறு போல், சிவபெருமான் அவ்வருளோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பார் என்பது இனிது புலப்படும். ஆதலாற் சுவதந்திரராகிய அந்தச் சிவபெருமான் நிர்விகாரியாய் நின்றே தமது சத்தி சங்கற்ப மாத்திரையினால் அனைத்தையுஞ் செய்யவல்லார் ஆவர் எனத் துணிக.

அநவஸ்தி தேஷ்வ வஸ்திதம் |

''விகார முறுபவற்றுள்ளே, அவர் விகாரமுறாதவர்'' என்று கடவல்லி சுருதி கூறினமையால், அவர் விகாரியாகார் என்பது அறியப்படுகின்றது.

## ஐந்தாம் சூத்திரத் தொகைப் பொருள்

ஆன்மாவினாலே ஐம்பொறிகள் தம்தம் புலன்களை அறியும் என்றும், அங்ஙனம் அறிந்து வந்தும் அவ்விந்திரியங்கள் தம்மையும் தம்மை உளூற்றும் ஆன்மாவையும் உணரமாட்டா என்றும், சிவபெருமானாலே ஆன்மாவானது சகலாவத்தையிலே நின்று வினைப் பயன்களை அநுபவித்தும், அங்ஙனம் அநுபவிக்கும் தம்மையும், அநுபவிக்குமாறு செலுத்தி நிற்கும் திரோதான சத்தியையும் உணர மாட்டா என்றும், ஒரு கருமஞ் செய்தற்கு அமைச்சரும் அரசரும் தம்முள் இன்றியமையாது கூடி நிற்றல் போல, ஒரு பொருளை அறிதற் கண் ஆன்மாவும், இந்திரியங்களும் இன்றியமையாது இயைந்து நிற்பனவாம் என்றும், ஆன்மாவானது சிவபெருமான் உபகாரத்தை அவாவுமாறு போல, சிவபெருமான் தமக்கு மற்றொன்றின் உபகாரத்தை அவாவுவாரல்லர் என்றும், அவர் சன்னதிக் கண்ணே அசத்தாகிய பொறி முதலிய கருவிகள் முனைக்கமாட்டா என்றும், அதனால் அவர் புலன்களால் எய்தும் உலகப் பொருள்களை அநுபவிப் பாரல்லர் என்றும், ஆன்மாக்கள் சிவபெருமான் அறிவிப்ப அறிவனவேயாயின், அவ்வான்மாக்கள் அவருக்கு வேறாய் நின்று

அறியாமலும், ஒன்ருய் நின்று அறியாமலும், பொதுவாய் அவரோடுடனுய் நின்றறியும் என்றும், சிவபெருமான் தமக்கு அநாதிக் கண்ணதாகிய இரக்கம் எனப்படும் அருட்சத்தியினின்று பிரியாதுள ராதலின், ஆன்மாக்களுக்கு அங்ஙனம் உணர்த்துங்கால் தம்வய முடைய அவர் ஓர்காலும் விகாரம் எய்தாது நிர்விகாரியாய் நிற்பர் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## ஆரும் சூத்திரம்

### (பதியின் தன்னியல்பு)

"உணருரு வசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே"

(சூ. பொ) உணர் உரு எனின் அசத்து = முதல்வர் அறியப்படும் பிரபஞ்சம் போல்வர் எனின் அசத்தாவர்; உணராது எனின் இன்மை - (ஒருவாற்றுனும்) அறியப்படாதவராயின், சூனியப் பொருளாம்; இன் = ஆதலின்; இருதிறன் அல்லது = (இருபகுதியு) மின்றி; இரண்டு வகையின் சிவசத்தாமென = (சுட்டறிவால் அறியப் படாமையும் ஒருவாற்றுன் அறியப்படுதலுமாகிய) இரண்டு வகை யாலும் சிவசத்தாமென்று; உலகு இசைக்கும் = மெய்யுணர்வுடையர் கூறுவர்.

(க. ரை) **சத்தும் அசத்தும் வரை செய்துணர்த்துகின்றது.**

(க. பொ) மேல் ஐந்து சூத்திரங்களினுல் உணர்த்தப்பட்ட பொருள்களுள்ளே சத்தினியல்பையும் அசத்தினியல்பையும் மயக்கமுரு வண்ணம் முடிவு செய்துரைத்து, இலக்கணவியலிலே கூறப் படாது எஞ்சி நின்ற பதிப் பொருளிலக்கணம் கூறப்படுகின்றது என்பதாம்.

(சூ. பி. பொ ) சிவபெருமான் பாச ஞான பசு ஞானங்களால் அறியப்படுவாரேல், அவர் அங்ஙனம் அறியப்படும் அசேதனப் பிரபஞ்சம் போல அழிபொருளாகிய அசத்தாய் முடிவர், எவ்வகை யாலும் உணரப்படாத பொருளாவாரெனின் அவர் முயற்கோடு, ஆமை மயிர்க்கம்பலம் போலச் சூனியப் பொருளேயாவர். ஆதலான் இவ்விருவியல்புமின்றி ஒருவாற்றுற் பாச ஞான பசு ஞானங்களால் அறியப்படாத சிவமாயும், ஒருவாற்றுல் பதிஞானமொன்றினுல் அறியப்படும் சத்தாயும் இருக்கும் இருவகையாலும் அவர் சிவசத்தே யாவர் என்பர் மெய்யுணர்விலோங்கினுர்.

## முதற் கூறு

### உயிர் அறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

(சூ. பொ.) சத்தாகிய பிரபஞ்சம் சுட்டுப்படுதன் மாத்திரத்தினால் அதனை அசத்தென்று கூறுதல் சற்காரியவாதத்துக்கு ஏலாதாமெனின் அந்தச் சுட்டுப்பொருள்கள் இராசத குண மிகுதியினால் உள்ளதென்றறியும் உணர்வைப் பிறப்பித்து நிற்கும், பின் அவை தாமத குண மிகுதியினால் இல்லை என்னும் உணர்வைப் பிறப்பித்து நிற்கும். ஆதலான், இங்கே அறிவினால் அறியப்பட்ட சுட்டுப் பொருளெல்லாம் அசத்து என்பதாம்.

நஅசதாசிந்நோ இஇிசதாசித் ।

''மகாப்பிரளய காலத்திலே அசத்துமில்லை, சத்தும் இல்லை'' என்று இருக்கு வேதம் கூறிய மந்திரத்துக்கு நீலகண்ட சிவாசாரியர் பொருள் கூறுங்கால் சத்தாகிய பசுவினதும், அசத்தாகிய பாசத்தினதும் சொரூப சத்து விலக்கப்படவில்லை என்றும் பின் நாமரூப விபாகத்துக்கு அருகமாகிய தூலரூபமே விலக்கப்பட்டது என்றும் அருளிச் செய்திருக்கின்றாராதலின், காரியாவத்தையில் தூலமாய் விளங்கி நின்ற பிரபஞ்சம் காரணாவத்தையிற் சூக்குமமாகிய சத்தி வடிவாய் விளங்காது நிற்கும் வேறுபாடு பற்றியே பிரபஞ்சம் அசத்தெனப்பட்டதென்றுணர்க.

பதியினது தடத்த இலக்கணம் எனப்படும் பொதுவியல்பு இரண்டாம் சூத்திரத்து புநருற்பவம் கூறும் முகத்தாற் கூறப்பட்டது. அப்பதியின் சொரூப இலக்கணம் எனப்படும் சிறப்பியல்பு இந்த ஆறும் சூத்திரத்தினாற் கூறப்படுகின்றது. சிவபெருமான் சித்துச் சத்து எனப்படலால் அவர்க்குரிய ஏனைய சொரூபத்துக் குளவாய சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இந்த இரண்டனுள்ளே அடங்கும்.

பசு பாசங்களின் சிறப்பியல்புகள் சிவஞானத்தினாலேதான் அறியப்படும். அங்ஙனமாயினும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கும் ஒரு விடயத்தை அறிதற்குக் கருவியாக மருவி, இவைகளே கர்த்தா என்றுரைக்குமாறு ஆன்மாவோடு ஒற்றித்து நின்று நிகழ்வனவாம், கண்ணுக்கு விளக்குப் போல இவைகள் ஆன்மாவுக்குக் கருவிகளாய் வேறு நிற்பன என்றறிந்து நீங்கி நின்று, இவற்றைக் கொண்டு அறியும் கருத்தாவினுண்மை யாது என்று ஆராய்ந்தார்க்கு ஆன்ம சொரூபம் இனிது விளங்கும், அதன்பின் அங்ஙனம் ஆராயும் அறிவு பசுஞானமாகும். இஃது ஆன்மாவின் பொதுவியல்பு.

சூக்குமை முதலிய நால்வகை வாக்குக்களின் பகுதியவாய சொற்பிரபஞ்சம்; பிருதிவி முதல் நாதமிறுதியாகிய பொருட் பிரபஞ்சம் என்னும் இவை பற்றி நிகழும் ஏகதேச ஞானமனைத்தும் பாசஞானமாகும். இது பாசஞானத்தின் பொதுவியல்பாகும்.

சற்காரிய வாதம் கூறும் சைவ சித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலையன்று; பசு பாசங்கள் பொதுவியல்பு பற்றி அசத்தெனப் படுமாயினும், சிறப்பியல்பு பற்றி அவை அசத்தாக மாட்டா, பின் சத்தெனவே படும். காரியப் பிரபஞ்சமனைத்தும் ஏனைப் பசு பாசங்கள் போலன்றிப் பொதுவியல்பு சிறப்பியல்பு என்னும் இருவகை இயல்பானும் காட்சிப் புலனாய், இத்துணைப் போது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நெடுங்காலம் நிலை பெறுவது போறறோன்றி, காலம் வந்த போது விரைந்து கெட்டு மறைந்து போகுந் தன்மைத்தாதலின் அப்பிரபஞ்சம் அசத்தெனப் பட்டது.

> பிருதிவி யாத்யாத்ம தத்வாந்த மாத்வதத்வ முதீரிதம் ।
> வித்யா தத்வாதி மாயாந்தம் வித்யாதத்வ முதீரிதம் ।
> தஸ்யோர்த்வம் சிவதத்வந்து தத்வதிரய முதாகிருதம் ।
> ஏவம் சர்வம் கிரமேணைவ தத்வத்திரயம் லயோபவேத் ॥

''பிருதிவியாதி தத்துவம் இருபத்துநான்கும் ஆன்ம தத்துவம் எனவும், புருடன் முதலிய ஏழும் வித்தியாதத்துவம் எனவும், அதற்கு மேலுள்ளது சிவதத்துவமெனவும் கூறப்படும்; இங்ஙனம் இந்த மூவகைத் தத்துவமனைத்தும் கிரமமாக ஒன்றிலொன்று இலயத்தை அடையும்'' என்று சிந்திய விசுவாகமம் கூறுகின்றது. பிருதிவி முதல் மூலப் பிரகிருதியீறாகிய இருபத்துநான்கு தத்துவங்களும் சீகண்ட ருத்திரரால் ஒடுங்கும், மூலப்பிரகிருதிக்கு மேலுள்ள ஆறு தத்துவமும் (முப்பத்துமூன்றும் தத்துவத்தினராகிய) அனந்தேசுரரால் ஒடுங்கும். அவற்றின் மேலுள்ள சுத்தவித்தை முதலிய மூன்று தத்துவமும் சத்திதத்துவ சிவதத்துவத்தின் பாலராகிய இலய சிவனால் ஒடுங்கும். ஏனைச் சத்திதத்துவம் சிவதத்துவம் இரண்டும் சுத்த சிவத்தினால் ஒடுங்கும். இங்ஙனம் இந்தத் தத்துவமனைத்தும் இடையிலே நீங்கி விடும் என ஆன்மா காணுதல் தத்துவசுத்தி எனப்படும்.

இங்கே அபாவத்தின் இயல்பாவது பாவத்திற்கு மறுதலைப் பொருள் என்றும், அதனால் அபாவம் என்பது இன்மை என்னும் பொருளதாம் என்றும் நையாயிகர் கூறுமாறு போல, ஈண்டு அசத்தென்னும் மொழிக்கு இன்மையாகிய சூனியமாம் எனப் பொருள் கோடற்பாற்றன்று; பிரபஞ்சமானது காரியாவத்தையில் தூலமாய்ப் புலப்பட்டு நின்று, பின்னர் மறைந்து சூக்கும ரூபமாய்க் காரணாவத்தையில் நிற்கும் என்றும், இந்த வேறுபாட்டினால், அங்ஙனம்

காட்சிப்படாத சத்தாகிய காரணப் பொருளை நோக்கிக் காரியப் பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது என்றும் பொருள் கோடற்பாற்றும்; (பாவம்-உண்டு எனப் புலப்படுதல்; அபாவம்-இன்று எனும் படிபுலன் ஆகாமை.)

(வெ. பொ.) சத்தினியல்பை அறிந்தவன் ஆராய்வானாயின், அவனுக்கு அறிவினால் அறியப்பட்ட காரியப் பிரபஞ்சமெல்லாம் அசத்தேயாகும்; அங்ஙனம் தோன்றி ஒழிந்து போவதாகிய பிரபஞ்சம் அசத்தாய்ப் போதல் எவற்றை ஒப்பதாமெனின், அது தோன்றிய போதே மறைந்து போகும் நீர் மேல் எழுத்தையும், முடிவு பெறுத லின்றி இடையிலே மறைந்து போகும் கனவையும் ஒப்பதாகும்.

## இரண்டாம் கூறு

### அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்

(சூ. பொ.) வாக்கு மனங்களால் ஓதி உணரப்படுவதாகிய பொருள் ஒன்றை அறிதற்கு எவ்வகைச் சாதனங்களும் வேண்டப் படாமையானும், ஒருவாற்றானும் அறியப்படாத பொருள் ஒன்று எவ்வகைச் சாதனங்களாலும் அறியப்படுமாறின்மையானும், இவ் விரண்டு தன்மையுமின்றிப் பாச ஞான பசு ஞானங்களைக் கடந்து சிவ ஞானத்தினால் ஒற்றுமைப்பட்டு நின்று உணரும் அநுபவ ஞான மாத்திரைக்கே புலப்படுவது சத்தாகிய சிவமென்பதாம்.

பரப்பிரமப் பொருள் அஞ்ஞானத்தினால் ஞாதா எனவும், ஞேயம் எனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படும் சாதனங்களால் அஞ்ஞானம் நீங்கிய போது, ஞாதா, ஞேயம் என்னும் பகுப்பின்மை யாற் சத்தென்றேனும், அசத்தென்றேனும் ஒரு வகையானும் அறியப் படுமாறின்றிக் கேவலம் ஞான மாத்திரையாய் நிற்பதாம் என்று கூறுதல் பொருந்தாது; எங்ஙனமெனிற் கூறுதும்.

(வெ. பொ.) விவகாரத்திலே கருதப்பட்ட சத்துமின்றி அசத்துமின்றி ஒரு பொருள் உண்டெனில் அதற்குப் பிரமாணம் யாது? பிரமாணமில்லாத சூனியமெனின், ஒருவாற்றானும், பிரமாணமில்லாத சூனியமும், காட்சி முதலிய பிரமாணங்களுக்கு விடயமாவதுமாகிய இரண்டும் அசத்தென்று மேலே கூறப்பட்டமை யான், பிரமப் பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னும் சுருதி களோடு மாறுபடுமாகலின், சாந்தோக்கியோபநிடதம், தைத்திரீய ஆரணியக முதலியவற்றுள்ளே சத்து என்று ஓதப்படும் சுட்டறிவினால் அறியப்படாத பரமார்த்தமாகிய மெய்ப்பொருள் சைவோபநிடதங் களினும் சைவாகமங்களினும் அன்னியமின்றி அநுபவ மாத்திரையிலே கோசரிப்பதாகிய சிவனருளேயாமன்றிச் சூனியமன்றாமென்பது. இதனாற் கேவலம் ஞான மாத்திரையாயிருப்பது பரம் பொருள் என்று கூறும் மாயாவாதி மதம் பொருந்தாதாம் என்க

(வெ. பொ.) ஆன்மாவினால் அறியப்படும் கருவிகளெல்லாம் அசத்தாம்; அசத்தென்று கூறவே அசித்தாதலும் பெறப்படும். கருவிகளுள் எந்தக் கருவியும் சிவமாகிய பொருளை அறிய மாட்டாது; (இதனாற் பாச ஞானத்தினால் அறியப்பட மாட்டாது என்பதாம்) கருவிகளைக் கொண்டு அறிகின்ற ஆன்மாவும் அப்பொருளை அறிய மாட்டாது. (இதனால் பசுஞானத்தினாலும் அறியப்படாது என்பதாம்) ஆன்மாவானது அதனை ஆராயப் புகுந்தால், அங்ஙனம் அறியப்படும் குட முதலிய பொருள்கள் போல, அந்தச் சிவப் பொருளும் உணர்கின்ற ஆன்மாவுக்கு வேறாம்; ஆன்மாவுக்கு அறிவு விளங்கும் உண்மையை அறிந்தவன் தன் அறிவு அச்சிவபிரான் திருவருளில் அடங்கி, அதுவாய் நின்று அந்தத் திருவருளினாலே சிவத்தை அறியுமாதலால் ஏனைப் பொருள்களை அறியுமாறு போல அச்சிவப்பொருளுக்கு வேறாய் நின்று அந்தச் சிவமாகிய முதற்பொருள் அறியப்படுவதன்றாம்.

இதனால் தனியாய் நின்ற முதற்பொருளை ஏனைய பொருள்களைப் போல அளவைகளால் அறியலாகும் என்னும் நையாயிகர் மதம் மறுக்கப்பட்டதாம்.

(வெ. பொ.) ஆன்ம அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருள்களெல்லாம் அசத்தாய் முடியுமாதலின்; ஏனைப் பாவனைகள் போல மன முதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும் பாவனையானது அந்தப் பரம் பொருளைக் காட்டாது, காட்டின், அப்பொருள் அசத்தாய் முடியும். கருவிகளினீங்கிப் பாவிப்பதே அந்தப் பாவனையாமெனின் கருவிகளை நீங்கியவிடத்து யாதும் அறியுமாறின்றிக் கேவலாவத்தை வந்து தலைப்படுமாதலின், அது எண்ணமாத்திரமாய் முடியுமேயன்றி அதனால் எய்தும் பயன் ஒன்றுமின்றாம். கருவிகளைக் கொண்டும் பாவியாது, கருவிகளினீங்கியும் பாவியாது, அநிர்வசனீயமாய் (சொல்லொணாததென்றுணர்ந்து) பாவிக்கப் படுவதாமெனின், அது சூனியமாயே முடியும். பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவித்தால் என்னை எனின், அது போலிப் பாவனையாய், பாவனாதீதம் போலப் பாவனை மாத்திரமேயன்றி, அதனாற் போதரும் பயன் ஒன்றுமின்றாம்.

இங்ஙனம் ஒருவாற்றானும் எய்தாத் பொருளைப் பாழ் என்றால் என்னை எனின், அது பொருந்தாது, மேலே கூறிய பாவனையெல்லாம் விடுத்து, சிவபெருமான் திருவருளாலே பாவிக்கப் படுவதாகும். இவ்வுண்மையை

**மநசை வேதமாப் தவ்யம் ।**

(மனசு புத்தி என்பன அருட்சத்திக்குப் பெயராகும்) ''இந்தப் பிரமம் அருளினால் அடையற்பாற்று'' என்று கடவல்லியும்,

**மநசை வாநுதிரஷ் டவ்யம் ।**

"பிரமம் அருளினுலே காணற்பாலது" என்று பிருக தாரணியமும்,

**சநோ புத்யா சுபயா சம்யுநக்து ।**

"அவர் நம்மை அருளினுலே (தம்மோடு) கூட்டுவாராக" என்று சுவேதாசுவதரமும், "அவனருளே கண்ணுகக் காணினல்லால்" "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்று திராவிட சுருதிகளும் கூறியவாறு பற்றி உணர்ந்து கொள்க. இதனுல் வாக்குமனுதீதப் பொருள் யோக நூலிலே கூறப்படும் தியான பாவனைகளுக்கு எய்தும் என்று கூறும் பாதஞ்சலிமதம் மறுக்கப்பட்டது. சிவனை அருளினுற் பாவிக்க வேண்டாம், ஆன்மா பசுத்துவத்தை நீங்கிச் சிவனைப் போல முற்றுணர்தலாகிய எண்குணங்களுமடைதலின், அந்த ஆன்ம ஞானம் சிவஞானத்தோடொப்பதாம் ஆதலின், அந்த அறிவிற்கு எய்துவர் சிவபிரான் என்பர் சிலர். அது கூடாது.

(வெ. பொ.) ஆன்மாவானது தனது அறிவால் அச்சிவப் பொருளை அறிதற்கு, அப்பொருள் அவ்வான்மாவுக்கு வேறன்றும். ஆன்மாவும் சிவமும் சமமாதலின்றி ஆன்மா தூல சித்தும், சிவப் பொருள் சூக்கும சித்துமாயிருத்தலின், சூக்கும சித்துள்ளே தூல சித்து அடங்கி நிற்றலின், ஆன்மாவின் அறிவினுல் அப்பொருள் அறியப்பட மாட்டாது. ஆன்ம ஞானத்துக்கு வியஞ்சகமாய் நின்று அறிவிக்கும் உயிர்க்குயிராகிய சிவத்தைப் பசுத்துவம் நீங்கிய விடத்து ஆன்மாவின் சிற்சத்தியானது தான் கண்டறிந்து தன் குணியாகிய ஆன்மாவுக்குக் காட்டமாட்டாது, கண்ணொளியானது தனக்குக் காட்டிக் கொண்டிருக்கும் ஆன்மாவை அறிய மாட்டாதவாறு போலாம்.

ஆன்ம ஞானம் ஆன்ம சிற்சத்தி என்பவற்றில் ஆன்மா என்றது கண்ணையும், ஞானம் சிற்சத்தி என்பன கண்ணின் ஒளியையும் ஒப்பனவாம். ஆன்மா பசுத்துவம் நீங்கிய விடத்துச் சிவனைப் போல முற்றுணர்வு முதலிய எண் குணங்களையுடையதென்று வேதாகமங்கள் கூறுதலின், ஆன்ம ஞானம் சிவஞானத்தோடொப்பதன்றிப் பசு ஞானம் எனப்படாதென்னும் சிவசமவாதி மதம் மறுக்கப்பட்டது. சிவன்றிருவருளாலே சிவபரம் பொருள் அறியப்படும் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) சத்தாகிய சிவம் ஞேயப் பொருளாய் விசிட்டமாய் நிற்பதன்றே, அது அநிர்வசனமாய்க் கூறப்படுவதொரு சூனியப் பொருளன்று, ஆதலின் அந்த ஞேய மாத்திரையே யன்றி அதற்கு வேருக வாக்கு மனுதீதமாய் நிற்பது ஒரு பொருளென்று அறிகின்ற

ஞாதாவாகிய ஆன்மா ஆண்டுளதாம். ஆன்மா ஆங்கு இல்லை எனல் கூடாது. உலகத்துப் பொருள் போல் அதுவென்று சுட்டி அறியப் படுமாறு சிவப்பொருள் ஆன்மாவுக்கு வேறன்றும். நீரினை அணைந்த உப்புப் போல ஆன்மாவின் கண்ணே பரவி வேற்றுமை தோற்றுது நிற்குமாதலான், பாச பசு ஞான அறிவு கடந்து அருண் ஞானத்தினுற் சிவப்பொருளை அறிகின்ற அந்த ஆன்மா சிவமேயாம். இதனுல் சிவ பரம் பொருளைத் தலைப்பட்ட ஆன்மா அச்சிவத்தோடு ஒன்றாய்ப்போம் என்னும் சுத்த சைவர் கொள்கை மறுக்கப்பட்டவாறும் என்க.

இச்சூத்திரத்து இரண்டாங் கூற்றின் கீழே மாயாவாதியும், நையாயிகரும், பாதஞ்சலரும், சிவசமவாதியும், சுத்த சைவரும் மறுக்கப்படு முகத்தாற் சுத்தாவத்தை ஐந்தும் கூறப்பட்டனவாம் என்பது. பாச இலக்கணம் கூறுங்கால், நான்காம் சூத்திரத்து மூன்றும் கூற்றின் கீழே கேவலாவத்தை கூறப்பட்டது.

பசுவிலக்கணம் கூறுங்கால், ஐந்தாம் சூத்திரத்து முதல் கூற்றின் கீழ்ச் சகலாவத்தை கூறப்பட்டது. பதியிலக்கணம் கூறுங்கால் ஆறும் சூத்திரத்து இரண்டாம் கூற்றின் கீழ்ச் சுத்தாவத்தை கூறப்பட்டது. கேவலமானது மருட்கேவலம், சகல கேவலம், பிரளயகேவலம், விஞ்ஞான கேவலம், அருட் கேவலம் என ஐவகைப்படும். மருட்கேவலமானது அநாதி கேவலம், அஃதாவது கேவலாவத்தைத் துரியாதீதத்தில் ஆன்மாவானது இருண் மலத்தோடு கூடி நிற்றலாம். சகல கேவலமாவது சங்கரித்த பின்னர் மீளப் பிறத்தற் கேதுவாகப்படும் கேவலம், ஆங்குச் சூக்கும பஞ்ச கிருத்தியம் உளது; அவ்வுண்மை,

**ஸ்வா பேப்யாஸ்தே போதயந் போத யோக்யாந் |**
**ரோத்யாந் ருத்தந் பாசயந் கர்மி கர்ம |**
**மாயாசக்தீர் வியக்திம் யோக்யா |**
**பிரகுர்வந் பச்யந் சர்வம் யத்யதாவஸ்துஜாதம் |**

''சாக்கிராவத்தையிற் போல் (மாயையில்) ஆன்மா ஒடுங்கிக் கிடக்குமிடத்தும், மலபரிபாக தாரதம்மியத்திற்கு இயைந்தவாறு, சிவபெருமான் ஆன்மாவுக்கு உணர்த்தற்பாலனவற்றை உணர்த் தியும், தடுக்கற்பாலனவற்றைத் தடுத்தும், கன்மங்களைப் பக்குவப் படுத்தியும், மாயா சத்திகளைப் பிரசவோன்முகங்களாகச் செய்தும் எல்லாச் சேதனுசேதனப் பொருளையும் பார்த்தபடி பார்த்துக் கொண்டுமிருக்கின்றுர்'' என்று மிருகேந்திராகமம் கூறுமாற்றுல் உணரப்படும்.

பிரளய கேவலமாவது மாயையோடு இயைபின்றி ஆண்டுள தாகிய கேவலம். விஞ்ஞான கேவலமாவது மாயை கன்மம் என்னும்

இரண்டின்றேடும் இயைபின்றி ஆண்டுளதாம் கேவலம். அருட் கேவல மாவது தத்துவ சுத்தியின் பின்னுளதாம் கேவலம். சகலமும் சகலத்திற் கேவலம், சகலத்திற் சகலம், சகலத்திற் சுத்தம் என மூவகைப்பட்டு, ஒவ்வொன்று ஐந்து ஐந்து வகைப்படும். சகலத்திற் கேவலம் ஐந்தும் நாலாஞ் சூத்திரத்துக் கூறப்பட்டுள்ளன. சகலத்திற் சகலம் ஐந்தும் ஆண்டே கூறப்பட்டன. சகலத்திற் சுத்தம் இருதய முதல் துவாதசாந்த மீறுகிய தானங்களிற் புறக்கரண உட்கரணங் களைப் பற்றியும், பற்றுமலும் பிரத்தியாகார முதல் ஐவகைப் பட்டு நிகழும் யோகாவத்தையாய் ஒடுங்கியும் தோற்றியும் பயன்தரும் என்க.

சுத்தாவத்தையும் சீவன் முத்தி, அதிகார முத்தி, போகமுத்தி, இலய முத்தி, பர முத்தி என ஐவகைப் பட்டு சாக்கிரம், சொப்பனம், சுழுப்தி, துரியம், துரியாதீதம் எனப் பெயர் பெறும்.

### ஆறும் சூத்திரத் தொகைப் பொருள்

சிவபெருமான் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாத சிவமாயும், பதிஞானமொன்றினுல் அறியப்படும் சத்தாயுமுள்ளார் என்றும், அறிவினுல் அறியப்பட்ட சுட்டுப் பொருளெல்லாம் அசத்து என்றும், மகாசங்கார காலத்திற் சத்தில்லை என்றுற் சத்தாகிய பசுவுக்குரிய தனுகரணுதி தூலகாரிய ரூபமில்லை எனவும், அசத்தில்லை என்றவிடத்திலும் தூலகாரிய ரூபமில்லை எனவும் பொருள் படுமே யன்றி, அந்தச் சத்து (பசுவாகிய ஆன்மா) அசத்துக்களின் சூக்கும சொரூப சத்து இல்லை எனப் பொருள் படுத்தப் படாது என்றும், பதியின் தடத்த இலக்கணம் இரண்டாம் சூத்திரத்தும், அவரது சொரூப இலக்கணம் இந்த 6-ம் சூத்திரத்தும் கூறப்பட்டன என்றும், பசு பாசங்கள் பொதுவியல்பு பற்றி அசத்தெனப்படுமேனும், சிறப்பு இயல்பு பற்றி அவை சத்தேயாம் என்றும், மாயாவாதி, நையாயிகர், பாதஞ்சலர், சிவசமவாதி, சுத்த சைவர் என்போரை மறுக்குமுகத் தாற் சுத்தாவத்தை ஐந்தும் முறையே கூறப்பட்டன.

### *உண்மை அதிகாரம்*

### *சாதனவியல்*

### ஏழாம் சூத்திரம்

### (ஆன்மாவின் தன்னியல்பு)

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலின்**
**சத்தே யறியாது, அசத்தில தறியா (து)**
**இருதிற னறிவுள திரண்டலா வான்மா.**

(இ.ள்.) சத்து எதிர் யாவையும் சூனியம் ஆகலின் = சத்தாகிய சிவத்தின் முன்பு எல்லாம் பாழாமாதலின், சத்து அறியாது = சத்தாகிய சிவம் (பிரபஞ்சத்தை) அறிதல் செய்யாது; அசத்து இலது அறியாது = அசத்தாகிய உலகு அறிவு இல்லாத சடமாதலின் அது சத்தாகிய சிவத்தை அறியாது; இருதிறன் அறிவுளது = (சத்து அசத்து என்னும்) இரு திறத்தையும் (பிரித்தறியும்) அறிவுடையதாகிய ஒன்று உளது; இரண்டு அலா ஆன்மா = (அது) சத்து அசத்து என்னும்] இரண்டு தன்மையும் இல்லாத (சத்த சத்தாகிய) ஆன்மாவாம்.

(க.ரை) **இச்சூத்திரம் ஆன்மாவின் சிறப்பியல்பு உணர்த்துகின்றது.**

(சூ.பொ.) ஒன்றனை அறிந்தவிடத்து அதனால் எய்தும் பயனை அடைதற்குரிய முயற்சி செய்வோர்க்கு அதனைச் சாதிக்கும் வன்மை தமக்கு உண்டென்பதும், சாதித்தலால் வரும் பயன் இன்னது என்பதும், அதனைப் பிறப்பித்தற்கு வாய்ந்த சாதனம் இன்னது என்பதும், உணர்ந்தாலன்றி அதன்கண் ஊக்கம் செல்லாமையால், ஈண்டுச் சாதனஞ்செய்து அடைதற்குரிய அதிகாரியை இன்னார் என உணர்த்துவது இச்சூத்திரமாம்.

சிறப்பியல்பாவது, பொதுவியல்பு போல இடையே நீங்குதலின்றி, எக்காலத்தும் ஒரு தன்மைத்தாயுள்ளதாதல் பற்றி உண்மை எனப்படுதலின், இப்பெரும் பிரிவு உண்மை அதிகாரம் எனப் பெயருடைத்தாயிற்று.

ஏழாம், எட்டாம், ஒன்பதாஞ் சூத்திரங்கள் மேலே பொது வியல்பினுற் பெறப்பட்ட பதி பாச பசு பதார்த்தங்களுள் நீக்க வேண்டியதை நீக்கி, அதனால் வரும் துன்பத்தினின்று நீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனால் எய்தும் இன்பத்தை அடைதலுமாகிய பயனை அடைதற்கு ஏதுவாகிய சாதனஞ் செய்யுமியல்பை உணர்த்துதலின் இப்பிரிவு சாதனவியல் எனப் பெயருடைத்தாயிற்று.

(சூ. பி. பொ ) ஆறுஞ்சூத்திரத்துட் கூறப்பட்ட சத்து அசத்து என்னும் இரண்டினுள்ளே, வாக்குமனோதீதமாகிய சிவசத்தின் சந்நிதியிலே உணரப்படும் தன்மையவாகிய அசத்தெல்லாம் விளங்க மாட்டாவாம்; சூனியம் போல்வனவே ஆம். ஆதலால், சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அநுபவியாது; இனி அசத்தாகிய பாசம் அறிவில்லாத சடமாதலின், சத்தாகிய சிவத்தை அறிந்து அநுபவியாது. ஆதலாற் பாரிசேடப் பிரமாணத்தினுற்

யிரபஞ்சத்தையும் சிவத்தையும் அறியும் அறிவொன்று உளதென்பது பெறப்படுதலின், அதுவே சத்தாகிய சிவமாந்தன்மையும், அசத்தாகிய பிரபஞ்சமாந்தன்மையுமாகிய இரண்டுமின்றிச் சதசத்தாயுள்ள ஆன்மாவாம் என்பது.

## முதற் கூறு

**அரன் பாசத்தை அநுபவியான்.**

(சூ. பொ.) சத்தாகிய சிவம் வியாபக அறிவுடையதாதலால் எவற்றையும் ஒருங்கே அறிந்து நிற்பதன்றி, ஏகதேசமாய்ப் பகுத்து ஒன்றை அறியுமாறின்றாமாதலின், சிவம் அசத்தை (பாசத்தை) அநுபவியாது என்றதாம். சுட்டுணர்வின்மையாற் சிவபிரான் அசத்தை அறியாதிருத்தல் பற்றி அவரது முற்றுணர்வுக்கு இழுக்கில்லை என்று கூறப்படுகின்றது :-

(வெ. பொ.) சூரியனுக்கு முன் இருள் போல, சிவபிரானுக்கு எதிராகச் சடமாகிய உலகம் முனைத்து நில்லாமையால் அச்சிவ பெருமான் தம்முள் வியாப்பியமாகிய பசு பாசங்களோடு வேற்றுமையின்றி உடனாய் நிற்றலின் அசத்தை அறிதலுறுவாராயின், அறிந்தாங்கறிவரன்றி நம்மனோர் போல வேறாக அதனைச் சுட்டி அறிவாரல்லர்.

## இரண்டாம் கூறு

**பாசம் அரனை அநுபவியாது.**

(சூ.பொ.) பதிஞான பசுஞானங்களோடு ஒப்பப் பாச ஞானமொன்றென வைத்து எண்ணப்படும் உரிமையுடைமையால், அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்துக்கு அறிவு உண்டென்று கூறின், அந்த அறிவானது தூலமாய்ப் பார்க்குங்கால் அத்தத்துவப் பிரபஞ்சத்துக்கு உளது போலத் தோன்றினும், சந்தேக விபரீதமின்றி மாசறு காட்சியினால் ஆராயுங்கால், அந்த அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்துக்கு அறிவின்று என்பது தெளியப்படும். ஆதலால் தத்துவம் சிவத்தை அறியுமாறின்றாம்.

பாசம் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஞானமே பாச ஞானம் என உபசாரமாகக் கூறப்படும். பாசத்துக்கு ஞானமுளதென்று கூறுதல் ஆராய்தலின்மையால் எழுந்த அறியாமையேயன்றிப் பிறிதன்றாம்.

(வெ. பொ.) பாலை நிலத்தின் கண்ணே காணப்படுகின்ற கானற் சலத்தை நீரென்று நினைத்து அதனைப் பருக வருகின்ற தாக

முடையவன் அதனை நணுகியபோது, அந்த கானற் சலம் நீராதலின்றிப் பொய்யாய்ப் போனமை போல, ஆசாரியர் உபதேசிக்கும் உபதேச மொழியைப் பெற்று, அந்த அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்தினியல்பை ஆராய்ந்தறிய மாட்டாதார்க்கு, அவ்வசத்தின் கண்ணே அறிவுள்ளதாகச் சத்தாந் தன்மையே காணப்படும். அவ்வுபதேச மொழியைப் பெற்று ஆராய்ந்தறிய வல்லார்க்கு அசத்துக்கு அறிவில்லை எனவே புலப்படும்

## மூன்றாம் கூறு

**உயிர் அவ்வரனை அடையும், அநுபவிக்கும்.**

(சூ. பொ.) மேலே கூறிப் போந்த சத்தாகிய சிவம், அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சம் என்னும் இந்த இரண்டையும், அறியுந் தன்மையதாய் அறிவிக்க அறியும் உபதேசியாய், சத்து அசத்து என்னும் இரண்டினும் அநுபவ அறிவாயுள்ளது எதுவோ, அதுதான் சத்தும் அசத்துமல்லாத சதசத்தாகிய ஆன்மாவேயாம் என்பதாம்.

இருளின் முன்னர் மறைபட்டும் இருளல்லாமலும் ஒளியிற் பொருந்தி அறிந்தும் ஒளியல்லாமலும் இருக்கும் கண்ணின் இயற்கை போல சத்தையும் அசத்தையும் அறியுந்தன்மைத்தாயது ஆன்மா; இதனை உதாரணங் கொண்டு விளக்குதும் :-

(வெ.பொ) ஆன்மாவே சத்து அசத்து என்னும் இரண்டையும் அறிவதாகும்; ஆகலின் அவ்வான்மா அவ்விரண்டின் வேறாம்; அங்ஙனமாயின், அவ்விரண்டையும் அறியும் ஆன்மாவுக்குத் தன் உண்மை அறியப்படுமாயின், அதனைச் சேர்த்து மூன்றனையும் அறியும் என்று கூறவேண்டுமன்றி இரண்டினையும் அறியும் எனல் பொருந்தாது. ஆன்மாவுக்குத் தன்னுண்மை அறியப்படாதெனின், அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழுவாயன்றோ முடியும்; ஆதலால், அவ்வான்மாவின் உண்மைத் தன்மையாதெனின், அது அவ்விரண்டும் போலத் தோன்றி, அவற்றோடு ஒப்ப நிற்பதுமன்று; விளங்காது சூனியமாய் நிற்பதுமன்று; பின் மலரின்கண் மணம் அம்மலரின் கண்ணே அடங்கித் தோன்றுமாறு போல, ஆன்மாவானது சத்தினும் அசத்தினும் சார்ந்ததன் வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோரியல்பாம். ஆதலால் சத்தும் அசத்தும் போலத் தனித்து அறியப்படுமாறின்றி அவ்விரண்டையும் அறிதல் வாயிலாக அறியுற்பாலதொன்றாம்.

ஆன்மாவுக்குச் சிவத்தைப் போல அறிவுளதோ எனின், ஆகாயத்தின் தன்மையாகிய ஓசை போல ஆன்மாவின் அறிவானது தன்னை விளக்குவதாகிய வியஞ்சகம் உள்வழி விளங்குவதோர்

தன்மைத்து; ஆதலால் அவ்வான்மாவுக்குச் சிவத்தோடொப்பச் சுதந்திர அறிவில்லையாதலின், அது அறிவிக்க அறியும் உபதேசியாம் என்று கூறப்படுகின்றது. உபதேசி—உணர்த்த உணர்வது.

(வெ. பொ.) ஆன்மாவின் அறிவை விளக்குதற்குரிய கலாதி தத்துவமாகிய வியஞ்சகமில்லாத போது அவ்வான்மா ஒரு பொருளை இன்னதென்று அறியமாட்டாது மயக்கமடைந்தும், பசி நோய்க்கு அன்னம் போல அம்மயக்க நோய்க்கு மருந்தாகிய வியஞ்சகமுள்ள போது அம்மயக்கம் நீங்கி அப்பொருளை இன்னதென நிச்சயித்தும் இங்ஙனம், அறியும் போதும் ஒருங்கே அறியமாட்டாது ஒரு பொருளிற் சென்ற அறிவை மாற்றி மற்றொரு பொருளை அறிந்தும் அறிந்ததை மறந்தும், விட்டுவிட்டு அறிந்து வருகின்றமையால், இவ்வாறு மாறி மாறி ஒன்றொன்றாய் உணர்கின்ற ஆன்மா அனைத்தையும் ஒருங்கே ஓரியல்பாக உணர்வதாகிய சத்தின் தன்மை உடையதுமன்று.

அங்ஙனமாயின் வியஞ்சகம் உள்வழியன்றி அறியமாட்டாத ஆன்மா அசத்தினியல்பையுடைய தாமோ எனின், வியஞ்சகமுள்ள விடத்தும் ஆன்மா தான் முன் அறிந்து செய்த கன்மங்களை அவ்வான்மாவே அறிந்து அநுபவிக்கின்றதேயன்றி, அசத்தாகிய பிரபஞ்சம் அறிந்து அநுபவித்தலின்றாம், ஆதலால் ஆன்மாவுக்கு அசத்தின் தன்மையுமில்லை. சத்த குணமுடைய ஆகாயம் போலக் கலாதி தத்துவ வியஞ்சகமுள்ள போது அறியுமொப்புமையாற் சித்தாதலும், அக்கலாதி தத்துவ வியஞ்சகமில்லாத போது அறிவு நிகழாத வொப்புமையால் அசித்தாதலுமாகிய தன்மையுடையது அவ்விரண்டுக்கும் வேறாகிய சிதசித்தாகிய ஆன்மாவாம்.

படிகம் போலச் சார்ந்ததின் வண்ணமாய் அழுந்தும் தன்மையதாதலின், அது சத்து அசத்து என்னும் இரண்டன் பாலும் உள்ளதாம் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) மேலே கூறப்பட்ட மயக்கமாகிய அஞ்ஞானம் கலாதி தத்துவ வியஞ்சகமில்லாத போது மேற்பட்டும், அவ்வியஞ்சகமுள்ள போது நீங்கியும் இவ்வாறு நிலைபேறுடையதன்றாகலின், அந்த அறியாமை எப்பொழுதும் ஒரே இயல்பினதாய் நிலையுற்று விளங்கும் ஞானமாகிய சிவசத்தின்கண்ணே சூரியன் முன் இருள் போல நிகழாதாம், மெய்ஞ்ஞானமாகிய சிவசத்துள்ள அநாதியே தானே, கடல் (வெளியாகிய) ஆகாயத்தின் கண்ணே பொருந்தாது. அக்கடலில் (ஆகாயத்துள்ளே) உள்ள நீரினிடத்தே பொருந்துகின்ற உப்புப் போல, அஞ்ஞானமாகிய ஆணவ மயக்கம் தான் பொருந்துதற் குரிமையுடைய சதசத்தாமியல்பினவாய் ஆன்மாக்கள் உள்ளனவாக,

அந்த ஆன்மாக்களைப் பொருந்தி நிற்கும், அது சிவசத்தைப் பற்றாது என்பது பெற்றாம். உப்பு நீரில் சமவியாபகமாய் நிற்ப, நீர் கடலாகா யத்துள் வியாப்பியமாய் அடங்கி நின்றாற் போல ஆணவமாகிய அஞ்ஞான மயக்கம் சமவியாபகமாய் ஆன்மாவைப் பற்ற, ஆன்மா சிவத்துள் வியாப்பியமாய் அடங்கி நிற்கும் என்க. ஆகவே பாச, பசு, பதி என்பன வியாப்பிய வியாபகங்களாய் நின்றவாறு தெளியப் படும். மாயேயமும் கன்மமும் ஆன்மாவில் வியாப்பியம்.

ஆன்மாவுக்குச் சிவம் அஞ்ஞானம் என்னும் இரண்டினிடத்தும் இயைபு கூறவே; சத்தின்பாலும் அசத்தின்பாலும் ஆன்மா உளதாதல் கூறியவாறாயிற்று. தத்துவங்களைச் சடமென்று திடமாய் அறிந்து ஆன்மா நீங்கி, அறிவாகிய தானே முதலென்று நிற்றல் ஆன்மரூபம்.

சத்து அசத்து என்னும் இரண்டையும் அறியும் அறிவு உளது. எனவே, சத்தும் அசத்தும் பிரமேயம்; அவ்விரண்டையும் அறியும் சத் சத்தாகிய ஆன்மா பிரமாதா; ஆன்மாவின் அறிவாகிய சிற்சத்தியே பிரமாணம்; அவ்வறிவின் நிகழ்ச்சி பிரமிதி என்றுணர்க. சத்து அசத்து என்னும் இரண்டினாலும் விளங்கும் அறிவுளதெனவே அவ்விரண்டானுள்ளே அசத்தினால் விளங்கும் போது, ஆன்மாவுக்கு வேறாய் நின்று விளக்கும் காட்சி அனுமானம் உரை எனப்படும் பாச ஞான மூன்றும் அவ்வான்மாவுக்கு வியஞ்சகங்களாம். சத்தினால் ஆன்மாவுக்கு அறிவு விளங்கும் போது அன்னியமின்றித் தனக்கு ஆதாரமாய் உடனின்று விளக்கும் சிவஞானம் வியஞ்சகமாம்.

ஆன்மாவுக்கு இரு திறனிலும் அறிவுளதெனவே, அந்த அசத்தினால் விளங்கி அசத்தை அறியும் போது அசத்தின் பாலும், சத்தினால் விளங்கிச் சத்தை அறியுங்காற் சத்தின் பாலும் சார்ந்து அது அதுவாய் நின்றுளதென்பது பெறப்படும்.

(வியாபகம் — அடக்கும் நிறைவு; வியாப்பியம் — அடங்கு நிறைவு, வியாத்தி — வியாபக வியாப்பியங்களுக்குள்ள விட்டு நீங்காமை.)

## ஏழாம் சூத்திரத் தொகைப் பொருள்

முத்திக்குரிய சாதகஞ் செய்யும் அதிகாரி ஆன்மா என்றும், இந்த ஆன்மா சதசத்தாம் இயல்புடையதென்றும், எல்லாவற்றையும் அறிந்தபடி அறிந்து நிற்கும் சிவபிரான் ஏகதேசமாகிய ஒன்றைச் சுட்டி அறியாரென்றும், பாசம் வாயிலாக ஆன்மாவின்கண் நிகழும் ஞானம் பாச ஞானமெனப்படுமென்றும், ஆன்மாவானது சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய தத்துவப் பிரபஞ்சத்தையும் அறியுமியல்

வடிவும், ஈசுரதத்துவமும் சாதாக்கிய தத்துவமும் அறுபத்து நான்கு கேசர வடிவும், சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டு வடிவும், சிவதத்துவம் அப்பொகுட்டின் மீதுள்ள ஐம்பத்தொரு விதை வடிவும் ஆம். அம்முப்பத்தாறு தத்துவக் கமலாசனத்தின் மேல் நிற்கும் சிவபெருமான் திருவடி பஞ்சாக்கரத் தினற் பூசிக்கற்பாற்றும்.

''இருதய நாப்பண் அஞ்செழுத் துருவின் இறைவனை உயிர்க் கொலை செயாமை, அருள் பொறி யடக்கல் பொறை தவம் வாய்மை அன்பறி வென்னும் எண் மலர் கொண் (டு), ஒருமையொ டருச்சித் திடுகவென்றடியார்க்(கு) ஒள்ளிய தீக்கை செய் துணர்த்தத், திரு அமர் துறைசை உரையருட் குருவாந் திருநமச் சிவாயர் தாள் போற்றி'' எனவும்,

மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின் மாயையாங் கிழங்கிலங்குரித்த
மன்னும்மூ வெட்டாந் தத்துவ நாளம்; மலரிதழ் வித்தையேழ்வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டும் நண்ணுகே சரங்களாம் சத்தி
நற்பொகுட் டாகு நாதமே வித்து நயந்தகண் ணுமென விரவி
இலகுமென் னுடலப் பதுமபீ டிகைநீ யிருந்தரு ளாசன மெனுமல்
எனதுபுக் கில்தா யெண்ணினேன் றெளிய வியலருட் பார்வை தந்தனையே
அலகிலா உயிர்கள்-மல நடைக் கிலையாய் அருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைசை யம்பல வாண அடியவர்க் கருளுமா நிதியே''

எனவும் போந்த திருவாக்குகள் பற்றியும் உணர்ந்து கோடற்பாற்று.

முப்பத்தாறு தத்துவங்களால் அமைந்த கமலாசனத்தின் மீது,

ய ஆத்மநி திஷ்டந் |
யஸ்ம ஆத்மா சரீரம் |

''எவர் ஆன்மாவில் உளரோ'' எனவும் ''எவருக்கு ஆன்மா சரீரம்'' எனவும் மத்தியந்தின சாகை கூறுகின்றமையானும்,

ததாலயஸ்தமாத்மாநம் சிவரூபம் விசிந்தயேத் |

''தேகமாகிய சிவாலயத்தின் கண்ணே ஆன்மாவைச் சிவலிங்க வடிவாகக் கொண்டு'' என்று வாதுளாகமம் கூறுமாற்றாலும், ஆன்மாவே சிவலிங்கம் என்றும், அதற்கு உயிராய் உள்ளது சிவன்

திருவடியாம் என்றும் கொள்க. இதுபற்றியே, மனவாசகங்கடந்தார் ''எட்டுமிரண்டு முருவான லிங்கத்தே நட்டம் புதல்வா நவிலக்கேள்'' என்றும், திருமூலநாயனார் ''தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்'' என்றும் அருளிச் செய்தார்கள்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டினையும் திருமேனியாகக் கொண்ட சிவபெருமானுக்கு, ஆன்மா அந்த எட்டனுள்ளே ஓர் திருமேனியாய் முடிதலினால், சிவபெருமான் பசுபதி எனவும், ஆன்மா பசு எனவும் கொள்ளப்படும் என்றும், சிவன் தாளாகிய சத்தே ஆன்மாவுக்கு உயிராம் என்றும், தாள் என்றது சிவசத்தியின் மேற்றும் என்றும், இதுபற்றியே இருக்கு வேதம்

**அந்தரிச்சந்தி தம் ஊநே ருத்ரம் |**
**ப்ரோம நீ ஷ்யா கிருப்ணந்தி ஜிஹ்வயா சசம் |**

''சனங்களிடத்து அந்தரியாமியாய் நிற்கும் பரனாகிய அந்தச் சிவபெருமானைச் சத்தியோடு கூட அகத்திற் பற்றுகின்றவர்களே அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்கள்'' என அகப் பூசையை விசேடித்துக் கூறியதாம் என்றும் ஓர்க.

சிவாகமத்திலே விதிக்கப்பட்டவாறு புலரிக்காலத்திலே புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை என்னும் எட்டு மலர்களைக் கொண்டும் மற்றைக் காலங்களில் அச்சிவாகமத்தில் விதிக்கப்பட்டவாறு வெவ்வேறு எண் மலர்கள் கொண்டும் புறத்தே பூசிக்கப்படுவதால், தேவாரத்தில் ''எட்டு நாண் மலர் கொண்டவன்'' எனப்படும் சிவபெருமானை அகத்தே ஆன்ம லிங்கத்திலே தமது அறிவைக் கொல்லாமை, ஐம் பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எண் மலர்களாக்கி எப்போதும் பூசை செய்துவரின், கிரகணம் நீங்கும் காலத்திற் சூரியன் புலப்படுமாறு போலவும், கண்ணாடியை விளக்குந்தோறும் அதன் ஒளி மேற்படுதல் போலவும், பாசி படர்ந்த நீரின் கண்ணே கல்லு விட்டெறிந்த போது, பாசி நீங்க நீர் தோன்றுமாறு போலவும், சிவபெருமான் ஆன்மாவின் கண்ணே வெளிப்பட்டு இன்பம் அளித்திடுவார்.

**அகிம்சா பிரதமம் புஷ்பம் துவிதீய மிந்திரிய நிக்ரஹம் |**
**திருதீயந்து தயாபுஷ்பம் க்ஷமாபுஷ்பம் சதுர்த்தகம் |**
**ஞான புஷ்பம் தப: புஷ்பம் பக்திபுஷ்பந்து சப்தமம் |**
**சத்யமே வாஷ்டமம் புஷ்ப மேபிஸ் துஷ்யதி சங்கர :|**

இதனால் அகிம்சை என்றது கொல்லாமையையும், இந்திரிய நிக்கிரகம் ஐம்பொறியடக்கலையும், தயை அருளையும், க்ஷமைபொறை

யையும், ஞானம் அறிவையும், தபம் தவத்தையும், பக்தி அன்பையும், சத்தியம் வாய்மையையும் உணர்த்தும் என்க. இவ்வுண்மையை நோக்கியே,

ஸ்வதேஹாய தநஸ்யாந்தர் மநசாஸ்தாப்ய சங்கரம் |
ஹ்ருத் பத்மபீட மத்யேது தியாநயஞ்ஞேந பூஜயேத் |
தியாநயஞ்ஞ: பர: சுத்த: சர்வதோஷ விவர்ஜித:
தேநேஷ்ட்யா முக்திமாப்நோதி பாஹ்யை சுத்தைச்ச நாத்வரை:|
ஹிம்சாதி தோஷமுக்தத்வாத் விசுத்த: சித்தசாதந:|
தியாநயஞ்ஞ: பரஸ்தஸ்மாதபவர்க்க பல ப்ரத:|

"தன்னது தேகமாகிய ஆலயத்தின் கண்ணே சிவபெருமானை மானசமாகத் தாபனஞ் செய்து, இதய கமலத்தின் கண்ணே, கந்தம், மலர், தூபம், தீபம், திருமஞ்சனம் முதலியவற்றை மனத்தினால் கருதிக் கொண்டு, தியான யாகம் வாயிலாகப் பூசிக்க, தியான யாக மாவது மேலானதும், தூயதும், குற்றம் நீங்கியதுமாயுள்ளது. அந்த அந்தரியாக தியான யோகத்தினால் முத்தியை அடைகின்றான். புறத் துள்ள தூய யாகங்களினால் முத்தி எய்தாது, கொலை முதலிய குற்றங்கள் நீங்கி இருத்தலால், அந்தரியாகம் மிகு தூயதும் சித்த சாதனமாயும் உள்ளது. தியான யாகமானது மிக மேலானதாதலால், அது முத்தியைப் பாலிப்பதாயுள்ளது" என்று சிவதருமோத்தராகமம் கூறிற்று, இவ்வுண்மையை வருத்தமற உய்யும் வழி என்னும் நூலும்

"அல்லாக்கிக்கில்லை அருவருப்பு மில்லை
கொலையுமில்லை உட்பூசை கூடு"—என்று கூறிற்று.

அறுபத்து மூன்று நாயன்மாருள்ளே அகவழிபாடு இயற்றி வந்தவர் திரு மயிலாப்பூர் வாயிலார் நாயனார், அவ்வுண்மை,

"மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
உறவாதி தனையுணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி
இறவாத வானந்தம் எனுந்திருமஞ் சனமாட்டி
அறவாணர்க் கன்பென்னும் அமுதமைத்தர்ச்
சனைசெய்வார்"

என்னும் திருச் செய்யுளால் அறியப்படுகின்றது.

## ஒன்பதாம் சூத்திரத் தொகைப் பொருள்

ஆன்மா இறைபணி நிற்றலும், அவ்வான்மா தான் பணி நீத்தலுமாகிய இரண்டும் கருத்தினுள் வேறுபடா என்றும், இவ்விறை பணி நிற்றலால் ஐம்புல வேடருள்ளே வளர்ந்த இழிவு நீங்குதலாகிய ஆன்ம சுத்தி எய்தும் என்றும், சிவ தரிசனத்தில் நிகழ்வது ஆன்ம சுத்தியாம் என்றும், பசு ஞானத்தினாலும், பாச ஞானத்தினாலும்

அறியப்படாத சிவபெருமானை அவரது அருண் ஞானக் கண்ணினுல் ஆன்மாவில் ஆராய்தல் வேண்டும் என்றும், புறப்பொருளைக் காணு மியல்பினதாகிய கண்ணுனது தன்னியல்பை அறிய மாட்டாதவாறு போல, தத்துவ தாத்துவிகங்களை அறிகின்ற ஆன்மாவானது தன்னை யும் அறிய மாட்டாது தன்னைச் செலுத்தும் சிவபெருமானையும் அறிய மாட்டாது என்றும், சிவபிரான் ஆன்மாவின் கண்ணே அறியற் பாலராம் என்றும், அசத்தாகிய பிருதிவி முதலிய தத்துவங்கள் நிலையில்லாதன என்று விவேகித்து அறியின் சிவஞான சொரூபம் வெளிப்படும் என்றும், அச் சிவஞானத்திணுல் ஆசாரியர் மாணுக் கனுக்குச் சித்தாந்த மகாவாக்கியத்தை உபதேசிப்ப, அவன் சோகம் பாவனையை நாடோறும் பயின்று வந்தால் மாயா கன்மங்களை விட்டு நீங்குவான் என்றும், ஐம்புலனுக்கு வேருக ஆன்மா தன்னைக் காண்டலும் பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலுமாகிய இரண்டும் சிவப்பேற்றிற்குச் சாதகங்களாம் என்றும், அச்சாதகங் களாற் சிவஞானம் விளங்கி ஞேயமாகிய சிவம் காட்சிப்பட்ட விடத்தும், முன்னர்த் தான் பற்றிய ஏகதேசக் காட்சியாகிய வாசனை நீங்குதற்கு பஞ்சாக்கரத்தை விதிப்படி கணித்தல் வேண்டும் என்றும், தனது உடலின் கண்ணே இதயத்தையும், நாபியையும், புருவ நடுவை யும் முறையே பூசைத் தானம், ஓமத் தானம், தியானத் தானமாய்க் கொண்டு, முப்பத்தாறு தத்துவங்களால் அமைந்த இதய கமலத்தின் கண்ணே அமர்ந்த பஞ்சாக்கரத் திரு மேனியில் கொல்லாமை முதலிய எண்மலர் கொண்டு பூசித்தல் வேண்டும் என்றும், அங்ஙனம் பூசிக்குங்காற் சிவபெருமான் அறிவுக்கு அறிவாய் விளங்கி நிற்பர் என்றும் கூறப்பட்டதாம் என்க.

## பயனியல்

## பத்தாம் சூத்திரம்

**அவனே தானே யாகிய அந்நெறி**
**ஏகனுகி யிறைபணி நிற்க**
**மலமாயை தன்னெடு வல்வினை யின்றே.**

(சூ.ள்) அவனே தானே ஆகிய அந்நெறி – (பெத்த நிலையில்) அவ்வான்மாவே தானேயாய்ச் சிவன் நின்ற அம்முறையானே; ஏகனுகி இறைபணி நிற்க – (முத்தி நிலையில்) சிவனே தானெனும்படி ஆன்மா இறைபணியில் நிற்குமாயின், மலமாயை தன்னெடு வல்வினை இன்று – மலம் மாயை என்பவற்றேடு வலிய கன்மமும் இல்லையாம்.

(க.ரை) **பாச க்ஷயம் பண்ணுமாறு உணர்த்துகின்றது.**

(க. பொ) ஏழாஞ் சூத்திரத்திணுற் சாதிக்கும் பொருளியல்பும், எட்டாஞ் சூத்திரத்திணுற் சாதித்துப் பெறப்படும் பொருளியல்பும்,

ஒன்பதாஞ் சூத்திரத்தினாற் சாதிக்குமாறும் உணர்த்தி, இனி அச் சாதனத்தினால் எய்தும் பயனியல்பு வகுத்துக் கூறப்படுகின்றது. பாச வீடும் சிவப்பேறும் என்ப பயன் இருவகைப்படும். அவ்விரண்டினுள்ளே சுட்டுணர்வினாலாகிய ஏகதேசக் காட்சி திருவஞ்செழுத்தின் உச்சரிப்பினாற் பற்றறக் கழியும். அது கழிதலினாற் பெறப்படுவது ஆன்ம சுத்தியாம். ஆன்ம சுத்தியாவது பாசக்ஷயமேயாம். ஒன்பதாஞ் சூத்திரத்தின் பாச க்ஷயம் எய்துமாறு சிந்தனை செய்த பொருளைத் தெளிய உணர்த்துவது பத்தாஞ் சூத்திரம் என்பதாம். (க்ஷயம் — தேய்வு, அழிவு: பாசப் பிணிப்பினின்றும் முற்றும் நீங்குவதே பாச க்ஷயம் ஆகும்.)

இச்சூத்திரம் ஞானத்து யோகமாகிய தெளிதலை உணர்த்துகின்றது. இது நிதித்தியாசனம் எனப்படும். சிவயோகம் என்பதும் இது. ஆதித்த கிரணத்தை கலந்த கண்போல ஆன்மா திருவருளோடு சேர்ந்து அருளாய் நிற்றலே சிவயோகம். இது ஞான யோகத்தானம் "தில்லை வட்டம்" "அறிவினெல்லையாய திருத்தில்லை யெல்லை" எனக் குறிக்கப் பெறும் துரிய சிதம்பரத்தின் பாலதாம் என்பது உணரற்பாற்று.

(சூ. பி. பொ.) சிவஞானக் கண்ணினால் ஆன்மாவிலே நாடப்பட்ட சிவன் பொருட்டன்மையால் ஆன்மாவுக்கு வேறேயாயினும், வேறு காணப்படாது யானே கண்டேன் என்னுமாறு ஆன்மாவேயாய் நின்ற பெத்த நிலையிற்போல, ஈண்டு ஆன்மா தானென வேறு காணப் படுமாறின்றி அச்சிவனேயாமாறு ஒற்றுமைப்பட்டுத் தான் பணி நீத்தலாகிய இறை பணியிலே சலியாது நிற்பின், மலம் மாயை கன்மம் என்னும் மூன்றும் இல்லையாய் ஒழியும். ஈண்டு ஒற்றுமைப் படுதலாவது,

1 குடம் உடைந்தபோது குடாகாயமும் மகாகாயமும் ஒன்றுதல் போல ஒற்றுமைப் படுதலோ?

2 இன்றேல், வெள்ளியை இப்பி என்பது போல ஒன்று திரிந்து மற்றொன்றாய் ஒற்றுமைப் படுதலோ?

3 இன்றேல், மண்ணே குடம் என்பது போல ஒன்று திரிந்து மற்றொன்றாய் ஒற்றுமைப் படுதலோ?

4 இன்றேல், வெள்ளை நிறமும் தாமரையும் போல குண குணித் தன்மையால் ஒற்றுமைப் படுதலோ?

5 இன்றேல், தீயும் இரும்பும் போல ஒன்றினொன்று கலத்தலால் ஒற்றுமைப் படுதலோ?

6 இன்றேல், பாலும் நீரும் போலப் பிரிக்கப்படாத இயல்பினால் ஒற்றுமைப் படுதலோ?

7 இன்றேல், கருடனும் மாந்திரிகனும் போலப் பாவனை மத்திரையினுல் ஒற்றுமைப் படுதலோ?

8 இன்றேல், காய்ச்சிய இரும்பின் நீர் போல ஒன்றின் ஒன்று லயமாதலால் ஒற்றுமைப் படுதலோ?

9 இன்றேல், பேயும் பேய் பிடியுண்டவனும் போல ஆவேசத்தினுல் ஒற்றுமைப் படுதலோ?

10 இன்றேல், விறகில் தீயைப் போல விளங்காமையான் ஒற்றுமைப் படுதலோ?

11 இன்றேல். சூரியனொளியின் விளக்கொளி போலச் சத்தி கெட்டு நிற்றலால் ஒற்றுமைப் படுதலோ?

12 இன்றேல், தலைவனும், தலைவியும் போல இன்ப நுகர்ச்சி மாத்திரையான் ஒற்றுமைப் படுதலோ?

13 இன்றேல், நட்பினர் இருவர் போல நட்பின் மிகுதியால் ஒற்றுமைப் படுதலோ?

14 இன்றேல், ஆமாவும் ஆவும் போல ஒப்புமை மாத்திரையான் ஒற்றுமைப் படுதலோ? என்று அவ்வச் சமயத்தார் கூறும் ஐயப்பாடுகளெல்லாம் பொருந்தா என்று கொண்டே, சிவபெருமான் ஆன்மாவுக்கு வேறேயாயினும் பெத்த காலத்தில் அச்சிவபெருமான் அவ்வான்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு நின்றவாறு போல, முத்தி நிலையில், ஆன்மா சிவனேயாய் ஒற்றுமைப்பட்டு ஏகனுகி இன்றப்பணி நிற்றல் வேண்டும் என்று கூறப்பட்டது. இவ் ஒற்றுமை இரண்டின்மை ஒருமை, பிரிப்பின்மை, அத்துவிதம் எனக் குறிக்கப்படும்.

## முதலாம் கூற்று

அரனுடன் ஒன்றாகி நில்.

(சூ. பொ.) அந்த ஆன்மா தான் என வேறு காணப்படுமாறின்றிச் சிவனோடு ஒற்றுமைப்பட்டு ஏகனுகி நின்றால்; யானும் எனதும் எனப் பகுத்துக் காணும் மயக்கவுணர்விற்கேதுவாகிய மலம் நீங்கி அச்சிவ பிரானது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாதலான், அந்தச் செருக்கு நீங்குதற்குக் காரணமாதல் பற்றி, சிவபெருமான் இந்த ஆன்மாவேயாய் நின்றமை போல், அச்சிவபெருமானோடு ஆன்மா ஏகனுகி நிற்றல் வேண்டுமென்பதாம்.

யானும் எனதும் எனப் பகுத்து நிற்கும் உணர்வே மயக்கவுணர்வு என்றதனை உதாரணங் கொண்டு விளக்குகின்றார் :-

(வெ. பொ.) ஆன்மாவாகிய ஞாதாவையும், சிவமாகிய ஞேயத்தையும், யான் என்றும் அவன் என்றும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் யானே என நிற்பார்க்கும் போல அவ்வாறு கருதுகின்ற

ஆன்ம போதம் முற்பட்டுத் தோன்று மாதலான், அது தோன்றுங்காற் சிவனுகிய தான் என்று ஒரு முதல் காணப்படு மாறின்றித் தான் அவ்வான்மாவேயாய்க் காணப்பட்டும், இனி ''யான் என்று ஒரு முதல் காணப்படுமாறில்லை என்றறிந்து சிவனே முழுவதும் எனக் காண்பாரை'' அங்ஙனம் வேறு காணப்படுமாறில்லை என்று தனது திருவடி வியாபகத்துள் வியாப்பியமாய் அடங்கி நிற்கச் செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன் முதல்வன்.

இதுபற்றியே, மாணிக்கவாசக சுவாமிகள், ''நற்பால் வினைத் தெய்வம் இவளைக் களவின் கட் கூட்ட, அமுதமும், அதன் கட் கரந்து நின்ற சுவையுமென்ன என் நெஞ்சம் இவர் கண்ணே ஒடுங்க, யான் என்பதோர் தன்மை காணுதொழிய, இருவருள்ளங்களும் ஒருவே மாமாறு கரப்ப, அவ் ஏகாந்தத்தின்கட் பிறந்த புணர்ச்சிப் பேரின்ப வெள்ளம் யாவரான் அறியப்படும்'' எனச் செய்யுள் அருளிச் செய்தனர் அச்செய்யுள், ''சொற்பா லமுதிவள் யான் சுவை யென்னத் துணிந்திங்ஙனே, நற்பால் வினைத் தெய்வந் தந்தின்று நானிவ ளாம் பகுதிப் பொற்பாரறிவார்'' என்பது. இங்கே இவள் எனச் சுட்டப் பட்டது சிவபரம் பொருளே என்றும், பேரின்ப வெள்ளத்தை அடைந்தவன் ஆன்மா என்றும் அறியற்பாற்றும். திருநாவுக்கரசு நாயனுரும், எம்பிரா னென்றதே கொண்டென்னுளே புகுந்து நின்றிங், கெம்பிராளுட்டவாடி யென்னுளே யுழிதர்வேளை, யெம்பிரா னென்னைப் பின்னைத் தன்னுளே கரக்கு மென்ருல், எம்பிரா னென்னினல்லா லென் செய்கே னேழையேனே'' என்று அருளிச் செய்தார்.

''இரண்டாம் பயனெனுந் திருவரு டெளியிற்
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்ரும்
என்றிறை யியற்கை இயம்புத றகும்''

என்று உமாபதி சிவாச்சாரியார் தமது சங்கற்ப நிராகரணத்திற் பரம சித்தாந்தமாக (மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கை) முடிவின் கண்ணே எடுத்து ஓதியவாறே, பஞ்சாக்கரத்தில் உய்த்துணர்ந்து நிற்றலே ஏகனுகி நிற்றல் என்னும் தொடரின் கருத்தாம்.

வாதனுமலம் போக்கி ஆன்ம சுத்தி பண்ணுதற்குப் பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தலே சாலும், அதற்கு மேல் ஏகனுகி நிற்றல் எதன் பொருட்டாமெனின், அங்ஙனம் நிற்றலால் யான் எனப்படும் ஞாதாவும், எனது எனப்படும் ஞானமும், அதற்கு விடயமாய் எனது எனப்படும் ஞேயமுமாகப் பகுத்துக் காணும் மயக்க உணர்விற்குக் காரணமாகிய மலவாசனை நீங்கும். அது நீங்கினுல் சிவனுர் திருவடியாகிய சிவானந்தத்தை உயிர் அநுபவிக்கும். ஆதலால் மலவாசனை நீங்கிச் சிவானந்தத்தை அடைதற்கு ஏகனுகி நிற்றலாகிய இது சாதகமேயாம்.

தூல வொளியாகிய கண்ணொளியும் சூக்கும வொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கு நிலை பிரித்தறிய வாராமையாவது; கண்ணொளியாய்க் காணுங்காற் காணுந் தன்மையே முனைத்துத் தோன்று மாகலான், அப்போது விளக்கொளி இருந்தும் இல்லைதான், இனி விளக்கொளியாய்க் காணுங்காற் காட்டும் தன்மையே முனைத்துத் தோன்றும் ஆகலான் அவ்வழி கண்ணொளி இருந்தும் இல்லையே ஆம், கண்ணொளியும் விளக்கொளியும் எனப் பகுத்துக் காணப்புகினும், காணுந் தன்மையே முற்பட்டுத் தோன்றுதலால் விளக்கொளி திரிவு புலனாகக் காணப்படுவதல்லது தெளிவுக் காட்சியாகப் புலப்படுமாறில்லை. அதுபோல், தூல அறிவாகிய ஆன்மாவும் சூக்கும அறிவாகிய சிவனும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கு நிலையும் பிறித்தறிய வாரா ! ஆன்மாவாய்க் காணுங்கால் ஆன்ம போதமே முனைத்துத் தோன்றலால் அவ்வழி சிவனிருந்தும் இல்லையாம்; சிவனாய்க் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்று மாகலான், அவ்வழி ஆன்மா இருந்தும் இல்லையே யாம்.

இனி ஆன்மாவும் சிவனும் எனப் பகுத்துக் காணப்புகினும் தற்போதமே முற்பட்டுத் தோன்று மாகலான், அவ்வழியும் சிவன் திரிவுக் காட்சிக்குப் புலனாகக் காணப்படுவதன்றித் தெளிவுக் காட்சிக்குப் புலனாய் நிற்குமாறில்லையாம், ஆதலால் ஆன்மாத் தான் என்றொரு முதல் காணப்படாது எல்லாம் சிவனே எனக் காண்டல் தெளிவுக் காட்சியேயாம். கண்ணுக்கு ஒளியிருத்தலினால் தான்,

**ஆதித்ய : சக்ஷுர்பூத்வாக்ஷிணீ பிராவிசத்**

''ஞாயிறு கண்ணாகி இரு கண்களுள்ளே பிரவேசித்தான்'' என்று ஐதரேய சுருதி கூறுகின்றது.

**'சாட்சுஷோ ஹி ரச்மி :'**

''கண்ணுக்கு ஒளி உளதன்றோ'' என்று நியாய சாத்திரமும் கூறுகின்றது.

**ஏஷ ரசோ யச்சட்சு :**

என பிருகதாரணிய சுருதி கூற, அதற்குச் சங்கராச்சாரியர்

**தைஜசம் ஹி சட்சு :**

''ஒளியுடைத்தன்றோ கண்'' என்று பொருள் கூறுகின்றமையானும்,

**(தந்ந) ரூபைக நிஷ்டத்வாச்சட்சுஸ் தைஜஸ மிந்திரியம்**

''கண்ணனது உருவமொன்றையே கவர்தலால் ஒளியுடைய இந்திரியமேயாம்'' என்று பவுட்கராகமம் கூறுதலானும் கண்ணுக்கு

ஒளி இல்லை என்று கூறும் பித்தர் கூற்றுப் பொருந்தாதாம் என விடுக்க. கண்ணுக்கு இயல்பாய் ஒளியில்லையாயின், அது இருட்காலத்தில் இருட்டை இருட்டென்று எங்ஙனம் அறிய வன்மையுடையதாயிற்றோ? ஆதலால் இயல்பாகக் கண்ணுக்கு ஒளி உண்டு என்பதாம்.

## இரண்டாம் கூறு

### உன் றெழிலெல்லாம் அரன்பணியாகக் கொண்டு ஒழுகு.

ஆன்மாவினது அற்ப இச்சையும், அற்ப ஞானமும், அற்ப செய்கையுமாகிய இம்மூன்றும் சிவபெருமானது இச்சா சத்தியும், ஞான சத்தியும், கிரியா சத்தியுமின்றி நிகழமாட்டா, ஆதலால் அது சிவனுடைய விருப்பேயன்றித் தனக்கு விருப்பில்லை என்றும், சிவனுடைய அறிவேயன்றித் தனக்கு அறிவில்லை என்றும் சிவனுடைய செய்கையேயன்றித் தனக்குச் செயலில்லை என்று உணர்ந்து,

''ஓங்குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்தில் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்'' — என்றவாறு, சிவபெருமானது மிக ஓங்கிய திருவடி வியாபகத்துக்குள்ளாக அடங்கி, இந்தப் பேரின்பப்பேறு பெற்றேன் என்னும் கெர்ச்சிதமும், அவரது இன்ப சத்தியாலாய தென்றறிந்து, அந்தப் பூரண நிலையில் விசாரமற்றுத் தூங்கும்; அப்போது, பிரபஞ்சம் சிறிதும் அதனைத் தாக்குமாறில்லை. பிரபஞ்சம் தாக்காதொழியவே, மறுமைக்குக் காரணமாகிய வினையும் ஏறாது. அங்ஙனம் ''பல்லடியார்'' என்றற்றொடக்கத்த தேவாரத்தில் ''செல்லடியே நெருக்கித் திறம்பாது சேர்ந்தவர்க்கே சித்தி முத்தி செய்வான்'' என்று கூறப்பட்டப்படி, சலியாது நிற்றல் தான் இறைபணியில் வழுவாது நிற்றல் ஆகும். திருவடி வியாபகத்துள் நில்லாது அதனை விட்டு நீங்கி நிற்பின் பிரபஞ்சம் தாக்கும். அது தாக்கவே, விருப்பு வெறுப்புச் சாரும். அவை சாரவே, பிறவிக்கு வித்தாகிய பெத்தநிலை வந்து தலைப்படும். ஆகலான் மாயை கன்மங்களின் வாசனை அற்றுப் போதற்கு உபாயம் இது என்று அறிந்து இறைபணியிற் சலியாது நிற்க என்பதாம்.

முதற் கூற்றிற் கூறப்பட்டவாறு, சிவபெருமானிடத்து ஆன்மா ஏகனாய் நின்றால், ஞாதாவும், ஞானமும், ஞேயமும் எனப் பகுத்துக் காணும் மயக்க உணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை நீங்கும்.

இறை பணி நின்றால், உடம்போடு கூடி நிற்கும் போது அநுபவித்தற்கு வேண்டப்படும் பிராரத்த வினையும், அது பற்றி வரும் ஆகாமிய வினையும் பிரவேசிக்க மாட்டா என்பவை விளக்கப் படுகின்றன.

(வெ. பொ) வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்கும் கருவியாகிய செவி வாய் முதலிய இந்திரியங்கள் சிவபெருமானது உடைமையாகிய மாயேயமாமன்றி ஆன்மாவாகிய நாமாவன அல்ல. அவ்விந்திரியங்கள் தொழிற்படுதலும், சிவபிரான் வயத்தானன்றி நம் வயத்தான் அன்று: அந்தச் செவி முதலிய இந்திரியங்கள் சத்தாதி வாக்காதிகளை விடயித்தற்குத் துவாரமாயுள்ள தனு கரண புவன போகங்களும், அம்மாயேயமாவனவன்றி யாமாவன அல்ல; அவை தொழிற்படு தலும் முதல்வன் வயத்தானன்றி நம் வயத்தானன்றாம். அவற்றோடு கூடி நின்ற வினைகளை ஈட்டி நுகர்ந்து வருகின்ற யாமும், எமது அறிவையும் செயலையும் சிவபெருமான் விளக்கிய போது விளங்கியும், விளக்காத போது விளங்காமலும் இருப்பேம். ஆதலால், ஆன்மாக் களாகிய நாமெல்லாம் சிவபெருமானுடைய அடிமையாகிய உடைமையாவேமன்றிச் சுவதந்திரராவேமல்லேம்.

இங்ஙனம் பசு பாசங்களின் இயல்பை உள்ளபடி அறிந்து செய்வனவெல்லாம் சிவபெருமான் அருளின் வழி நின்று செய்யும் செயலாகக் கண்டு கொண்டிருப்பாராயின், இந்த இறை பணியாகிய அடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவ்வினைகள் அவர்க்குப் பந்தமாக மாட்டா. அவ்வாகாமிய வினையைப் பிரியாது உடன் கொண்டு வருவதாகிய பிராரத்த வினையும் தன்னைக் கூட்டும் சிவசன்னதியிலே உடல் அநுபவிப்பதாய்க் கழியும். ஏனையோர்க்குப் போல அவ்வினை அவர்க்கு எய்தாது.

யஃ சுரோத்திரே திஷ்டந்ய: சுரோத்ர மந்தரோ
யமயத்யேஷத ஆத்மாந் தர்யாம்யமிருத:| யஸ்து
வசி திஷ்டந் யஸ்துவ சமந்தரோயமயத் யே ஷத
ஆத்மாந் தர்யாம்யமிருத:| யோவிஞ்ஞாநே
திஷ்டந்யோ விஞ்ஞான மந்தரோய மயத்யே ஷத
ஆத்மாந்தர் யாம்ய மிருத:

(பிருகதாரண்யகம் 5. 7. 19, 21, 22)

"எவர் சுரோத்திரத்தினும், துவக்கினும் (அங்ஙனம் ஏனைய வற்றினும்) இருந்து அச்சுரோத்திரம் துவக்கு முதலியவற்றையும் உண்ணின்று செலுத்துகின்றாரோ, எவர் ஆன்மாவிலிருந்து அதனை உண்ணின்று செலுத்துகின்றாரோ, அவர் உன் அந்தரியாமியாகிய பரமான்மா எனப்படும் சிவனும்" என்னுஞ் சுருதிப் பிரகாரம், இவ் விந்திரியங்களும் ஆன்மாவும் செலுத்தப்படுதலான் இந்திரியங்கள் சிவபெருமானுக்கு உடைமையாம் என்றும், ஆன்மா அவர்க்கு அடிமை யாம் என்றும் ஆகம அளவை பெறப்பட்டது.

சஞ்சிதவினை ஞானாசாரியரால் அத்துவ சோதனை செய்த போது எரியைச் சேர்ந்த வித்துப் போலக் கெட்டொழிந்தது. இங்கே பிராரத்த வினையும் உடலின் நுகர்ச்சியாய் ஒழிந்தது. ஆகாமியம் இறைவனால் ஏன்று கொள்ளப்படுவதாயிற்று.

அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என் செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்(கு)
எல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே

என்னும் அப்பர் அருள்மொழி இக்கருத்துப் பற்றியே எழுந்த தென்க.

பிராரத்த வினை இறைபணி நிற்பார்க்கு அவர் உயிரைச் சாராது உடலின் அநுபவமாய்க் கழிந்துபோக, அவ்விறை பணி நில்லாத ஏனையோர்க்கு அது உயிரின் அநுபவமாய்ச் சென்று வருத்து தற்கு காரணம் கூறி விளக்குதல் வாயிலாகச் சிவபெருமான் நடுவு நிலையிற் பிறழ்ந்திலர் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) தன்னையடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கடன்'' என்று திருநாவுக்கரசு நாயனாரருளிச் செய்த படி, தம்மிடத்து அடைக்கலம் எனச் சார்ந்தவரை அவர்க்கு வரும் ஏதத்தை நீக்கி, அவர்க்குப் பற்றுக்கோடாய் நின்று காத்தல் உத்தம குணமுடையார்க்குக் கடமையாதலின், சிவபிரான் ஏனையோரை விடுத்துத் தம்மைச் சார்ந்தவரைப் பாதுகாப்பார். அது பற்றி நடு நிலையினின்று கோடினாரல்லர். தம்மைச் சார்ந்து தமது திருவடித் தொண்டில் நிற்கவல்ல அடியாரைத் தாமே யாய் நிற்குமாறு நிறுவி, அவ்விறை பணி செய்ய மாட்டாத பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை நியதி செய்து செய்த அவர்க்கே கொடுப்பார். அவ்விறை பணி நிற்பார், நிற்க மாட்டாதார் என்னும் இருவர்க்கும் உணவாகி நுணுகி வந்து நணுகும் பிராரத்த வினையினையும் அவ்வாறு செய்வோர் செய்திக்குத் தக்க பயனுமாறு இரு வேறு வகைப்படச் செய்வர்.

இதுபற்றிச் சிவபெருமான் நடுவு நிலைமையுடைய ராவாரன்றி, கோட்டமுடையாராகாரென்பது ஏனைச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்த உண்மையேயாம்.

சிவப்பணியினிற்கும் ஞானிகளுக்கும் பிராரத்த வினைதாக்கு மென்பது. ''தினைத்துணையேனும் பொறேன் றுயராக்கையின் திண் வலையே'' என்றற் றொடக்கத்தனவாகிய மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்குகளால் அறியப்படுகின்றது. ஆதலால், இறைபணி நிற்பார் உலகின் கண்ணே செய்யும் நன்மை தீமைகள், நன்மை தீமைகளை இவ்

விறைபணி நிற்பார்க்குச் செய்வாரிடத்தே இசையச் செய்வர் சிவபெருமான் என்றதனோடு மாறுபடுகின்றது; ஆதலால், பிராரத்த வினைவாயிலாக ஆகாமியவினை பிறவிக்கு வித்தாய் நிலைபெறும் எனின், அந்தப் பிராரத்தவினை தாக்குதற்குக் காரணம் உரைத்து, அது செய்வோர் செய்திப் பயனுய் ஒழியும் என்பது உணர்த்தப்படுகின்றது.

(வெ. பொ.) தன்பால் வைத்தெடுக்கப்பட்டொழிந்த பெருங் காயத்தினின்றும், அதன் வாசத்தை வாங்கிக் கொள்ளும் பாத்தி ரத்தின்கண் அந்த வாசம் மங்கிப்போய் மெலிதாய் மணக்குமாறு போல, சிவோகம் பாவனை செய்து இறைபணி நிற்கும் தத்துவ ஞானிக்குப் பயற்சி வயத்தினல் தற்போதம் முனைத்துத் தோன்று தலுண்டாமாதலின், அது பற்றிப் பிராரத்த வினையும், அதற்கு வாயிலாக உடம்பு முதலிய மாயேயமும் மங்கிப்போய் வாசனை மாத்திரையாய் மெலிதாய் வந்து தாக்குமாயின், அந்தத் தத்துவ ஞானி ஒரோவிடத்து அவ்வாறு பிறழநேர்ந்தாலும் பிறழவொட்டாது அந்த மெய்ப்பொருளையே பற்றி உணர்ந்து நிற்பானுதலினல், அவ் வாகாமிய வினை மறுபிறவிக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்குப் பற்றுக் கோடாகிய தனு கரணுதி மாயேயத்தோடு கெட்டொழியும் என்க.

பிராரத்த வாதனையினல் ஆகாமியம் மெலிதாய் மூண்ட விடத்து, சிவனுகிய அச்சினை உணர்ந்து நிற்றல் எங்ஙனம் என்று உவமை வாயிலாக விளக்கப்படுகின்றது :-

(வெ. பொ.) நெருப்புச் சுடாமைக்குக் காரணமாக அக்கினித் தம்பனஞ்செய்ய வல்லார், அந்த அக்கினி மத்தியிற் கிடந்தாலும் தம் வெற்றிப்பாட்டினின்று நீங்காதவாறு போன்றும், குதிரை செலுத்துதற்குரிய பயிற்சியில் வல்லார் அக்குதிரையின் வேகத்துட் பட்டாலும் தமது வெற்றிப்பாட்டினின்று நீங்காதவாறு போன்றும், ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாதென்றுணர்ந்து, ஐம்புலன்கள் தம்முள்ளே வியாப்பியமாய் அடங்க தாம் அவற்றை வியாபித்து மேற்பட்டு நிற்கும் முறையை ஆராய்ந்து, சிவபெருமானது அருட்டிருவடி வியாபகத்தைத் தலைப்பட்டு அந்த அச்சினை உணர்ந்து நிற்கவல்லார் அவ்வாகாமிய வினை மீளுதல் பற்றி ஐம்புலங்களிற் சென்றுர் ஆயினும், அதனல் அவர்தம் மேம்பாட்டை இழந்து பந்தத்தினல் தொடக்குண்பாரல்லர்.

**யதா புஷ்கர பலாச ஆபோ ந ஸிலிச்யந்த**
**ஏவமேவம் விதிபாபம் கர்ம ந ஸிலிச்யதே ||**

''தாமரையிலையில் நீர் ஒட்டாதது போல்'' (பரப்பிரம சிவனுகிய) அதனை அறிந்தவரிடத்துப் பாவகர்மம் பற்றுது என்று சாந்தோக்கிய சுருதியும்,

பத்மபத்ரம் யதாதோயை: ஸ்வஸ்தைரபி ந லிப்யதே |
சப்தாதி விஷயாம் போகிஸ்தத்வஞ்ஞாநீ ந லிப்யதே |

"தாமரையிலையானது தனக்கு ஆதாரமாய் நிலைத்த தண்ணீரால் எங்ஙனம் தொடக்குண்ணை வில்லையோ, அங்ஙனம் ஞானி ஓசை முதலிய புலன்களினால் தொடக்குண்ணான்" என்று சிவதருமோத்தராகமமும் கூறியிருத்தல் காண்க.

சத்தோடு சார்ந்தவிடத்தும், அசத்தோடு சார்ந்தவிடத்தும் அதுவதுவாய்ச் சத்த சத்தாமியல்பினையுடைய ஆன்மாக்கள் ஐம்புலனாகிய அசத்தைச் சார்ந்தும் அதனாற் சிக்குண்ணாது வெற்றியையுடையராதல் எப்படி என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ) சத்தாகிய சிவ பிரானோடு கூடிய விடத்துச் சத்தாகிய சிவனாயும், அசத்தாகிய ஐம்புலன்களோடு கூடியவிடத்து அசத்தாயும், இங்ஙனம் சத்த சத்தாமியல்புடைய ஆன்மாவின் உண்மை உணர்ந்தோரர் சிவபிரான் திருவருளாலல்லது ஒன்றையும் காணாய், அவ்வருளின் வழி நின்று காணுமாயின், அப்போது பாசத்திலே பற்றுச் செய்தல் கூடாமையான், சத்தாகிய அப்பெருமானைத் தலைப்பட்டோர் மிகச் சுடர்ந்து ஒளிரும் ஒளிக்கு முன் எதிர்ப்பட்ட இருள் போல, அந்தச் சத்தாகிய சிவபிரானது முன்பு தனது சத்தியை ஏற்கமாட்டாத அசத்தாகிய ஐம்புலனுட் சிக்கி நிற்பாரல்லர்.

இங்ஙனம் சத்தாகிய சிவபிரானைத் தலைப்பட்டுத் துரிய அருணிலைச் சுகப் பிரபை நிலையை அடைந்தோர்க்கு ஒருகாலும் பஞ்ச கிருத்தியஞ் செய்ய வேண்டுமென்றேனும், அட்டமாசித்தியைப் பெற வேண்டுமென்றேனும், மற்றொரு சித்து விளையாடல் செய்து உலகத்திற் பொருள் புகழ் பெற வேண்டுமென்றேனும் நினைவு உதிக்காது; அங்ஙனம் அவர்க்கு அறிவு தோன்றுமாயின், அவர் அந்த அருணிலையை அடைந்தாருமல்லர்; பேரின்பத்தைத் துய்த்துணர்ந்தவரும் அல்லர்; அமிர்தமுண்டு சுவை கண்டவன் மற்றோர் இழிவாகிய உணவை விரும்புவானோ? விரும்புவானல்லன். அதுபோலாம்.

இறை பணி நிற்பார்க்குப் பிராரத்த வினை சிவபெருமான் சன்னிதியில் உடற் புசிப்பாய் ஒழிவதன்றி, உயிர்ப் புசிப்பாய் மறுபிறவிக்கு வித்தாய் ஏறுமாறில்லை என்றும், இறை பணி நில்லாத ஏனையோர்க்கு அது உயிருழாய் வருத்தும் என்றும், இங்ஙனம் இறை பணி நிற்பார்க்கும், இறை பணி நில்லாதோர்க்கும் இருவேறு வகைப் பட்ச் செய்தலாற் சிவபிரான் நடுநிலையினின்று வழுவினாரல்லர் என்றும், பிராரத்த வாசனை ஒரோவிடத்து இறை பணி நிற்பார்க்கு வந்து தாக்கினும், அஃது அவரது திருவடி ஞானத்தினால் அழிவுறும்

என்றும், அந்த இறை பணி நிற்பார் ஐம்புல நுகர்ச்சியுட்படினும் அதனால் தொடக்குண்ணார் என்றும், சத்தாகிய சிவனைத் தலைப் பட்டோர் அசத்தாகிய ஐம்புலன் மாட்டுச் சென்று நிற்பாரல்லர் என்றும் கடைப்பிடிக்க.

## பத்தாம் சூத்திரத்தொகைப் பொருள்

ஆன்மா முத்தி நிலையிற் சிவனோடு ஏகனாகி நிற்றல் வேண்டு மென்றும், அங்ஙனம் நான் என்றொரு முதல் இல்லை என்றறிந்து சிவனே முழுவதுமெனக் காண்பாரைச் சிவன் தன் திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்வன் என்றும், ஆன்மாவையும், சிவனையும் பகுத்துக் காணப்புகின் தற்போதம் முனைத்துத் தோன்று மாதலான் அது திரிவுக்காட்சியாம் என்றும், ஆதலால் கண்ணொளி யோடு கூடிய விடத்தும் இது விளக்கொளி, இது ஆதித்தனொளி, இது சந்திரனொளி என அவ்வப் பெற்றியவாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுக்காட்சியாமாறு போல, ஆன்மா வானது தான் என்றொரு முதல் காணப்படுமாறில்லை என்றுணர்ந்து முழுவதுஞ் சிவனே எனக்காண்டல் தெளிவுக்காட்சியாம் என்றும், பசு பாசங்களின் தன்மைகளை உள்ளவாறு உணர்ந்து ஆன்மாவானது தான் செய்பவற்றையெல்லாம் சிவனார் அருள்வழி நின்று செய்தலே இறைபணி நிற்றலாம் என்றும், ஏகனாகி நிற்றலால் மலவாசனை நீங்கும் என்றும், இறைபணி நிற்றலால் பிராரத்த வினையும் ஆகாமிய வினையும் ஆன்மாக்களுக்குப் பந்தமாக மாட்டாவாய் உடலின் அநுபவ மாய்க் கழிந்து போம் என்றும், ஏனையோர்க்கு அவை உயிரின் அநுபவ மாய்ச் சென்று வருத்தும் என்றும் இங்ஙனம் இருவேறுபடச் சிவபெருமான் செய்தலாற் "சார்ந்தாரைக் காப்பது தலைவர் கடனும்" என்னும் பழமொழிப்படி அவர் நடுவு நிலையிற்றிரிந்திலர் என்றும், சிவோகம் பாவனை செய்யும் தத்துவஞானியர்க்கும் பயிற்சி வுயத்தால் தற்போதம் முனைத்துத் தோன்றுதல் வாயிலாகப் பிராரத்தவினை மெலிதாய் வந்து மூளுமாயின் அவர் அச்சிவனாகிய அச்சினை உணர்ந்து நிற்றலால் அது பிறவிக்கு வித்தாய் முறுகாது தனுகரணாதி மாயேயத் தோடு கெட்டொழியும் என்றும், அத்தத்துவ ஞானியர் ஐம்புலங் களில் சென்றாரேனும் தாமரையிலையின் நீர் போல அவர் அவற்றாற் றொடக்குண்ணார் என்றும், அசத்தோடு சார்ந்து அசத்தாயும், சத்தாகிய சிவனோடு சேர்ந்து சிவனாயும், இங்ஙனம் சத்த சத்தாமியல் பினையுடைய ஆன்மாவின் உண்மை உணர்ந்தோர் திருவருளின் வழி நின்று அனைத்தையும் காணுவாராயின், பாசப்பற்றொழிந்து சத்தாகிய சிவனைத் தலைப்பட்டமையால், ஒளிமுன் எதிர்ப்பட்ட இருள் போல்ச் சிவபிரான் முன் சத்தி முனைக்க வலியில்லாத ஐம்புலனில் அகப்பட மாட்டார் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

## பதினோராம் சூத்திரம்

**"காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம் போல்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா வன்பின் அரன்கழல் செலுமே".**

(சூ.ள்) காணும் கண்ணுக்கு = காண வல்ல கண்ணுக்கு; காட்டும் உளம் போல் = (உருவத்தைக்) காட்டிக் (காண்கின்ற) ஆன்மாவைப் போல; காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் = (ஆன்மா) பொருளைக் காணுமாறு (சிவபிரான்) அதற்குக் காட்டியும் கண்டும் நிற்றலான், அயரா அன்பின் அரன் கழல் செலுமே = (ஏகனாகி இறைபணி நிற்கும் ஆன்மா) மறவாத அன்பினாற் சிவபிரான் திருவடியைக் கூடும்.

(க.ரை) **பரமேசுவரன் சீபாதங்களை அணையுமாறு உணர்த்துகின்றது.**

(க.பொ.) ஏகனாகி இறைபணி நிற்கும் ஞானிக்கும் அவர் ஞான இச்சாக்கிரியைகள் விடயித்தற்கு விடயம் ஒன்றுளது என்று அதனை உணர்த்துதல் வாயிலாக, பயன் இரண்டனுள் எஞ்சி நின்ற சிவப் பேறு எனப்படும் ஆன்மலாபம் பெறுதலாகிய நிட்டையின் இயல்பை இப்பதினோராஞ் சூத்திரம் உணர்த்துகின்றதென்பதாம்.

ஏகனாகி இறைபணி நிற்பார்க்கு இனிச்செய்யக் கடவது ஒன்றில்லை எனவும், இருணீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியா மாறுபோல, பசுத்துவ நீக்கமும் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வன ஆம் எனின், அது பொருந்தாது; "ஏகனாகி இறைபணி நிற்றல்" துரிய நிலைக்கண்ணதாகிய சிதம்பர அருணிலையே யாதலி னாலும், அங்கே மலம் நீங்கிய விடத்துச் சுகப்பிரபை மாத்திரையே விளங்குவதன்றித் துரியா தீதத்தின் கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமானந்தம் விளங்காமையாலும், அது விளங்குதற்கு அவனருளால் ஒன்றையுஞ் செய்யாமை மாத்திரம் போதாமையால், அதற்கு வேறும் ஆண்டுச் செய்ய வேண்டியதுண்டென்பது பெறப்படு தலானும், இருணீக்கத்தின் ஒளி விளக்கம் போலப் பசுத்துவ நீக்கத்தில் அருள்விளக்கு மாத்திரமேயன்றி, ஆனந்த விளக்கமும் உடனிகழாமை யானும், இவ்விரு விளக்கத்துக்கும் வேறுபாடு முன்னர்க்காட்டப் படுமாதலினாலுமாம்.

ஒன்பதாஞ் சூத்திரத்தில் எடுத்துக் கொண்ட ஆன்மசுத்தி பத்தாஞ் சூத்திரத்தில் முற்றுப் பெற்றாற் போல, பத்தாஞ் சூத்திரத்

தில் எடுத்துக் கொண்ட சுவாநுபூதி நிலை, பதினோராஞ் சூத்திரத்தில் முற்றுப் பெறும் என்றும், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட சுவானுபூதிமானுவன் என்பது தென்மொழிப் பதினோராஞ் சூத்திரத்தில் அரன் கழல் செலுமே எனக் கூறப்பட்டதேயாம் என்றும் வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் சுவாநுபூதிமான் என்றது அதன் பதினோராஞ் சூத்திரத்திற் பராபக்தி செய்க என்றதின் பின்னர்க் கொண்டு கூட்டி உரைக்கப்படும் என்றும் உணரற்பாற்றும். இது பற்றியே பத்தாஞ் சூத்திரம் பாசட்சயம் பண்ணுதலை உணர்த்திற்று எனவும், பதினோராஞ் சூத்திரம் பரமசிவனது சிபாதத்தை அணையுமாறு உணர்த்திற்று எனவும் கருத்துரை போந்ததாம் என்க.

(சூ. பி. பொ.) காட்டக் காணும் இயல்பினையுடைய கண் உருவத்தைக் காணுமாறு ஆன்மா அந்தக் கண்ணோடு பிரிப்பில்லாமல் ஒருங்கியைந்து நின்று காட்டித் தானும் காணும்; அதுபோல், அறிவிக்க அறிவதாகிய ஆன்மா உலகப் பொருளை அறியுமாறு சிவன் பிரிப்பின்றி ஒருங்கியைந்து நின்று அதற்கு அப்பொருளைக் காட்டி, தானும் அறிந்து வருவன். இங்ஙனம் அத்துவிதமாய் நின்று உபகாரஞ் செய்து வரும் பெருங் கருணையை அவ்வான்மா மறவாது உட்கொண்டு செய்யும் அன்பினுல் அச்சிவபிரானுரது திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும்.

"எந்நன்றி கொன்றூர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்று திருவள்ளுவ நாயனுரும், "நன்றி மறவேல்" என்று ஔவையாரும், கூறியாங்குச் சிவபெருமான் பெத்த காலத்திற் பிரபஞ்ச விடயத்தையும் முத்தி காலத்திற் சிவவிடயத்தையும் ஆன்மாவுக்குக் காட்டித் தாமும் உடனின்று கண்டு வரும் பேருபகாரத்தை இடையீடின்றி மறவாதிருந்தாற் பேரன்பு உளதாகும். அந்தப் பேரன்பு வாயிலாகச் சிவானந்தப் பேறுளதாம். இந்த இடையீடில்லாத அன்பு பராபக்தி எனப்படும், அதுவே அயரா அன்பு எனப்பட்டது. அயரா அன்பு என்றது அயராமையானுகிய அன்பு எனப் பொருள் படும். (அயராமை—மறவாமை)

ஆன்மாவை யின்றியமையாத கண் ஓர் உருவத்தைக் காணுமிடத்து ஆன்ம சிற்சத்தி கண்ணொளியெனத் தானெனப் பேதமுறுது உடனுய்க் கலந்து நின்று கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண் கண்டதென்றும் கண்ணை அதிட்டித்து நின்ற ஆன்மா அறிந்ததென்றும் பிரித்தறியப் படுமாறின்றி, இருவகைக் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாக ஒருங்கே நிகழும். அதுபோல, சிவபிரானை யின்றி அமையாத ஆன்மா ஒரு விடயத்தை அறியுமிடத்துச் சிவபிரானது சிற்சத்தி என ஆன்மாவின் சிற்சத்தியெனப் பேதமின்றி

உடனாய்க் கலந்து நிற்ப இருவகை அறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே விடயிக்குமாறு செய்து வரும் இவ்வுபகாரம் பெத்தகாலம், முத்திகாலம் என்னும் இரு காலத்தினும் ஒருபடியாய் நிகழும்.

ஏனையவற்றையெல்லாம் விடுத்து, ஆன்மாவானது (பத்தாஞ் சூத்திரத்தில் கூறப்பட்டவாறு) துரியத்திலே சிவபிரானிடத்து ஏகனாகி அவரது அருளாலன்றி ஒன்றையும் செய்யாமை யாகிய இறை பணியில் நின்று; சிவபிரான் அவ்வாறு அத்துவிதமாய் உடனின்று பெருங்கருணையினால் உபகரித்து வரும் உதவியுரிமையை நோக்குந் தோறும் நோக்குந்தோறும் அப்பொருளின் கண்ணே செல்லும் ஆசை அடங்காது மீதூருமாதலின், அந்த இச்சையாகிய ஆசையே தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தைத் துரியாதீதத்தில் அநுபவிக்கப் பெறும். இங்ஙனம் ஆன்மாவின் சிற்சத்தி எனப்படும் ஞான இச்சா கிரியைகளாற் சிவமாகிய விடயம் உணரப்படும் என்க.

நோக்குந்தோறும் நோக்குந்தோறும் என்பதனையே மாணிக்க வாசக சுவாமிகள் ''கொவ்வைக் கனிபோலுஞ் செவ்வாயை யுடைய இக்கொடியிடை தோளைக் கூடின், கூடுந்தோறும், கூடுந் தோறும் பெரிதாகிய இன்பம் முன்பு போலப் பின்னும் புதிதாய் வளரா நின்றது'' என்று கொண்டு, ''புணர்ந்தாற் புணருந் தோறும் பெரும் போகம் பின்னும் புதிதாய்......வளர்கின்றதே'' என்றருளிச் செய்தார்.

**அது நீ ஆகின்றனை** (தத்துவமசி) எனவும், **அவன் நான் ஆகின்றேன்** (சோகமஸ்மி) எனவும், **அவன் இது ஆகின்றான்** **(சோயமஸ்தி)** எனவும் மூவிடம் பற்றி நிகழும் மகாவாக்கியங் களுள்ளே, **அது நீ ஆகின்றனை** என்னும் முன்னிலை மகாவாக்கியத்தில், அது என்பது சிவமாகிய ஒரு பொருள், நீ என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி எனவும், **அவன் நான் ஆகின்றேன்** என்னும் தன்மை மகா வாக்கியத்தில் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், **நான்** என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி எனவும், **அவன் இது ஆகின்றான்** என்னும் படர்க்கை மகாவாக்கியத்தில் அவன் என்பது சிவனாகிய ஒரு பொருள், இது என்பது ஆன்மாவாகிய மற்றொரு பொருளாகலின், ஒரு பொருள் மற்றொரு பொருளாதல் எப்படி எனவும் வரும். ஐயம் நீக்குதற்கு எழுந்தமையால், அவ்விரு பொருட்கும் உளதாகிய சம்பந்த விசேட முணர்த்துதலே அத்துவிதம் என்னுஞ் சொற்குப் பொருளாம். அது பற்றியே பெரியோர்,

''சொன்ன தத்துவ மசியெனுஞ் சுருதியின் மொழியும்
மன்னு காரண பதியுநா னெனவரும் பசுவும்
மென்ன வேபொரு ளிருமைகண் டியைந்துவே றன்மை
தன்னை நாட்டிய தல்லது தனியென்ப தின்றே''

என்று கூறினர்.

அத்துவிதம் என்னுஞ் சொல்லினுற் பெறப்படுஞ் சம்பந்தம் ஐக்கியமோ? தாதான்மியமோ? சமவாயமோ? சையோகமோ? சொரூபமோ? அல்லது வேறோ? என வினவின் பின்வருமாறு விடுக்க. ஆற்று நீரும் கடனீரும் தம்மிற் சேர்ந்தாற் போன்றதெனவும், குடா காயமும் ஆகாயமும் தம்மிற் சேர்ந்தாற் போன்றதெனவும் முறையே ஐக்கியவாதியும் மாயாவாதியும் கூறின், அங்ஙனம் சேர்ந்த விடத்து அவை ஒரே பொருளாகலான் ஏகம் அல்லது ஒன்று எனக் கூறவே அமையும்; அத்துவிதம் என உய்த்துணர வைத்துரைக்க வேண்டுவதில்லை. ஒன்றுகப் போமாயின், அதுவதுவாய் நிற்கும் ஆன்மாவின் இலக்கணம் முத்திகாலத்தில் இல்லை எனப்பட்டு வழுவா மாதலின், அது பொருந்தாது.

குணகுணிகளுக்குத் தம்மின் உளதாகிய சம்பந்தம் போலும் தாதான்மியம் எனின், ஆன்மா முதல்வனைப் போல குணத்தை யுடைய குணிப் பொருளாய் நிற்பதன்றி, அது சிவபெருமானுக்குக் குணமல்லாமையால் அவ்வாறியைதல் கூடாது. தாதான்மியத்தின் வேருய் நையாயிகர் கூறும் சமவாயமென்பது ஒன்று இல்லையாதலின் அதுவும் பொருந்தாது. விரலும் விரலுஞ் சேர்ந்து நின்றாற் போலச் சையோகம் எனின், ஒரு விரல் மற்றொரு விரலால் வியாபிக்கப்படா திருத்தலாகிய சையோகம் வியாபகப் பொருள்களாகிய ஆன்மா வுக்கும் சிவத்துக்கும் கூடாமையால் அதுவும் பொருந்தாது.

யாதாயினும் ஓரியல்பு பற்றிக் கூறப்படும் சொரூபம் எனின், அது மகாவாக்கியப் பொருளை வலியுறுத்துமாறு போந்த அத்துவிதம் என்னும் மொழிக்குப் பொருளாகாமையானும், சொரூப சம்பந்த மாத்திரத்திஞல் ஆன்மா சிவானந்தத்தை அடைதல் கூடாமை யானும் அதுவும் பொருந்தாது அவயவ அவயவிகளாயாதல், குண மாகிய செம்மையும் குணியாகிய தாமரையும் போலக் குணகுணி களாயாதல் வேற்றுமைப்பட்டு நிற்றற் கேதுவாகிய தாதான்மியம் ஒன்றும், அதுபோலக் கண்ணொளியும் கதிரொளியும் போலவாதல், ஆன்ம போதமும் கண்ணொளியும் போலவாதலுள்ள இரு பொருளே அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றுய் நிற்றற் கேதுவாகிய தாதான் மியம் மற்றொன்றுமாகத் தாதான்மியம் இருவகைப்படும், முதற் கண்ணே கூறப்பட்டது தாதான்மியம் எனப்படும்; பின்னையது அத்து

விதம் எனப்படும். அத்துவிதம் என்னும் சொல்லியையு இரண்டாஞ் சூத்திரத்துக் கூறப்பட்டவாறு அன்மைப் பொருள் பற்றி இரண்டன்றென வேற்றுமைப் படாமையை விளக்கி நிற்பதாயிற்று. எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குந் தன்மையில் ஆன்மாவானது பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என அறுவகைப்படும்.

பூத பரிணமமாகிய உடம்பினைப் பற்றிய விடத்து ஆன்மா பூதான்மா எனப்படும். அகத்தின் கண்ணவாகிய சூக்குமை முதலிய வாக்குகளைப் பற்றிய விடத்து ஆன்மா அந்தரான்மா எனப்படும். மனம் முதலிய சூக்கும தத்துவங்களைப் பற்றிய போது ஆன்மாத் தத்துவான்மா எனப்படும். புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற்றிய இன்பத் துன்பங்களை ஆன்மா அநுபவிக்குங்காற் சீவான்மா எனப்படும். மந்திரங்களைக் கணிக்குமிடத்து ஆன்மா படிகம் போல அவ்வம்மந்திர மயமாய் நிற்குங்கால் மந்திரான்மா எனப்படும். ஆன்மா அத்துவித பாவனையாற் பரமான்மா என் நிற்குங்காற் பரமான்மா எனப்படும்.

இந்த அறுவகையுள் ஏனையவெல்லாம் உபாதி பற்றிய செயற்கையாம்; சித்து என்னும் சாதி ஒருமை பற்றி பரமான்மா என நிற்றல் இயற்கையாம். ஆகலான்,

**சர்வஞ்ஞ: சர்வதர்சிச பரிபூர்ண: சுநிர்மல:।**
**விமுக்த: கேவலீ பூத: சுகமக்ஷய மாப்நுயாத்।**

"அத்துவித பாவினையுடையோன். ஞானக் கண்ணாற் சிவனை ஆன்மாவிற் கண்டு, முழுதும் வியாபகமாய் நின்று அறிவதாகிய முற்றுணர்வுடையனாய் அவ்வப் பொருளியல்பெலாமுணர்ந்து மலவாசனை தீர்ந்து கேவலமாய் நின்று முடிவு காணகிலாப் பேரின்பத்தைப் பெறுவன்" என்று ஆன்மா பரமான்மாவாய் நின்று பேரின்பம் பெறுமாறு சர்வஞ் ஞானோத்திரத்திற் கூறப்பட்டது.

குடா காயமும் ஆகாயமும் போல அபேதமாய் நிற்கும் நிலையே அத்துவிதத்தின் பொருளாமென்றும், சிவானந்தம் எனப்படும் பரமானந்தம் அடைதற்குரியதாய சீவான்மா என்பதொன்று மாயவாதச் சுருதிப்படி கெட்டொழியும் என்றும் கூறின்,

**ஆனந்தோ பிரம்ம ।**

"ஆனந்த குணமுடையது பிரமம்" என்றும்,

**ச ஏகோ பிரம்மண ஆனந்த:**

"அது பிரமத்தின் ஓர் ஆனந்தம்" என்றும்,

ரசோ வை ஸ:

அவர் (சிவபிரான்) ''ஆனந்த குணமுடையவர்'' என்றும்

அந்தர ஆத்மாநந்தமய :

''அந்தரான்மாவரிவர் ஆனந்த குண மிகுதியுடையர்'' என்றும்,

ரசம் லப்த்வாநந்தி பவதி

(பிரம) ஆனந்தத்தைச் (சீவான்மா) அடைந்து ஆனந்த மாயிருக்கின்ருன்'' என்றும்,

ஏ ஷஹ்யேவ ஆநந்தயாதி

''இவர் நிச்சயமாக (ஆன்மாவுக்கு) ஆனந்தத்தை விளைக் கின்ருர்'' என்றும்,

யதா வைசுகம் லபேத கரோதி|

''எப்போது ஒருவன் இன்பத்தை அடைகின்ருனே அப்போது (அவன் புண்ணியஞ்) செய்கின்ருன்'' என்றும்,

யோ வை பூமா தத்சுகம்|

''எது பூமா எனப்படுகின்றதோ, அது முடிவிறந்த ஆனந்தம்'' என்றும்,

யத்ரநாந்யத் பச்யதி நாந்யச் சுருணோதி
நாந்யத் விஜாநாதி சபூமா

''எங்கே மற்றொன்றும் காண்கிலனே, மற்றொன்றும் கேட்கிலனே, மற்றொன்றும் அறிகிலனே, அது முடிவிறந்த ஆனந்தம் (பூமா)'' என்றும் கூறும் அளவிறந்த சுருதிகளுக்கும்,

ந சிருணோதி ந கிருஹ்ணாதி நரஸ்யதி ந பச்யதி

''அவன் சிவானந்தத்தில் அமிழ்ந்தி (மற்றொன்றும்) கேட்கின்றலன், மணக்கின்றிலன், சுவைக்கின்றிலன், காண்கின்றிலன்'' என்றற்றொடக்கத்த ஆகம சுருதிகளுக்கும்,

ஆனந்தமயோப்யாசாத்

''சிவபெருமான் அப்பியாசத்தினுல் ஆனந்த குணமிகுதியினர்'' என்றும்,

தத்தேது வியபதேசாச்ச

''அவர் (ஆனந்தமாகிய) அதற்கு ஏதுவாகக் கூறப்படலானும்'' என்றும் கூறும் வேதாந்த சூத்திரங்களுக்கும் மாறுபடும். மேலும் இவற்றோடு மாறுபடாது இசைந்து, ''அந்தமிலா வானந்தம் அணிகொடில்லை கண்டேனே'' எனவும், ''அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன் யாது நீ பெற்றதொன்றென் பால்'' எனவும், ''கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே'' எனவும், ''உள்ளத்தேற லமுத

வொளிவெளி, கள்ளத்தேன் கடியேன் கவலைக் கடல், வெள்ளத் தேனுக் கெவ்வாறு விளைந்ததே'' எனவும் போதரும் பலப்பல திராவிட சுருதிகளுக்கும் முரணும் என்க.

ஆதலினாற் பரசுருதியும், அவற்றின் சாரமாகிய சித்தாந்தமும் கூறுமாறு, சீவன் கெட்டொழியா தென்பது உறுதியேயாம். மாயாவாதிகளும் ''நாம் சச்சிதானந்தமாய் இருக்கின்றோம்'' என்று கூறுவரேல், அது சுபகருமங்களுக்கு ஆகாத செவ்வாய்க்கிழமையை மங்களவாரம் என்பது போல வெறும் கூற்றாய் முடியும்; என்னை? சுருதிப்படி சிவபிரான் வாயிலாக ஆனந்தத்தை அடைதற்குரிய பெறுவானாகிய சீவான்மா ஆண்டில்லையாதலின் என்க.

சாந்தோக்கியம் 7.23.1-ற் காணப்படும். பூமா என்பது சிவனாரது முடிவிறந்த ஆனந்தத்தை மேலே உரைத்தவாறு, உணர்த்துவதே யாகவும், ஒரு பொருட் கொள்கையினர்; சர்வ தேசத்தினும், சர்வ காலத்தினும், சர்வ வஸ்துக்களினும் வியாபகமாகிய ஆன்மப் பிரமமென்னும் வஸ்துவே பூமா என்பப்படும் அந்தமில்லா ஆனந்த ரூபம்'' என்று பொருந்தாப் பொருள் கூறி, ஆனந்த குணத்தைப் பாக்கியாக லக்ஷணையினாற் செதுக்கி ஞான மாத்திர மாக்கி விடுகின்றனர், அவர் தமது ஆன்மப் பிரமத்தை ஆனந்த ரூப மென்று அலங்காரமாகக் கூறுவதெல்லாம் குருடன் ஒருவனைக் கமலக் கண்ணன் என்றமை போன்றதே ஆகும்.

## முதற் கூறு

### உயிர்கள் நுகரும் விடயங்களை அரனும் உணர்வன்.

(சூ. பொ.) விளக்கொளி கண்ணொளியோடு கலந்து அதனுடன் உருவத்தினும் கலந்தாலன்றி, அக்கண்ணானது உருவத்தைக் கண்டலின்று; அதுபோல, அறிவிக்க அறியும் இயல்பின வாகிய ஆன்மாக்களும் சிவபிரானது சிற்சத்தி தமது ஆன்ம சிற்சத்தியோடு கலந்து நின்று தம்மோடு உடன் சென்று விடயத்தினுங் கலந்து நின்றால் அறிவு விளங்கி, அவ்விடயத்தை அறிய வன்மையுடையனவே யன்றி, தாம் தனித்து நிற்கவும் மாட்டா, தனித்து ஒன்றை விடயீகரிக்கவும் மாட்டா; ஆகலின் அறிவு விளங்குதற்கு மாத்திரமன்றி விடயத்தைப் பற்றுதற்கும் சிவபிரான் ஆன்மாவோடு உடன் நிற்றல் இன்றியாமையாது வேண்டப்படும். ஆதலால், உயிர்கள் நுகரும் விடயங்களை முதல்வனும் உணர்வன் என்பதே துணிபு.

சிவபிரான் ஆன்மாவுக்குக் காட்டுதன் மாத்திரை அமையு மன்றி ஆன்மாக்களோடு உடனின்று அவ்வாறொப்பக் காண்டலும்

செய்யுமாயின், அவர் ஆன்மாக்கள் போலப் பந்தப்பட்டு விகாரி யாவர் என்பாரை மறுத்து அவர் அவ்வாறு ஒப்பக் கண்டும் விகாரி யாவார் அல்லர் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ) சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் என்னும் ஐவகை விடயங்களையும் உணருங்கால், ஆன்மாவானது, தன்னியல்பு இதுவென வேறு காணப்படுமாறின்றி அவ்விடயங்களே போல அது வதுவாய் விரவி நின்று அறியும் இயல்பினது; அஃது, அந்த ஐந்து விடயங்களையும் ஒருங்கே அறியமாட்டாது, ஒரோவொன்றாக அறிந்து அநுபவிக்கும். ஆயின், சதசத்தாய்ச் சார்ந்ததன் வண்ணமாய் ஆன்மாவைப் போலப் பலதிறப்படுமியல்பின்றி என்றும் ஓரியல்பின தாகிய சிவம் எல்லா ஆன்மாக்களுடைய எல்லா விடயங்களையும் ஏகமாய்ப் பொதுவகையால் ஒருங்கே உணர்ந்து, அவ்வான்மாக் களோடு உடன்நின்று சிறப்பு வகையாலும் உணரும்; அங்ஙனம் உடனின்று அறிதல் பற்றி ஆன்மாப் போலப் பரம் பொருளாகிய சிவபிரான் விகாரமெய்துவாரல்லர். ஆன்மா ஐம்புலன்களை உணர் வது போலவே, அது சிவத்தை அநுபவிக்கும் வீட்டு நிலையினும் முதல்வனும் அதனோடு உடனின்று தன்னையும் உணர்வன் என்று உணர்த்துகின்றது.

(வெ பொ.) சிவபிரான் திருவடிகளில் ''யான் என்று ஒரு முதல் இல்லை என்றுணர்ந்து முழுவதும் சிவமே'' என்று காணும் தெளிவுக் காட்சியினால் அச்சிவத்தோடு ஒற்றுமைப் பட்டு நின்று திருவடிகளை உணருங்கால், அச்சிவம் அவ்வான்மாவுக்குப் பரபோக மாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடையதாகும். ''ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்'' எனவும், ''ஒன்றியிருந்து நினைமின்க ளுந்தமக் கூனமில்லை'' எனவும், ''ஒல்லையாறி யுள்ள மொன்றி'' எனவும் போந்த திருவாக்குகளும் இக்கருத்தே பற்றியனவாம். ஆதலால் அங்ஙனம் ஆன்மா உணருங்கால், அவ்வான்ம ஞானத்தினிடத்து நீங்காதிருந்த அச்சிவம், கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவ்வான்ம அறிவோடு உடனின்று அறியாதிருக்குமோ? அங்ஙனம் அது அறியாதிருத்தல் அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பொருளுக்கு ஏதம் ஆகுமன்றே!

பெத்த காலத்தினும் முத்தி காலத்தினும் ஆன்மாவினால் விடயிக் கப்படும் விடயங்களைச் சிவபிரான் உடனின்று விடயிப்பர். பெத்த காலத்திற் சிவபிரான் ஆன்மாவாய் நின்று விடயத்தலின் விடயங் களால் வரும் இன்பத் துன்பங்கள் ஆன்மாவுக்காகுமன்றிச் சிவ பிரானுக்கு எய்தா; முத்தி காலத்தில் ஆன்மாவானது சிவபிரானாய் நின்று விடயித்தலின், அச்சிவ பிரானொழிந்த விடயங்களெல்லாம்

ஆன்மாவுக்காகாது சிவத்துக்கேயாம். இம்முறைமை நோக்கியன்றே உலகத்திலே ஒன்றனை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணமெனக் கருதல் வேண்டும் என்றும், அங்ஙனம் கருதாக்கால் குற்றம் எய்தும் என்றும் கொள்ளப்படுகின்றது.

## இரண்டாம் கூறு

**அரனை மறவாமல் அன்பு செய்வோன் அவன் திருவடியின்பம் நுகர்ந்து ஒற்றுமைப் படுவன்.**

(சூ. பொ.) ஒரு பொருளை அறிந்த மாத்திரத்தினுல் அதன் கண் இச்சை நிகழுமாறு போல, இச்சை நிகழ்ந்த மாத்திரத்திலே அப்பொருளைப் பெறுதல் கூடுமென்பது உலகத்தில் இல்லாமையால். ஆன்மாவானது இச்சையாகிய பத்தி மாத்திரத்தினுற் சீபாதத்தை அடையுமாறு எங்ஙனமெனின், சிவபிரான் ஆன்மாவில் விரவி நின்று அறிவித்த சிவானந்த விடயத்தை ஆன்மா அறிந்ததென்றும், அவ் வான்மாவை அதிட்டித்து நின்ற தாம் அறிந்ததென்றும் பகுத்தறிய வாராது இருவகை அறிவும் ஒன்றனைஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்துவரும் உபகாரத்தை அவ்வான்மா மறவாது பற்றி அவரது அருள்வழி நிற்றலால், அவரது சீபாதத்தை அடைதலாகிய சிவானந்தாநுபூதி நிட்டையை அடையும். அச்சிவ பிரான் உலகத்தார் போலன்றிப் பெத்த முத்தி இரண்டினும் வேறு நில்லாது அத்துவிதமாய் உடனின்று யார்யார் எதனை எதனைச் செய்கின்ருர் என்று அறிந்து அவ்வச் செய்கைக்கு வாய்ந்த பயனை அவ்வப் பொழுதே விளைவித்தும், காலாந்தரத்தில் விளைவித்தும் நிற்பவராதலான் என்பதாம்.

அன்பு, பத்தி என்பன இச்சை மீதூர்தல் எனப் பொருள்படும். மாயாவாதிகள் பத்தியாவது தங்கள் நிர்க்குணப்பிரம நிலைக்குச் சாதகமாகப் பிரமா, விட்டுணு, உருத்திரர் என்னும் சகுணமூர்த்தி களிடத்து வைக்கப்படும் அன்பென்று மயங்கிக் கொள்வர். இந்த மாயாவாதியின் நிர்க்குணப் பிரம நிலை சீவன் முத்தி நிலை. இதற்கு மேற்பட்டது அதிகார்முத்திநிலை; அதற்கு மேற்பட்டது போக முத்திநிலை; அதற்கு மேற்பட்டது இலயமுத்திநிலை; அதற்கு மேற்பட்டது பரமுத்தி நிலை; இந்தப் பரமுத்தி நிலையில் இச்சையாகிய அன்பு நிகழாதவிடத்துச் சிவானந்தாநுபவம் ஓர் காலும் சித்திக்காது.

ஒருவர்க்குச் சிவானந்தாநுபூதி உடம்பு நீங்கிய பின்னன்றி உடம்போடிருக்குங் காலும் எய்துமாயின், அஃது ஏனையர்க்குப் புலப்படாமை ஏதுக் கூறப்படுகின்றது.

(வெ. பொ.) ஆதித்தன் எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும் ஒளி மழுங்கிய கண்ணுக்கு மாலை இருட்டேயாம். ஒளி விளங்கிய கண்ணுக்கு நன்கு தோன்றும். அதுபோலச் சிவபெருமான் பெத்தர் முத்தரிடத்து அத்துவிதமாய் ஒப்ப நிற்பினும், பாசத்தாலாகிய ஏகதேச அறிவுடைய பெத்தர்க்குப் பாச ஞானமாய்த் தோன்றுவர். பாசப்பிணிப்புக்கு ஏதுவாகிய அபக்குவம் நீங்கித் தமது திருவருட் பார்வையினால் அன்பு செய்து தம்மை அறிதற்கியன்ற பக்குவமுடைய மல நீங்கிய முத்தர்க்குப் பாசத்தினாலாகிய ஏகதேச அறிவை நீக்கிப் பூரண அறிவு விரியச் செய்து அவரெதிரே விளங்கித் தோன்றுவர்; இஃது ஆயிரம் கிரணத்தையுடைய சூரியன் தனது கிரணம் தீண்டிப் பக்குவமெய்திய கமல மலருக்கு முன்னுளதாகிய கூம்புதலை மாற்றித் தன் போல அத்தாமரை மலரின் ஆயிரம் இதழும் அலரச் செய்வது போலாம்.

இதனால் முத்தி நிலையில் ஆன்மாவின் அறிவு நிகழுமாறும், அது சிவபிரானது அறிவாகிய அருட்கண்ணினால் எய்துமாறும் கூறப்பட்டன.

"பிறையார் சடையண்ணல்
மறையார் மருதனை
நிறையா வினைபவர்
குறையா ரின்பமே" - என்றும், (*நிறை என்றது வியாபகம்)

"சூன் முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தரனுக் கன்பர், ஆவின சிந்தை போல வலர்ந்தன கதிர்களெல்லாம்" என்றும், "ஞான வரம்பின் றலைநின்றார்" என்றும், "அப்பதியில் வாழ் பெரியோ ருள்ளம் போல, ஓங்கு நிலைத்தன்மையதாய்" என்றும் "திண்ணிய வுணர்விற் கொள்பவர்" என்றும் போந்த திருவாக்குகளால் முத்தர் அறிவு வியாபகமாமாறு தெளியப்படும்.

அன்பினால் தம்மை உணரும் முத்தருக்குப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துமாறு கூறப்படுகின்றது.

(வெ பொ.) கண்ணின்கணுளதாகிய இருளைச் சந்திரன் உடனாய் நின்று முறை முறையால் நீக்கி ஓட்டியவாறு போல, ஆன்மாவில் அநாதிக்கண்ணே நிலைபெற்ற சிவபெருமான் ஆன்மாவைத் தமது திருவடிக் கண்ணே சேர்த்துக் கொள்ளுதற்குளதாகிய இச்சை மிகுதியினால், அவ்வான்மாவின்கண் நிலைபெற்ற ஆணவ மலத்தை நீக்கி, காந்தமானது இரும்பைத் தன்கண்ணே இழுத்துக் கொண்டு தன் வசமாய்ப் பற்றச் செய்தல் போல, சிவபிரான் ஆன்மாவைத் தமது சிவானந்த சாகரத்துட் சேர்த்துத்

தம் வசமாய்ப் பற்றிக்கொண்டு நிற்குமாறு செய்தலால்; அவருக்கு எக்காலத்தினும் விகாரம் இல்லை, அவர் எல்லாத் தொழிலையும் தமது சந்நிதிக்கண்ணே சத்தி சங்கற்ப மாத்திரத்தால் ஓர் பாரமின்றி விளையாட்டுப் போலச் செய்கின்றார்.

முத்தி நிலையில் ஆன்மாவுக்கு அன்பு நிகழும் என்றும், அது சிவத்தின் அன்பினுல் எய்தும் என்றும் கூறப்பட்டது.

''உள்ளூறு மன்பர் மனத்தார் தாமே'' என்றும், ''ஆறு செஞ்சடை வைத்தவாட் போக்கியார்க்(கு) ஊறியூறி யுருகு மென் னுள்ளமே'' என்றும், ''ஆருத பேரன்பினவருள்ளங் குடிகொண்டு'' என்றும், ''உள்ளத்திற்றெளிகின்ற வன்பின் மெய்ம்மையுருவினையும் அவ்வன்பினுள்ளே மன்னும், வெள்ளைச் செஞ்சடைக் கற்றை நெற்றிச் செங்கண் விமலரையும்'' என்றும் போந்த திருவாக்குகளும் அவ்வன்பின் நிலைமையை இனிது புலப்படுத்துவன ஆகும்.

ஆன்மாவுக்குக் குணம் போல அநாதியாயுள்ள சகஜமலம் அவ்வான்மாவுக்கு வேருய் நீக்கற்பாலதென்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) வியாபக அறிவு விளங்கி ஆன்மாச் சிவபிரான் வசமாய் ஒன்றுபட்டுக் கூடுங்கால் முன்னுளதாய ஏகதேச அறிவு கெட்டுக் கூடுமாயின், குணமாகிய அறிவு கெடவே குணியாகிய ஆன்மாவும் கெட்டுப்போமாதலின், அது சிவத்தோடு ஒன்ற மாட்டாது; அறிவு கெடாது சிவத்தோடு கூடுமாயின் ஏகதேச அறிவு கெடாத போது வியாபக அறிவு விளங்குதலின்மையால் இரண்டு பொருளாய் நிற்றல் பற்றி ஒன்றுமாறின்றும். பின் எங்ஙனம் ஏகதேச அறிவும் சிவமும் கூடுமோ எனின் கூறுதும்; ஏகதேச அறிவைச் செய்யும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள் மாத்திரையே கெட்டொழிய, தன்னிடத்துளதாகிய கடின் குணம் நீங்கி நீரைச் சேர்ந்து ஒன்றுய்ப் போன உப்புப்போல், ஆன்மாவானது சிவானந்தத்தைத் தலைப்பட்டு அச்சிவத்துக்கு அடிமையாக, அச்சிவமும் ஆன்மாவை விட்டுப் பிரியாது இயைந்து நிற்கும்.

ஏனைப் பசுக்களும் பாசங்களும் சிவபிரானுக்குப் பொதுவியல் பானே அடிமையும் உடைமையுமாயிருப்பினும், ஈண்டு ஆன்மா அவனருளாலல்லது ஒன்றுஞ் செய்யானுக, அவ்வான்மாவைப் பிரியாது இயைந்து நிற்கும் இன்ப சிவத்தை அறிந்து இச்சித்து அநுபவிக்கும் உரிமை எய்திய ஆன்மா அச்சிவத்துக்குச் சிறப்பியல்பு பற்றி அடிமையாம். இதனுல் முத்தி நிலையில் ஆன்மாவின் கிரியை நிகழுமாறும், அது சிவத்தின் கிரியையினுல் எய்துமாறும் கூறப்பட்டன.

நான்காம், ஐந்தாம், ஆறும் சூத்திரங்களில் முறையே கூறப்பட்ட கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தையினும் ஆன்மா தன்னியல்பிற் கேடின்றி நிற்குமாறு கூறப்படுகின்றது.

(வெ. பொ.) பரிதியங் கடவுள் காலைப்போதில் முகிற் படலத்துள் மறைந்து, அம்முகிற் படலம் சிறிது நீங்கிய போது சங்கோசமாய்த் தன்னொளி ஏகதேசமாய்ச் சிறிது விளங்கி, பின்னர் அம்முகிற் படலம் பெரும் காற்றினால் அடியுண்டு அதனால் சத்தி மடங்கி விட்டு நீங்கிய போது, அவ்வொளி எங்கணும் விகாசமாய் விளங்கும் முறைமை போல, ஆன்மாவும் மலத்தினாற் கேவலாவத்தையில் மறைப்புண்டு, பின்பு தன்னறிவு சகலாவத்தையில் ஏகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரபஞ்ச விடயத்தை அறிந்து அதில் அழுந்தும்; பின்பு சிவபிரான் திருவருளால் அம்மல சத்தி பற்றறக் களைந்து அடக்கப்பட்ட போது, அவ்வறிவானது சுத்தாவத்தையில் வியாபகமாய் விளங்கிக் கப்பின்றிச் சிவானந்தத்தைத் தலைப்பட்டு அந்த ஞேய இன்ப சிவத்தில் அழுந்தும். சங்கோசம்—சுருக்கம். விகாசம்—விரிவு.

நதிநே பூஜயேத் தேவம் ராத்ரௌ நைவச நைவச |
சந்ததம் பூஜயேத் தேவம் திவாராத்ரௌச வர்ஜயேத் |

"பகல் எனப்படும் சகலாவத்தையிற் சிவனை வழிபடற்க; இரவு எனப்படும் கேவலாவத்தையில் அவரை வழிபடற்க; பின் கேவல சகலமொழிந்து எஞ்ஞான்றும் சுத்தாவத்தையில் அவரை வழிபடுக" என்று கூறிற்றுச் சிவாகமம்.

"(பூர்புவ: ஸ்வ:) தத் சவிதுர்வரேண்யம்
பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோயோ ந:
ப்ரசோதயாத்"

காயத்திரி மந்திரம்

(இருக்கு வேதம், 3, 62, 10; கிருஷ்ண யசுர்வேதம் 1, 5, 6, 4, சுக்கில யசுர் வேதம், 3, 6, 3; சாம வேதம் ஏழாவது பிரபாடகம், 10)

"எந்தச் சிவசூரியனது (ஞானேச்சாக்கிரியா) சத்தியாகிய ஒளியானது எங்கள் ஞானேச்சாக்கிரியா சத்திகளைச் செலுத்துகின்றதோ, அந்த முக்கியப் பொருளைத் (அஃதாவது அந்தப் பராசத்தியொளியை) தியானிக்கின்றோம்" என்பதே எல்லா வேதங்களின் சாரமாகிய காயத்திரிப் பெருமறையின் பொருளாம். இதற்கு உபப்பிருங்கணமாக,

சிவார்க்க சக்தி தீதியா சமர்த்திகிருதசித்திருசா |
சிவம் சக்தியாதிபி: சார்த்தம் புச்யத்யாத்மா கதாவிருதி :||

''சிவ சூரியனுடைய பராசத்தியொளியினால் வன்மையாக்கப் பட்ட ஞானக் கண்ணினால் ஆன்மாவானது சிவசத்தியோடியைந்து சிவத்தைப் பார்க்கின்றது. மலம் மறைந்து போயிற்று'' என்று சிவாகமம் அக்காயத்திரிப் பொருளை விளக்கிற்று.

காயத்திரியிலே தேவசவிதா எனப்பட்டவர் நாராயண சூரியனா? மற்றொன்றா? என்னும் ஆசங்கைகள் எழவொட்டாமல், தேவ் என்பது சிவனையும், சவிதா என்றது சூரியனையும் உணர்த்தும் என்பது போதரச் சிவார்க்கர் (அஃதாவது) சிவாதித்தன் என்று கூறப் பட்டது. படவே, நமது கண்களுக்கு விடயங்களைப் புலப்படச் செலுத்தும் புறத்துள்ள சூரியனுக்கு இயையச் சிவாகமம் ஒளி என்றும் சிவத்துக் கிரியைச் சத்தி என்றும் கூறிற்று. காயத்திரி சுருதியானது ஒரு மொழி கொண்டு ஒளியையும் பராசத்தியையும் ஒருங்கு உணர்த்துமாறு பர்க்கஸ் என்று கூறிற்று. சேதனா சேதனப் பிரபஞ்ச மனைத்தையும் பிரகாசிப்பித்தலாற் ப எனவும், அவற்றை இச்சிப்பித்த லால் ர எனவும், அவையனைத்தையும் ஒடுக்கித் தோற்றுதலால் க எனவும் பகுத்துப் பொருள் கோடற்கியன்ற பர்க்க சப்தம் சிவசத்தி யினின்று வேறுறாத சிவனுக்குப் பெயராகப் போந்ததென்று மைத்திராயணோபநிடதம் கூறுமாற்றால், பர்க்கஸ் என்றது ஞான இச்சாக்கிரியாரூப பராசத்திக்குப் பெயராயிற்று, பர்க்கஸ் என்றது தனி மொழியாய் ஒளிக்கும் பெயராமாறு தெளியப்படும்.

பிரசோதயாத் என்னும் மொழி செலுத்துக(கின்றார்) எனப் பொருள் படும். அஃதாவது ஆன்மாக்களாகிய எங்கள் ஞான இச்சாக் கிரியைகளை உண்ணின்று செலுத்துபவர் சிவசத்தி என்றே பெறப் படுகின்றது. எங்கே, ஆன்மாவைச் செலுத்துகின்றாரெனின், பெத்த காலத்திலே திரோதான சத்தியாய் நின்று பிரபஞ்ச விடயத்தை அறிந்து அநுபவிக்குமாறும், முத்திகாலத்திலே அருட்சத்தியாய் ஞேயப் பொருளாகிய சிவத்தை அறிந்து சிவாநுபவத்தை அநுபவிக்கு மாறுமாம் என்க.

பொது வகையாற் பெத்த காலத்திற் சிவசூரியனார் ஆன்மா வின் ஞான இச்சாக் கிரியைகளைச் செலுத்தி அறிவித்து நிற்றல் அதி சூக்கும பஞ்ச கிருத்தியமாம் என்றும், சிறப்பு வகையால் முத்தி காலத்திற் சிவசூரியன் ஆன்மாவின் ஞான இச்சாக் கிரியைகளைப் புறத்தே மற்றொன்றினுஞ் செல்ல வொட்டாது தடுத்து, ஞேயப் பொருளாகிய தம்மை உணருமாறே செலுத்தி, தாமும் அங்ஙனம் சென்று உணருங்கால், ஆன்ம சிற்சத்தியினிடத்துத் தாம் ஏகமாய் விட்டு நீங்காதவராய், அந்த ஞேய விடயத்தை உணர்வோராவர் இங்ஙனம் ஆன்மாவுக்குச் செய்யும் உபகாரம் பரநடனம் எனப்படும்.

ஆகவே சிவஞான போதத்திலே ஐந்தாம் சூத்திரத்தாலும், பதினேராம் சூத்திரத்தாலும் முறையே உரைக்கப்பட்ட அதிசூக்கும நடனமும், பர நடனமும் அந்தக் காயத்திரி மந்திரப் பொருள்.

**தஸ்ய தர்சயிதா சிவ :|**

''அந்த ஆன்மாவுக்குப் (பிரபஞ்ச சிவஞேய) விடயத்தைக் காட்டுபவரும் (உடனின்று) காண்பவரும் சிவனே'' என்று சிவஞான போத 11-ஞ் சூத்திரத்திலும் உணர்த்தப்பட்டது.

ஆதித்தனையும், ஒளியையும், பதார்த்தத்தையும் குருடன் அறியான்; அதுபோல, ஆசாரியரையும் சிவஞானத்தையும் மெய்ப் பொருளையும் அபக்குவன் அறியான். ஆதித்தன் குருடனுக்குக் காட்டாதது போல ஆசாரியர் அபக்குவனுக்கு அறிவிக்க மாட்டார். ஆதித்தனுக்குத் தன் கிரணங்களால் இருட்டை நீக்கிப் பதார்த்தங் களைக் கண்ணுக்குக் காட்டும் குணம் ஒன்று; தன்னைக் காட்டிப் பதார்த்தங்களையும் கிரணத்தையும் காட்டாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

கண்ணுக்குக் கிரணத்தைப் பொருந்திப் பதார்த்தங்களைக் காணும் குணம் ஒன்று; கண் ஆதித்தனைப் பொருந்திக் கிரணத்தை யும் பதார்த்தத்தையும் காணாத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு. ஆசாரியனுக்குத் திருவருண் ஞானத்தினுல் உயிர்க்கு அனைத் தையும் அறிவிக்கும் குணம் ஒன்று; சிவமாகிய ஞேயத்தைக் காட்டித் திருவருண் ஞானத்தையும், அதனுல் அறிந்த ஏனைய பொருளையும் காட்டாத குணம் ஒன்று. ஆக இரண்டு குணம் உண்டு. ஆன்மாவுக்குந் திருவருளைப் பொருந்தி அனைத்தையும் அறியும் குணம் ஒன்று; சிவமாகிய ஞேயத்தைப் பொருந்தி அருளையும் அதனுல் அறிந்த ஏனைய பொருளையும் காணுத குணம் ஒன்று; ஆக இரண்டு குணம் உண்டு.

சீவன் முத்தர்களுக்குச் சிவமேயன்றி ஏனைய பதார்த்தங்கள் விடயமாகாதிருக்கினும் முன்னைப் பழக்கம் பற்றி ஓரோவழி ஞானக் கிரியைகள் புறத்தே சென்று, அது வாயிலாக ஏகதேசவுணர்வு உண்டாயதேனும், ஒரு பொருள் காட்சிப்படவருமாயின் அந்தப் பொருள் காட்சிப்படும் போதே,

''எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப் பொருள் காண்பதறிவு'' — என்று உத்தர வேத

முடையார் கூறியவாறு, சிவஞானம் எவ்விடத்திலும் இருப்பு விடாமல் எல்லா பொருட்கு மிடம்கொடுத்து நிற்கு நிலையை மறவாத உணர்வால் அந்த ஞானப் பொருட்குள்ளாகச் சிவத்தைக் காண்பா ராதலின்; அவர்க்குப் பரமே பார்க்கப்படுவதன்றிப் புறத்துள்ள

பதார்த்தங்களைப் பார்க்க நேராதாம்; சிவயோகத் தானத் துரிய நிலைக்கண்ணே தம்மை வேறு காணுமாறின்றித் திருவருளிலே அடங்கி அருளாய் ஒழிந்திருக்கப் பெற்ற யோகிகள் தம்மிடத்து ஒரோவழிச் சுகதுக்கங்கள் வந்து தாக்கினும், அவர் பரமே பார்த்திருப்பாராதலின், எல்லாம் அந்தப் பரனிறைவிலடக்கிக் காண்பார்கள் என்று சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றமையாலன்றோ, என்ஞான்றும் சிவத்தினது பர நடனத்தைப் பார்க்குமியல்பினராய பகவானாகிய விட்டுணு மூர்த்தியானவர்,

**நிருத்த தர்சந சம்ஹிலாதாத் பகவாந் கமலாபதி :|**
**சிவாநந் தார்ணவே மக்நோ நச ஸஸ்மார வைஜகத் |**
**மமஜ்ஜ சுசிரம் காலம் சிவாநந்த மஹாம்புதௌ |**

அந்த நடேசரது நிருத்த தரிசன மகிழ்ச்சியினாற் சிவானந்த சமுத்திரத்திலே அமிழ்ந்தி, உலகத்தை உணர்ந்தாரில்லை; நெடுங் காலம் சிவானந்த மகோததியில் அமிழ்ந்திக் கிடந்தார்'' என்று சுவேதாரண்ணிய மான்மியமும்,

**ஸ்வயம் நிர்கத்ய பூலோகே புண்டரீகபுரம் பரம்**
**பிராப்ய திருஷ்ட்வா மஹாதேவம் தத்ர சித்ரூபிணம் சிவம் |**
**ஆனந்தா சுரூபரீதா க்ஷததாகத் கதவாக்கரி**
**சதுர் மாசாந்த் மஞ்ஞுத்வா ந கிஞ்சதபி மாதவ :|**

''பாற்கடலை விட்டு விட்டுணுவானவர் நிலவுலகின் மிக்கதாகிய அரிய சிதம்பரத் தலத்தை அடைந்து, (அகண்டாகார) ஞான ரூபியாகிய மகாதேவ நடேச மூர்த்தியைத் தரிசித்துக் கண்களினின்று ஆனந்த பாஷ்பம் பொழியவும், வாக்குத் தழுதழுக்கவும், நான்கு மாசம் வரையும் புறத்துள்ளதொன்றும் உணராது (போயினர்)'' என்றும்,

அங்கதற் பின் முறையாக வச்சுதன்பாற் கடலகன்று
நங்குழு வெல் லாஞ்சூழ நாவலந்தீ வகத்தணுகி
ஏங்கள் பிரா னருணடஞ் செய் யெல்லையிலாத் தில்லைதனில்
துங்க மணி மன்றுதனைத் தொழுதுபர வசமானான்,

சொல்லரிய பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனி லறிவிழந்து துணைவிழிகள் புனல்பெருகப்
பல்லுயிர்க்கு முயிராகும் பரமசிவ பூரணத்தின்
எல்லைதனிற் புக்கழுந்தி யெழுந்திலனீ ரிருதிங்கள்

இத்திறத்தா லவசமதா யீறுமுத னடுவுமிலா
அத்தனது திருவடிக்கீ ழடங்கியே யானையினான்
மெய்த்துரியங் கடந்தவுயிர் மீண்டுசாக் கிரத்தடையத்
தத்துவமெய் யுணர்ச்சியெலாந் தலைத்தலைவந் தீண்டினவால்.

''விட்டுணுவானவர் பாற்கடலை நீங்கிச் சம்புத் தீவிற் போய், எம்பெருமானுகிய சிவபெருமான் பரமானந்த தாண்டவஞ் செய்து அருளுகின்ற தில்லைப் பதியிலுள்ள கனக சபையை வணங்கி, பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சி, அறிவு செயலிழந்த விடத்துள தாம் அன்பு மீதூர்ந்து, அது காரணமாகக் கண்கள் இரண்டினின்றும் ஆனந்த பாஷ்பம் பொழிய, சர்வான்மாக்களுக்கும் அந்தரியாமியாகிய சிவபெருமானது அகண்டாகார நித்த வியாபக எல்லையைத் தலைப்பட்டு, அதிலழுந்தி, நான்கு மாசம் எழுந்தாரல்லர்'' என்று கந்த புராணமும் கூறுகின்றன.

திருவாலங்காட்டிலே ஊர்த்துவ தாண்டவமும், சுவேதாரண்ணியத்திற் புஜங்கலளித நடனமும், மதுராபுரியில் வியத்தியஸ்த தாண்டவமும், குடந்தைக் கீழ்க் கோட்டத்தினும் நாகேசுவராலயத்தினும் அம்பிகா தாண்டவமும், தேவதாருவனத்திற் கஜகும்பி நடனமும், பேரூரிற் பிரளய கால சங்கார தாண்டவமும், உத்தர கோச மங்கையிற் பரம ரகசிய ஆனந்த தாண்டவமும், திருக்கைலாசத்திலே திருநடனமும், சிதம்பரத்திற் பரமானந்த போத தாண்டவமுமாகக் கூறப்படும் நவதாண்டவங்களுள்ளே, இறுதியாகக் கூறப்பட்ட பரமானந்த போத தாண்டவத்தைத் தரிசித்து விட்டுணுவானவர் நடராசர் திருமுன்னே பரவசமாய் வீழ்ந்து நான்கு மாதம் எழுந்தாரல்லர் என்று ஈண்டுக் கூறப்பட்டதாம் என்க.

''உரனென்னுந் தோட்டியானோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து''.

''சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற், பெருக்க விழித்தாலலது, பேரின்ப மெய்துமோ'' என்று திருச்சிற்றம்பலநாடிகள் அருளியாங்கு, எப்பொருளினும் பற்றி நின்றும் ஒன்றினும் பற்றில்லாத திருவருளே பற்றுக விரவி நிற்பவனுய் ஏகதேசப் பழக்கம் தீர்ந்து வியாபக அறிவு விளங்கி நிற்கப் பெறுதலாகிய மெய்யுணர்வு எனப்படும் (திண்ணிய அறிவாகிய) தோட்டியினுல் ஐம்பொறிகளாகிய யானைகள் ஐந்தனையும் தத்தம் புலன்களின் மேற் செல்லாமல் காப்பவன் சத்திய லோக வைகுண்ட லோக முதலிய எல்லா உலகங்களினும் மிக்கதென்று கூறப்படும் பரப்பிரம சிவலோகம் எனப்படும் சோம லோகத்திற்கு ஓர் வித்தாம். அஃதாவது, அந்தச் சோம லோகத்தை ஒளி மார்க்கத்தினுலே சென்றடைந்து மீளப் பிறவியிற் செல்லான் என்று உத்தரவேதமுடையார் அருளிச் செய்தார். வேதமானது ஞானயோகத்தானமாகிய துரிய அருட் சிதம்பர வெல்லையில் நிலைத்தலால், சிவலோகம் கூறப்பட்டதாம் என்க. சிற்றின்ப சிறு

போகம் துய்த்தற்கு ஏகதேச அறிவு வேண்டப்படுமாறு போல, பேரின்ப பரபோகம் துய்த்தற்கு வியாபக அறிவு வேண்டற்பால தேயாம் என்க.

இது பற்றியே மெய்கண்ட தேவ நாயனுர் ''மலத்து இரித்துச் செல்லும் வரத்து'' என்றும், அருணந்தி சிவாசாரியர் ''விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்பன் மேலோன்'' என்றும். உமாபதி சிவாசாரியர் ''அதில்றி வடங்கி மன்னிட வியாபியாய வான்பயன் தோன்றும்'' என்றும் அருளிச் செய்தார்கள். சேக்கிழார் பெருமான் அவ்வியாபக அறிவை ''உரன்'' என்றும், ''திண்ணிய அறிவு'' என்றும், ''நிலைப்பட்ட மெய்யுணர்வு'' என்றும் பல பிரகாரமாக அருளிச் செய்தார்.

''உணர்வு நேர்பெற வருஞ்சிவபோகத்தை யொழிவின்றி யுருவின்கண் அணையுமைம்பொறி யளவினுமெளிவர வருளினை யெனப் போற்றி'' ''ஐம்புலன் வாயிலாக எய்தும் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அலைவு பட்டோடுமாறு, நிலைப் பட்ட மெய்யுணர்வானது தலைப்பட்டவிடத்து வரும் பரமானந்த சிவபோகத்தை, (இப்போது) இடையீடின்றி (உமது) சபா நடராஜ திருவுருவின் கண்ணே செல்லும் ஐம்புல அளவிற்கும் எளிதாக வாய்க்குமாறு அருளிச் செய்தீர்'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுர் திருவாய் மலர்ந்ததாகப் பெரிய புராணம் கூறுமாற்ருல், புறத்துள்ள ஐம்புலச் சிற்றின்பத்தைப் பேரின்பமாகக் காணும் நாயனுர் சிவானந்த போக தாண்டவம் புரியும் தம்பிரானுரையே தலைப்படப் பெற்ருல், அவரடையும் ஆனந்தத்தின் எல்லையை யார் அளவிட வல்லார்.''

''உரனுறு திருக்கூத்துள்ள மார்தரப் பருகி'' என்றும், வவ்விய மெய்யுணர்வின்கண் வருமானந்தக் கூத்து'' என்றும், ''உணர்வு நேர் பெற வருஞ் சிவ போகம்'' என்றும் கூறப்படலால், பரநடனுனந்தமும் சிவபர போகானந்தமும் ஒன்ருமென்பது பெறப் படுகின்றது. படவே, சிவஞான போதத்துப் பதினேராஞ் சூத்திரம் பரானந்த சிவ போக பரநடனத்திலே முற்றியவாறு காண்க

சிவபோகம் பத்தாஞ் சூத்திரத்தில் கூறப்பட்டவாறு, சிவ யோகத்திலே ஆன்மா அருளால் நிற்குங்கால் அதற்கு மேலாகிய ஞேயம் தோன்றும். அந்த ஞேயத்தைப் பொருந்தித் தான் தோன் ருமல் இரண்டறக் கலந்து நிற்பதுவே சிவ போகமாம். இதுவே இப் பதினேராஞ் சூத்திரத்திற் கூறப்பட்ட ஞானத்து ஞானம் எனப் படும். சமாதிப் பரமுத்தி நிலை. இது ஆன்ம லாபம் எனவும் படும்.

சிவபோக பரானந்தத்தை இப்போதே அடைந்து கொண்டிருப்பவர் சகஜ நிட்டையினர் எனப்படுவர்.

**தேஹபாதே சிவாநந்தம் சிவைகரசதாம் விரஜேத் |**

''தேகவியோக காலத்தில் (ஆன்மாவானது) சிவானந்தத்தோடு ஒரே இரசத்தை அடைக'' என்று இரௌரவாகமங் கூறுகின்றது. அங்ஙனமாகவும் ''முடிவிலாத சிவபோக முதிர்ந்து முறுகி விளைந்ததால்'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரையுற்றுக் கூறப்படலால், அச்சிவபோக நிலை அடைந்த சுந்தரமூர்த்தி நாயனார், திருநந்தி தேவர் முதலாயினோர் இங்கே சிவாகமம் கூறிய பிரகாரம் தேகவியோக மெய்திச் சிவைக்கியரசத்தை அடைந்தாராகக் கூறப்படாது, திருக்கைலாசம் என்னும் ஓர் தானத்தை அடைந்தாராகக் கூறப்படுகின்றதே என்று தடைநிகழ்த்தல் அடாது; மீளா அடிமைகளாகிய அவரெல்லாம் சிவாஞ்ஞையை என்ஞான்றும் சென்னியிற் கொண்டு இறைபணியில் ஒழுக வேண்டியவராதலின், அந்தச் சர்வஞ்ஞராகிய சிவபெருமான் யாது காரணம் பற்றியோ எவரையும் ஆங்காங்குத் திருத்தொண்டுகளில் நிறுத்துவார் எனக் கொள்க. இது வரம்பில் ஆட்சி வலியால் ஓங்கிய அமைச்சன் ஒருவன் தனது தலைநகரில் இருப்பினும், அன்றித் தலைவன் விருப்பப்படி ஒரு சிற்றூரில் இருந்தாலும், மற்றெங்கிருந்தாலும் அவனுக்கு ஓர்காலும் இன்பம் குறையாதிருத்தல் போலாம். இது பற்றியே,

சத்திய நிருவாணத்தாற் றனுகரணாதி தம்பாற்
பொத்திய ஒட்டின் ஒட்டாப் புளிம்பழம் போறல் தேற்றார்
அத்தினு லுடல்போம் என்பர் அதுபுரி முறையுந் தேற்றார்
பித்தென மயங்கி நிற்பார் பெரிதின் றுணர்ந்தார் போலும்!

இன்னணஞ் சகச நீட்டை எய்திய நந்திப் புத்தேள்
தன்னருட் குரவ னேவற் றலைநிற்கும் இயல்புந் தேறார்
அன்னவன் நூலை யாய்ந்தும் ஆக்கைநின் றுளதேன் முத்தி
மன்னலர் என்பர்; அன்னோர் மம்மர் நோய்க் கொழிவு முண்டே''

என்று கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத்துக் கூறியருளினார்.

**அதிகாரிணா மதிகார நிவிருத்தேர நந்தரம் முக்தி :|**

''(சிவோபாசனையில் முற்றிய) அதிகாரிகளுக்கு அதிகாரம் நிவிர்த்தியான பின்னர்த்தான் முத்தி'' என்று ஞான யோகத் தானத்தினராகிய சிவாத்துவித சைவ பாடியகாரர் கூறிய திருவாக்கியத்தினால், திருக்கைலாசத்தை அடைந்த திருத்தொண்டர்களுக்கு இறைபணித் திருத்தொண்டின் அதிகாரம் நீங்கிய பின்னர்த் தான் மேலே கூறிய இரௌரவாகம விதி அநுசரிக்கற்பாலதாம் என்பது பெறப்படுகின்றது.

இருக்கு வேதத்தினும் (1, 164, 39) சுவேதாசுவதரோபநிடதத்தினும் (4, 8) தைத்தரீயோபநிடதத்தினும் (2, 1, 3, 9) பிருக தாரணியோபநிடதத்தினும் (9, 4, 22, 5, 8, 11) சாந்தோக்கியோப நிடதத்தினும் (8, 1, 1; 1, 9, 1) கைவல்லியோப நிடதத்தினும், தைத்திரீய ஆரணியகத்தினும் (10, 1, 1) முண்டகோப நிடதத்தினும் (2, 2, 7) பிரசிநோப நிடதத்தினும் (5, 5) அதர்வசிகோப நிடதத்தினுமாக எல்லா உபநிடதங்களினும், அவ்வுபநிடதங்களை ஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த வேதாந்த சூத்திரத்தினும் (1, 3, 13, 3, 3, 38) தடத்தத்திலே நிறுத்திப் பிரதி பாதிக்கப்பட்ட ஞானயோகத் தானமாகிய சிதம்பரத் தகராகாய திருச்சிற்றம்பல நடனமானது வேதசாரமாய், வேதாந்தத் தெளிவாய்ப் போந்த சித்தாந்த சிவஞான போதத்திற் சொருபநிலை பற்றிப் பேசப்படுங்கால், "ஆட்டுவித்தாலா ரொருவ ராடாதாரே" என்று வாகீசப் பெருந்தகையார் அருளியவாறு, ஆன்மாவைச் சிவஞேய விடயத்திற் செல்லுமாறு ஆட்டி, ஆட்டுதல் மாத்திரத்தோடமையாது, அவ்வான்மாவோடு உடனாய் நின்று ஆடியும் நிற்றலாகிய பரநடன நிலையை நோக்குந்தோறும், நோக்குந்தோறும் கரும்பிரசம், தேன், பால், கனி, அமுதம், கற்கண்டு, கருப்புக்கட்டி என்னும் சுவைப் பொருள்களையெல்லாம் கலந்த விடத்துளதாகிய சுவை இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராமை போல, சொல்லுதற்கரிய பேரின்பம் ஆன்மாவுக்கு எய்தும் என்க.

இங்ஙனம் ஆன்மா எனப்படும் மன்றிலே பரநடனஞ் செய்கின்றார் என்பது "மதி கங்கை விதியாள னென்னுயிர் மேல் விளையாடல் விடுத்தானே" என்று திருநாவுக்கரசு நாயனார் திருப்பழனத் தேவாரச் சுருதியிலே கூறியிருத்தலினாலும் புலப்படும். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும் "நின்தயங்கி ஆடலே நினைப்பதே நியமமே" என்று அருளுமாற்றால், சிவஞான போதம் கூறுமாறு, சிவபோக பரநடனத்திலே எஞ்ஞான்றும் அவர் கருத்து ஒழுகிக் கொண்டிருந்தமை புலப்படும்.

"புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கு மருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்கு ளானந்தத் தமுதூறு முள்ளத்தே" — என்றதனால்

திருமூல நாயனார் பரநடனம் தரிசனஞ் செய்வோர்க்கு எய்தும் மெய்ப்பாடு இது என்று விளக்கினார்.

இங்ஙனம் எப்போதும் திருக்கூத்தைக் கண்டு கொண்டிருக்கும் பரமுத்தருடைய தானமும் சிதம்பரமேயாம். அது,

"ஆரண வுருவார் தில்லை யம்பல மெய்தப் பெற்றோர்
ஒருணர் வாவரென்றும் ஒன்றல ரொன்று ரல்லர்
காரண ராகா ரொத்த கருத்திலர் நிருத்த வின்பப்
பூரண ரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே"

என்னும் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திருவாக்கினுல் உணரப் படும்.

தாமரைப் பூவை அடிக்கடி தீண்டியும், அதனோடு கலந் திருந்தும் அந்தத் தாமரைப் பூவின் தேனை பருகமாட்டாத மண்டூகங்கள் போலவும், பாற் சமுத்திரத்துள் வாழும் மீன்கள் பாலை இருந்த விடத்திருந்து நிறையப் பருக அறியாமல் வேறு பலவற்றை உண்டல் போலவும், உறியின் கண்ணே தூங்கும் பால் நிறைந்த பானை மேலிருக்கும் பூனை அதனைப் பருக அறியாது சுவரின் கண்ணே ஊரும் கரப்புப் பூச்சியை விரும்பிப் பாய்ந்து பாற் பானையையும் தகர்த்து அப்பூச்சியினாலும் தன் வயிறு நிறையப் பெறாது போதல் போலவும், நடராசப் பெருமானது திருமேனியை எஞ்ஞான்றும் கண்டும் வழி பட்டும் வரும் பேறு பெற்றும், அவரது பரநடனானந்தத்தை அவர் அருளிய வேத சிவாகம நெறியானே தலைப்பட்டு நுகர அறியாது, புறச் சமய மாயாவாத நெறியிற் சிலர் தலைப்படுதல் நெறியாமோ? அங்ஙனம் தலைப்பட்டவர்க்கு இறுதியில் அவர் அளித்த பயனை அறிந் தவர் பின்னும் அக்குழியில் எப்போதேனும் இறங்க முயல்வாரோ? எவ்வளவு திருப்பித் திருப்பி வெள்ளிடை மலை போல விளங்க எடுத் துரைப்பினும், அதி பரிபக்குவமுடையார்க்கே நன்னெறி புலப்படும். இது பற்றியே, "உண்மையாஞ் சிவானுபவ ஞானயோக மருந்திடினு முத்தமர்க்கே யாகும்" என்றார் பெரியோர்.

இராப்போதிலே போய்த் தத்தம் கூத்துக்களைக் கண்ணினாற் பார்த்து மகிழ்தல் எந்தெந்தத் தேசத்தினும் உள்ள எந்தெந்தப் பிரி வினராகிய அஞ்ஞானிகளெல்லோர்க்கும் ஒப்ப முடிந்த பக்கமேயாக, சிவபரானந்தத் திருக் கூத்தை எக்காலத்தினும் இடையீடின்றி உண் ணேக்கி மகிழ்தல் சிவஞானிகளுக்கு மட்டுமே இயலுவதொன்றாம்.

## பதினோராஞ் சூத்திரத் தொகைப் பொருள்

ஏகனாகி இறை பணி நிற்கும் ஞானிகளுக்கு அவன்றன் ஞான இச்சாக் கிரியைகள் விடயித்தற்கு விடய மொன்றுள தென்று உணர்த்துதல் வாயிலாகச் சிவப்பேறு எனப்படும் ஆன்ம லாபம் கூறப் படுகின்றதென்றும், சிவ பாவனையயின்றி அமையாத ஆன்மா வானது ஒரு விடயத்தை அறியுமிடத்தும் சிவபிரானது சிற்சத்தி ஆன்மாவின் சிற்சத்தி எனத் தானெனப் பேதமின்றி உடனாய்க் கலந்து நிற்ப; சிவபிரானும் ஆன்மாவிற் கலந்து நின்று அறிவித்த

விடயத்தை ஆன்மா அறிந்ததென்றும், ஆன்மாவை அதிட்டித்து நின்றதாம் அறிந்ததென்றும் பிரித்தறியப்படுமாறின்றி இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே விடயிக்குமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தத்தினும் முத்தியினும் வேற்றுமையின்றி இருக்கும் என்றும், ஆன்மாவாகிய ஒரு பொருள் சிவமாகிய மற்றொன்றுதல் எங்ஙனம் என்னும் ஐயம் நீக்கப் போந்தமையால் அவ்விரு பொருட்கும் உளதாகிய சம்பந்த விசேடம் உணர்த்துதலே அத்துவிதம் என்னும் சொற்குப் பொருளாம் என்றும், சிவபிரான் ஆன்மாவுக்குக் காட்டியும் அதனோடு கலந்து காண்டலும் செய்யுமாற்றால் அவர் விகாரியாவாரல்லர் என்றும், ஆன்மா சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவரது திருவடிகளை உணரவே, அச்சிவம் பரபோகமாய் மேன்மேலும் விளையும் என்றும், பெத்த காலத்திற் சிவபிரான் ஆன்மாவாய் நின்று விடயித்தலின், விடயங்களால் வரும் இன்பத் துன்பங்கள் ஆன்மாவுக்கேயாம் என்றும், முத்தி காலத்தில் ஆன்மாவானது சிவபிரானாய் நின்று விடயித்தலின் அவ்வின்பத் துன்பங்கள் ஆன்மாவுக்காகா என்றும், சிவபெருமான் ஆன்மாவுக்குக் காட்டியும் கண்டும் நிற்கும் உபகாரத்தை அவ்வான்மா மறவாது உறுதியாய்ப் பற்றித் திருவருள் வழி நிற்பின் அதற்குச் சிவானந்தாநுபூதி நிட்டை எய்தும் என்றும், பரமுத்தி நிலையில் அன்பு நிகழாதாயின் சிவானந்தாநுபவம் எய்தாது என்றும், சிவபிரான் பெத்தர் முத்தர் என்னும் இரு திறத்தாரிடத்தும் அத்துவிதமாய் ஒப்ப நிற்பினும் பக்குவமுடையார் அறிவையே பூரண அறிவாக விரியச் செய்வர் என்றும், ஆன்மாவின் கண்ணேயுள்ள ஆணவ மூலத்தை நீக்கிச் சிவானந்த சாகரத்துட் படியச் செய்து தம் வசமாக்கும் இச்செயலை அவர் சங்கற்ப மாத்திரத்தினால் விளையாட்டுப் போலச் செய்கின்றார் என்றும், ஆன்மாவானது ஆணவ முதலிய மும்மல மாத்திரையே கெட்டொழியச் சிவானந்தத்தைத் தலைப்பட்டுச் சிவத்துக்கு அடிமையாம் என்றும், ஆன்மா மலத்தினாற் கேவலாவத்தையையும், கலாதி தத்துவங்களாற் சகலாவத்தையையும் அடைந்து, சிவபிரான் திருவருளால் சுத்தாவத்தையை அடைந்து வியாபகமாய் விளங்கிச் சிவானந்தத்தைத் தலைப்படும் என்றும் உணர்த்தப்பட்டதாம் என்க.

அணைந்தோரியல்பு

**பன்னிரண்டாஞ் சூத்திரம்**

**"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா**
**அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ**
**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயந் தானும் அரனெனத் தொழுமே".**

(இ.ள்) செம்மலர் = செந்தாமரை மலர் போலும்; நோன் தாள் = வலிய பாதத்தை; சேரல் ஒட்டா = கூடவொட்டாத; அம் மலம் கழீஇ = அந்த (மூன்று) மலங்களையும் ஞான நீரால் போக்கி; அன்பரொடு மரீஇ = சிவபத்தரோடு கூடி, மாலற நேயம் மலிந்தவர் வேடமும் = மயக்கமறச் (சிவபெருமானிடத்து) அன்பு மிகுந்துள்ளவருடைய திருவேடத்தையும்; ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே = சிவாலயத்தையும் சிவமெனக் கண்டு வழிபடுவான் (சீவன்முத்தன்)

(க.ரை) **அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாக் கண்டு வழிபடுமாறு உணர்த்துகின்றது.**

(க. பொ.) அயரா அன்பினாற் சிவத்தை அணைந்த முத்தராயினோர்க்குச் சீவன் முத்தி நிலையிலே அவர் அறிவும் இச்சையும் கிரியையும் ஒரோ வழிப் புறத்துச் செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவை என்று உணர்த்துதல் வாயிலாக, வாக்கு மனாதீதமாய் அன்பினால் ஆன்மாவானது வழிபடுமாறு நின்ற சிவபிரானை வாக்கு மன கோசரமாமாறு அவரைத் தெளியக் கண்டு வழிபடுமாறு உணர்த்துகின்றது இச்சூத்திரம் என்பதாம்.

(சூ. பி. பொ) அயரா அன்பின் அரன்கழல் அடைந்த சீவன் முத்தன் செங்கமல மலர் போல விரிந்து விளங்கிய சிவபிரான் திருவடியை அணைய உடன்படாது தடுத்து மறதியைச் செய்விக்கும் மும்மல அழுக்கை அருண்ஞான நீராற் கழுவுக! தன்னைப் போல அயரா அன்பினாற் சிவானந்தத்தைத் தலைப்பட்ட மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடுக! அவ்வாறு கழுவப்பட்டு ஆணவ மலமயக்கம் ஒழியுமாறு அன்பு செய்யும் சிவஞானிகளை மருவி, அன்பு மிக்குடைய அவர் தம் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவபெருமானே எனக் கண்டு வழிபடுக என்பதாம்.

''அம்மலம் கழுவி'' என்றமையால் முத்தரது அறிவு செல்லும் இடமும், ''மெய்ஞ்ஞானிகளோடு கூடி என்றமையால் அவர் தம் இச்சை செல்லும் இடமும், ''வேடமும் ஆலயந்தானும் அரனெனத் தொழும் என்றமையால் அவர் தம் கிரியை நிகழும் இடமும் கூறப்பட்டன. இதனாற் சீவன் முத்தருடைய அறிவும் விழைவும், செயலும் ஏனை இடங்களைப் பற்றா என்பது உணரப்படும். செல்வப் பெருக்கமுடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பை நோயின்றி வளரச் செய்யும் மருந்துமாவது போல, இவ்வழிபாடு மலவாதனை சிறிதும் தாக்காது சிவானந்தம் மேன்மேல் வளரச் செய்யும் சாதகமும் என்பது உணர்க.

## மூதந் கூறு

**மும்மலங்களையும் களைக.**

(சூ. பொ.) ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களும் மெய்யுணர்ந்து நிட்டை கூடினோரிடத்தும் யாதானுமோர் வழியால் நுழைந்து, அவரது மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய விபரீதவுணர்வை மேற்படுத்தி விடுமாதலின், அவை அவர்க்கு ஆகாவாதலான், ஆணவ முதலிய மலங்கள் மூன்றையும் களைக என்பதாம்.

அம்மும்மலங்களும் அஞ்ஞானத்திற்கேதுவாய் வந்து நுழையும் என்றும், அங்ஙனம் நுழைதல் முத்தர்க்கு ஆகாதென்றும் கூறப் படுகின்றது.

(வெ. பொ.) புண்ணிய பாவப் பயன்களாயும், அவற்றின் காரணமாயுமுள்ள விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்துகின்ற இக்கன்ம மலமும், பிருதிவி முதல் அசுத்த மாயா தத்துவம் இறுதி யாய்க் காணப்படுகின்ற இம்மாயா மலமும், சுட்டி அறிவதாய விபரீத உணர்வை உண்டாக்கும் இவ்வாணவ மலமுமாகிய இந்த மூன்று மலங்களும் மெய்ஞ்ஞானிகளுக்கு ஆகாவாதலின் அவற்றை விடுத்தொழிதல் வேண்டும்.

எல்லா மலங்களையும் பற்றறத் துடைத்து உண்மை ஞானத்தை அடைந்த மெய்ஞ்ஞானிகளுக்கு உடம்பு உள்ளளவும் பிராரத்தவினை அவ்வுடம்பை ஒட்டி நிற்றலான், அஃது அவர்க்கு ஒரோவிடத்து வாதனை வயத்தினால் இங்குளி வாங்கும் கலம் போல் வந்து தாக்குதலால், அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம். அவை உளவாகவே, பரமே பார்த்திருப்போர்க்குப் பிருதிவி முதல் மாயாதத்துவ மிறுதியாகிய ஏகதேசப் பொருள் புலப்படும்; அவை புலப்படவே, அவற்றைச் சுட்டி உணர்வதாகிய விபரீத உணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழப்படுத்திப் பிறவிக்கு வித்தாகும். இங்ஙனம் அறிவு சோரும் சமயம் பார்த்து அம்மும்மலமும் இம்முறை யானே வந்து தலைப்பட்டுச் சிவபோகப் பெரு வாழ்வை இழப்பிக்கு மாதலின், அவை மெய்ஞ்ஞானிக்கு ஆகா எனப்பட்டது. விபரீத உணர்வாகிய அஞ்ஞானம் ஏகதேசக் காட்சியாலாயதெனவும், அவ் விருப்பு வெறுப்புக்கள் பிராரத்த வினையை அநுபவிக்குங்கால் எய்திய தற்போதத்தினலாயன வெனவும் அறிந்து, அங்ஙனம் செல்வதாகிய தற்போதம் முனையாவண்ணம் ஒங்குணர்வாகிய சிவஞானத்துள் அடங்கி, சிவாநுபவம் சுவாநுபூதிக மாம்படி ஞான நிலையில்

உறைத்து நிற்றல்தான் அம்மும்மலங்களும் மேன்மேல் முறுக வொட்டாது, அவற்றைத் தோன்றும் போதே துடைத்து விடுதற்கு வாயிலாம் என்றபடி.

## இரண்டாம் கூறு

**சிவஞானிகளுடனே கூடுக.**

(சு. பொ.) இங்கே சிவஞானிகள் எனப்பட்டார் பத்தியினுன் மறவாது சிவனருள் வழிப்பட்டு நின்று, சிவத்தை அடைந்த சீவன் முத்தராகிய சிவ பத்தரேயாவர். ஆணவ முதலிய மும்மலங்களும் அஞ்ஞானமாகிய விபரீத உணர்வைச் செய்வது இலக்கு வாய்த்த போது மட்டுமேயாம்; சிவபத்தரல்லாதார் இலக்கு வாயாத விடத்தும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களாலும் தம்மோடொப்ப விபரீத உணர்வைச் செலுத்தியே விடுவாராதலின், அம்மலங்களினும் கொடியவராகிய அவரை விட்டொழித்துச் சிவ பத்தர்களோடு இணங்குக என்பதாம். வெறுப்பும் விருப்பும் ஒழித்துப் பல்லுயிரையும் குழந்தைகள் என ஒப்ப நோக்கும் செல்வக் கடவுட் டொண்டர்க்கு இங்ஙனம் அவ பத்தர்களிடத்து வெறுப்பும், சிவ பத்தர்களிடத்து விருப்பும் நிகழ வேண்டினமைக்குக் காரணம் இதுவேயாம்.

சிவ பத்தியில்லாதாரோடு இணங்காதிருத்தல் ஒன்று மாத்திரம் போதாது என்றும், சிவ பத்தர்களோடே இணங்குதல் வேண்டும் என்றும் கூறப்படுகின்றது.

(வெ. பொ) மும்மலங்களும் நீங்கி, சிவபிரான் அத்துவிதமாய் நின்று காட்டியும், கண்டும் உபகரிக்கும் பரநடனப் பெருங்கருணையை மறவாது கடைபிடிக்கும் சிவஞானக் கண்ணுடைய மெய்ஞ்ஞானிகள் (அச்சிவானந்த நிறைவை இழப்பித்து, வியாபக அறிவைக் கெடுத்து, ஏகதேசமாகிய, விபரீத உணர்வைக் கொடுத்து, பிறவிக் குழியில் வீழ்த்துதலாகிய தீ நெறிக் கண்ணே செலுத்தித் துயருறுத்தும் அவபத்தர் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்று வந்த சேர்க்கை அறும் பொருட்டு), அம்மறதியை மாற்றி, ஞானக் கண்ணை விளக்கி, பிறவிக்குழியினின்றும் எடுத்து, விபரீத உணர்வைக் கெடுத்து, ஏகதேச அறிவைத் தடுத்து, வியாபக அறிவைக் கொடுத்து சிவானந்த நிறைவிலே விடுத்தலாகிய நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்கும் சிவ பத்தர் கூற்றிலே பேரன்புடையராய், அவ்வன்பு வாயிலாக விளங்கும் சிவஞானக் கண்ணினுல் அந்தச் சிவபோக நிலையைப் பற்றி உணரப் பெற்றவரை எல்லா அநர்த்தங்களுக்கும் மூலமாய் வரும் பிராரத்த வினை வாதியாதென்பதாம்.

சிவஞானக் கண்ணினுற் சிவத்தைத் தரிசித்து உணரப் பெற்ற தவமொன்றே மெய்த்தவமாம்; இஃதொழிந்த தவங்களெல்லாம் மெய்யாதலின்றி அவமாகிய மலநடையாய்ப் போதலிற் பொய்த் தவங்களாம்.

சிவ பத்தர்களிடத்து அன்பு செய்து, அவர் தம் மனம் சொல் செய்கையின் வழி நிற்போர்க்கு உலகியலுணர்வு மாறிச் சிவாநுபூதி யுணர்வே மேம்பட்டு நிகழும். அங்ஙனம் நிகழவே, பௌதீக உடம்பு உள்ளளவும் நீங்காதுள்ள பிராரத்த வினைகள் அவர்க்குப் புசிப்பாதல் செல்லாமையால், அவை அவரை வாதிக்கமாட்டா; அவை வாதியா தொழியவே அவபத்தர் திறத்துச் சேர்வை பற்றறக் கழிந்து விடும். வீட்டுணர்வை நிலைபெறுத்தும் சிவபத்தர்களோடு இணங்கினலன்றிப் பண்டு தொட்டுப் பயின்று வந்த தீயோரது இணக்கம் அருது என்றோர்க. இது பற்றியே மாணிக்கவாசகசுவாமிகள் ''அடியேனடு வுளிரு வீருமிருப்பதானு லடியேனுன், அடியார் நடுவுளிருக்கு மருளைப் புரியாய்'' என்றருளிச் செய்தார். சிவபோகச் செல்வத்தை ஐம்புல வேடர் கொள்ளை கொள்ள விடாது தடுத்தற்கு வேலியாயுள்ளார் சிவானுபவ சிவ பத்தர்களே யாவர் என்க.

## மூன்ரும் கூறு

**சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.**

(சூ. பொ.) சேதனப் பொருள் அசேதனப் பொருள் எல்லா வற்றினும் சிவபெருமான் கலந்து வியாபகமாய் நிற்றல் பற்றி, ஸ்ரீருத்திரம், நின்ற திருத்தாண்டகம் முதலியன பகுப்பில்லாமல் சேதன அசேதனப் பொருள்களையெல்லாம் தனித்தனி எடுத்தோதி வழிபாடு கூறுதலால், மெய்ஞ்ஞானிகள் பகுப்பின்றி எங்கணும் பரமேசுவரர் உளர் எனக் காண்டல் பொருத்தமேயாயினும், காமக் கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை, சாந்து, ஆபரணம், குங்குமம் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல, மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரத்தினுலே இன்பஞ் செய்தலினனும், இறைவன் சிவ பத்தரது திருவேடம் சிவாலயத்துச் சிவலிங்கம் என்னும் இரண்டினிடத்தினும் தயிரில் நெய் போல விளங்கி, ஏனைய இடங்களிற் பாலின் நெய் போல வெளிப்படாது நிற்றலானும், மெய்ஞ்ஞானிகளாகிய பத்தரது திருவேடத்தையும் சிவலிங்கத்தையும் சிவபெருமான் எனக் கண்டு வழிபடுக என விதிக்கப்பட்டது.

சிவபிரான் சிவவேடத்தில் விளங்கியும் ஏனைய இடங்களில் விளங்காதும் இருத்தல் விளக்கப்படுகிறது.

(வெ. பொ.) வாக்கு மனாதீதமாய் நின்ற பரம் பொருளாகிய சிவபிரான் உலகத்தார் தம்மை அறியுமாறு கருணை செய்து தமது திருவேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய தமது வடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங்கங்கே அறிவு விளக்குதலானும், அண்டத்தினுமாக ஓர் குறியின் கண் வைத்து அவரைக் கூடுஞ் செயலானும், குறியிறந்து நின்ற தம்மை உள்ளவாறு உணரும் அன்பராகிய அவர்களிடத்துத்- தயிரின் கண்ணதாகிய நெய் போல விளங்கித் தோன்றுந் தன்மையானும் திருவேடம் உடையார் சிவமேயாவர். எனவே வேடம், பாவனை, செயல், தன்மை என்னும் நான்கினாலும் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாவராதலால் அவர் சிவன் என வழிபடற்பாலர். பாசக் கட்டுடைய ஏனையோர் மாட்டு அச்சிவபெருமான் பாலில் நெய்போல விளங்காது நிற்றலால் அவரது பற்று விட்டொழிதற்பாலதேயாம்.

வேட முதலிய நான்குமுடைய சங்கம வேடத்தினிடத்து எக்காலமும் சிவபிரான் பிரகாசமாய் நிற்பர். சிவ பத்தர்களுக்குக் கூறிய இயல்பில்லாத சிவலிங்கத்தினும் சிவபிரான் எங்ஙனம் பிரகாசிக்கின்றார் என உணர்த்தப்படுகின்றது.

(வெ. பொ) ஆன்மாக்களுக்குப் புத்தி முத்தி அளிக்கும் பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவாகிய அருவுருவச் சிவலிங்க முதலிய திருமேனிகளைச் சரியையாளர்கள் பகுத்தறிவில்லாது சிவ மெனக் கண்டு வழிபடுவர். அவர்களுக்குச் சிவன் அங்கே வெளிப் படாது நின்று அருளுவர். கிரியையாளர்கள் ஈசான முதலிய மந்திரங் களினாலே சிவபிரான் திருவுருக் கொண்டார் என்றறிந்து மந்திர நியாசத்தினால் வழிபடுங்கால், அவர்களுக்கு அவர் கடைந்த போது தோன்றும் அக்கினி போல விரும்பிய வடிவாய் அவ்வத் திருமேனி களிலே அவ்வப்போது தோன்றி நின்று அருளுவர்.

யோகிகளுடைய இதயம் எங்கும் வியாபித்திருக்கும் சிவ பெருமான் இந்தச் சிவலிங்கத் திருமேனியினும் இருந்து பூசை கொண்டருளுவார் என்று யோகிகள் சாத்திய மந்திரங்களினாலே வழிபடுங்கால், அவர்களுக்குச் சிவபெருமான் அவ்வம்மந்திரங்கள் வாயிலாக, அவர்கள் விரும்பிய வடிவமாய் அவ்வத் திருமேனிகளில் கறந்த விடத்துத் தோன்றும் பால் போல அவ்வப்போது தோன்றி நின்று அருளுவர்.

ஞானிகள் அன்பு மாத்திரத்தினாலே சிவபெருமானிடத்தில் வழிபாடு செய்வார்கள். சிவபெருமான் அவர்களுக்குக் கன்றை நினைந்த தலையீற்றுப் பசுவின் முலைப்பால் போலக் கருணை மிகுதியினால் அவ்வன்பே தாமாகி எப்பொழுதும் வெளிப்பட்டு நின்று அருளுவர்.

## நான்காம் கூறு

**வழிபடாமையை ஒழிக.**

(சூ. பொ) மும்மலங்களைக் களைதலும் சிவஞானிகளுடனே கூடுதலும், சிவனடியாரோடிணங்குதலும், சிவலிங்கத்தைச் சிவனெனக் கண்டு வழிபடுதலுமாகிய இவை சீவன் முத்தர்க்கு இயல்பாக உள்ள இலக்கணமாய் அமைந்தவிடத்தும், நரம்பு, நாடி, இறைச்சி, என்பு முதலிய தாதுக்களின் வேற்றுமையின்றி, அதுவது தானாய் வருகின்ற ஆன்மாவானது அந்நரம்பு முதலியவற்றுக்கு வேறுமாயினாற் போல, உயிர்க்குயிராகிய சிவபெருமான் சேதனா சேதனப் பிரபஞ்சமனைத்தினும் அதுவது தாமாயும், அல்லாராயும் நிற்பராகலான், கலப்புப் பற்றி அபேதமாய்க் காணும் காட்சி பற்றி எய்திய வழிபாடு பொருட்டன்மையாற் பேதமாய் நிற்றலைக் காணுமிடத்து எய்தாமையின், சிவனடியாரையும் சிவலிங்கத்தையும் சிவமெனக் கண்டு வழிபடுக என விதிக்கப்பட்டது என்பதாம்.

சிவபிரானுக்கு எப்பொருட் கண்ணும், ஒன்றாயும், வேறாயும், உடனாயும் நிற்குமியல்பு உளதாதலின், சிவவேடம் சிவலிங்கம் என்பவற்றை வழிபடுக என்றமைக்குக் காரணம் கூறப்படுகின்றது:-

(வெ. பொ) சிவபெருமான் உயிர்ப் பொருள் உயிரில் பொருள் எங்கணும் நிற்கு நிலையை உணரப் பெற்றோர்க்கு, இருள் வெளி போல அதுவும், இதுவும் என்று கூறப்படும் பேத நிலையினரும் அல்லராய் பொன்னும் பணியும் போல அதுவே இது என்று கூறப்படும் அபேத நிலையினரும் அல்லராய், குணகுணி போல அதுவே இது என்று கூறப்படும் பேதாபேத நிலையினருமல்லராய், அம்மூன்றற்கும் பொதுமையாய்க் கண்ணொளியும், ஆன்ம போதமும் போல் அத்துவித நிலையினராதலின் சட சித்துக்களெல்லாம் சிவ வடிவேயாமாயினும், அவற்றுள் அன்பு விளையுமிடத்தில் வழிபடல் வேண்டும் என்பது.

பசுவின் வடிவமெங்கணும் காணப்படாது உள்ள பால் கன்றை நினைந்த தலையீற்றுப் பசு முலையின் கண்ணே விம்மி ஒழுகுவது போல, எப்போதும் வெளிப்பட்டருளுவதாகி அடிப்பட்டு வரும் அன்பானது திருக்கோயிலுள்ளிருக்கும் சிவலிங்கத் திருமேனியிலன்றி விளையாமையால், சிவலிங்கத்திற் செய்யும் வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறுத்துமென்றறியற்பாற்றும்.

இதனாற் சிவலிங்க வழிபாடு கூறப்பட்டது. இந்த அத்துவித ஞானம் அசத்தாயுள்ள வன்ன பேதங்களைக் கண்டு நீங்குதலாகும் பயனாதலின், அதன் பொருட்டு வழிபாடு வேறு விதித்தமை மிகையாம் எனின், ஆகாதென்று கூறப்படுகின்றது.

(வெ. பொ.) உடம்பிலுள்ள பிராரத்த வாதனை ஆன்மா வுக்குத் தாக்கும் வரையும், அதனால் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவை வாயிலாக எய்தும் பிருதிவி முதல் மாயை யீருகிய மாயேயம் காட்சிப் படுதலும் அது பற்றி உண்டாம் விபரீத ஞானமுமாகிய அசத்துக்கள் நீங்கினாலும், பின் வந்து கூடி மேம்படுவனவாதலான், இவை அனைத்துக்கும் மூலமாகிய பிராரத்த வாசனை பற்றற நீங்கின லன்றி அத்துவித ஞானம் மேம்பட்டு நிகழாதாதலின், அது பற்றறக் கழியும் பொருட்டு மெய்ஞ்ஞானிக்ளை நாடி வழிபடவே, அப் பிராரத்த வினை ஒழிந்து மெய்யுணர்வு மேலோங்கும்; ஆகலான் அன்பினால் அவரை வழிப்டுதல் வேண்டும் என்பதாம். இதனால் சிவ பத்தர் வழிபாடு கூறப்பட்டது.

அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று கண் டொருவிய போது உளதாகும் சிவஞான சொரூபம் நிலைபெறுதல் அந்த அசத்துளதாதற்கு வேராயுள்ள பிராரத்தவினை ஒழிந்த விடத்திலே யாமாதலின், அவ்வினையை வேரறுத்து நிலைபெறச் செய்தற்கு, அங்ஙனம் நிலைபெறுத்திய சிவஞானிகளிடத்து வழிபாடு இன்றியமையாது வேண்டப்படும் என்றவாறாயிற்று.

அப்பிராரத்த வாதனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறும் பொருட்டு சீ பஞ்சாட்சரமும் விதிப்படி உச்சரிக்கற் பாற்றும்; இவ் வுண்மை சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிக்கவி முதலிய வற்றின் ஐந்தெழுத் தருணிலையை இன்புறு நிலைக்குப் பின்னாக அணைந் தோர் தன்மையைச் சார வைத்தோதிய்வாற்றால் உணரப்படும்.

''வேள்வி புரிந்தோன் சுவர்க்க மடைவன்'' எனப் பயன் பற்றி விதிக்கப்படும் வேள்வி முதலியவற்றைப் பயன் விரும்பாமை யாலேனும், பின்னர்ச் செய்து பயன் பெறலாமென்றேனும் ஓரோ விடத்துத் தவிர்த்தல் போல, சிவாசாரியரையும் ஓரோவிடத்து வழி படாது, தவிர்க்கலாமோ எனின், அது கூடாதென்றும், வழிபடாமை குற்றமாய் முடியும் என்றும் கூறப்படுகின்றது.

(வெ பொ.) தன்னுண்மை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த ஆன்மாவுக்குப் பலவற்றானும் அதனுண்மையைத் தெளிவித்து, எத்தனையும் எளிய அந்த ஆன்மா தன்னை அறிந்த விடத்து, முற்றுணர்வு, வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவே பாசங் களினீங்குதல், பேரருளுடைமை முடிவிலாற்றலுடைமை, தன் வயமுடைமை, இயற்கையுணர்வினனாதல், தூயமேனியினனாதல் என்னும் எண் குணங்களால் நிறைந்து தன் வண்ணமாகச் செய் தளித்த பெரியதோருதவியை அதன் பின்னர் மறக்குமாயின், அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம் கழுவப்படுமாறு

போலத் தீர்திறன் உள்ள குற்றமன்றாதலானும், ஞானாசாரியராய் எழுந்தருளிய சிவபிரான் அங்ஙனம் தானாகச் செய்தாலும், இது காறும் தனக்குச் சுதந்தரமின்றி அச்சிவபிரானது உபகாரத்தையின்றி அமையாததாய், அடிமையாகிய ஆன்மா எக்காலமும் அவ்வாறு அடிமையேயாமாதலானும், தானாகச் செய்தளித்த அந்த ஞானாசாரியப் பெரியோனை வழிப்டுதலே அவ்வான்மாவுக்கு வலி ஆகும்.

''ஏஷ ஆத்மாஹதபாப்மா விஜரோ விமிருத்யுர்
விசோகோ விஜிகித்சோ பிபாஸ : சத்யகாம :
சத்ய சங்கல்ப :|

''இந்த ஆன்மா சர்வஞ்ஞத்துவ முதலிய எண் குணங்களை உடையது'' என்று சாந்தோக்கிய சுருதி கூறுகின்றமையானும், இந்த அபகதபாப் மத்துவ முதலியவற்றின் பொருளும், முக்தன் அந்த எண் குணங்களை அடையுமாறும் பிரம சூத்திர சைவ பாடியத்திற் (4. 4. 9) காணப்படலானும்,

ஸர்வஞ்ஞதா திருப்தி ரநாதிபோத : ஸ்வதந்திரதா
நித்ய மலுப்த சக்தி : |
அநந்த சக்திச்ச நிராமயாத்மா விசுத்தேஹ :
சசிவத்வமேதி ||

''சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதி போதம், அலுப்த சத்தி, அனந்த சத்தி, சுவதந்திரத்துவம், நிராமயான்மா, விசுத்த தேகம் என்பவற்றையுடையனாய் அவன் சிவத்தை அடைகின்றான்'' என்று சர்வஞ்ஞானோத்தராகமமும்,

''கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை''

என்று பொதுமறையும், ''சேர்வார் தாமே தானாகச் செயுமவ னுறையுமிடம்'' என்று திராவிட சுருதியும் கூறுமாற்றானும் ஆன்மாவானது சிவனாரது எண் குணங்களால் நிறைதல் பெறப்பட்டது.

இங்ஙனம் சிவாகமங்களிற் கூறப்படும் ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மை என இருவகைப்படுத்தி, பிரமாணவியல் இலக்கணவியல், சாதனவியல், பயனியல் என நான்காக வைத்துப் போதிக்கும் இச்சிவஞானபோத சாத்திரத்தைக் கேட்டற்குரிய அதிகாரி இன்னார் என்று கூறப்படுகின்றது.

(வெ. பொ) தானாகச் செய்தவாற்றாற் சீவன் என்னும் இயல்பினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்த சாரமாகிய சித்தாந்த நெறி உணர்ந்த மாணவகனே! ஆணவம் என்னும் ஒரு மலமுடைய விஞ்ஞானகலர்க்கு முதல்வன் அவர் தம் அறிவின் கணின்று அருட்பார்வையால் நோக்குதலானும், ஆணவம் கன்மம்

என்னும் இருமலமுடைய பிரளயாகலர்க்கு இடபாரூட தேவகுருவாய் முன்னின்று செய்யும் திருநோக்கம், பரிசம், வாக்கு எனப்படும் தீக்கை யானும் பிறவிக்கு ஏதுவாகிய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கு மாகலான், அவரின் வேறாகிய ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலமுடைய சகலர்க்கே அநுபவமுள்ள தேசிகராற் போதிக்கப் படும் இச்சிவஞான போதம் உரியதாம் என்க.

''முன்னமவனுடைய நாமங் கேட்டாள்'' என்றற்றொடக்கத் தேவாரத்திலே, ''தன்னுமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்றாளே'' என்னும் திராவிட சுருதியானும், ''ஓர் மாத்திரை யளவென்பேரிற், குறுகினேன்'' என்னும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானும், முத்திகாலத்திலே சீவன் எண்குணங்களால் நிறைந்த சிவமாதல் பெறப்பட்டது; நாமங் கெடுத்தலும் ஒரு மாத்திரையிற் குறுகலும் சீவன் சிவன் எனப் படுதலாம்.

## பன்னிரண்டாம் சூத்திரத் தொகைப் பொருள்

சிவத்தை அணைந்த முத்தராயினோர்க்குச் சீவன் முத்தி நிலையில் அவர் அறிவும் விழைவும், செயலும், புறத்தே நிகழுங்கால், அவர் அறிவானது மும்மல அழுக்கைச் சிவஞான நீரினாற் கழுவுதலினும், அவரது விழைவு மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடுதலினும், அவரது செயல் அன்பர் திருவேடத்தையும் சிவலிங்கத்தையும் வழி படுதலினும் நிகழும் என்றும், ஏனை இடங்களில் அவரது அறிவு முதலியவை செல்லா என்றும், அங்ஙனம் வழிபடுதல் மல வாசனையைத் தாக்க வொட்டாது தடுத்துச் சிவானந்தத்தை மேன் மேல் வளரச் செய்யும் என்றும் மெய்ஞ்ஞானிகளுக்கு உடம்பு உள்ளளவும் பிராரத்தவினை உளதாகலின், அஃது ஒரோவிடத்து யாதானும் ஓர் சோர்வு கண்டு பயிற்சி பற்றி வந்து நுழைந்து தாக்கு மாயின் தோன்றும் போதே அதனை முறுக வொட்டாது துடைத்து விடல் வேண்டும் என்றும், ஆணவ முதலிய மும்மலங்களும் விபரீத உணர்வைச் செய்வது சமயம் வாய்த்த போதேயாக, அவ பத்த ராயினோர் சமயம் வாய்க்காத போதும் வாய்க்குமாறு செய்து கொண்டு தம்மோடொப்ப விபரீத உணர்விற் செலுத்தியே விடுவராதலின், அம்மலங்களினும் கொடியராகிய அவர் சேர்க்கையை ஒழித்துச் சிவ பத்தரோடு இணங்கின் அவர் சிவானந்த போகத்தை ஐம்புல வேடர் சூறை கொள்ளுமாறு ஊடுருவிச் செல்ல வொட்டாத திண்ணிய வேலியாய் அமர்ந்து, அச்சிவானந்த போகத் தைப் பிறழ வொட்டாது நிறுத்திக்கொள்வாரென்றும், அதனால் உலகியல் உணர்ச்சி தேய்ந்துபோக; சிவாநுபூதி யுணர்வே மேலோங்கி மேம்பட்டு விளங்கும் என்றும், அதுபற்றிப் பிராரத்த வினை அவர்க்குப் புசிப்பாகச் செல்லாதென்றும், அது சார்பாக அவ பத்தர்

சேர்க்கை பற்றறக் கழிந்து விடும் என்றும், சிவபெருமான் சேதா சேதனப் பிரபஞ்சமெங்கும் பாலில் நெய் போல வியாபித்திருப்பினும், சிவனடியார் திருவேடத்தினும், சிவலிங்கத்தினும் தயிரில் நெய் போல விளங்கி நிற்பார் என்றும், சிவனடியாரைச் சிவமெனக் கண்டு வழிபடுதற்கு வேடம், பாவனை, செயல், தன்மை, என்னும் நான்கனுள் ஒன்றே அமையும் என்றும், சிவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கத்தைச் சரியா பாதத்தினரும், கிரியா பாதத்தினரும், யோக பாதத்தினரும், ஞான பாதத்தினருமாகிய நால்வரும் தம்தம் அறிவின் தாரதம்மியத்திற்கேற்றவாறு நான்கு வகையில் வழிபடுவர் என்றும், சிவபிரான் சேதனு சேதனப் பிரபஞ்சம் எங்கும் அபேதமாயும், பேதமாயும், பேதா பேதமாயுமுள்ள நிலையரல்லவாய், அம்மூன்றற்கும் பொதுமையாய்க் கண்ணொளியும் ஆன்ம போதமும் போல அத்துவித நிலைமையினராயிருத்தலின், அவரை அன்பு விளையுமிடத்தில் வழிபட வேண்டும் என்றும், பிராரத்த வாதனை கழியும் பொருட்டுச் சிவலிங்கத்தையும், சிவனடியாரையும், சிவாசாரியரையும் வழிபடல் வேண்டும் என்றும் போதிக்கப்பட்டதாம் என்க.



## இந்நூலைப் பற்றி

சிவஞான போத வசனலங்கார தீபம் எனும் இந்த நூல் காசிவாசி செந்திநாதையரால் 1917-ல் முதன்முதலாக எழுதி வெளியிடப் பெற்றது. பல ஆண்டுகளாக இந்நூல் கிடையாமல் இருந்து வந்துள்ளது. ஏறத்தாழ எண்பது ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது புதிய பதிப்பாக வெளியிடப் பெறுகிறது.

சிவஞான மாபாடியம் அச்சில் வெளிவருவதற்கு முன்பு தமிழ் உரைநடையில் இந்நூல் முதன்முதலாக வெளியிடப் பெற்று ஓர் அரிய தேவையை நிறைவு செய்தது. சைவ சித்தாந்தம் பயில்வோர்க்கு உறுதுணையாக விளங்கக் கூடிய சிறப்பினை உடையது இந்நூல்.

---

## கையிருப்பு நூல்கள்

| | | விலை |
|---|---|---|
| 1) | சிவஞான மாபாடியம் | 260 00 |
| 2) | சிவஞான போதம் வழித்துணை விளக்கம் | 60 00 |
| 3) | சிவஞான போத வசனலங்கார தீபம் | 40 00 |
| 4) | சிவஞான சித்தியார் (பரபக்கமும் சுபக்கமும்) | 60 00 |
| 5) | மெய்கண்ட நூல்களுள் ஏழு (இருபா இருபஃது, வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்) | 40 00 |

---

**S. சிதம்பரநாத கல்யாணி**
78, செல்வி நகர்
சிந்துபூந்துறை
திருநெல்வேலி-627 001.